E-mail : omsakthieditorial@gmail.com


# ஓம் சக்தி

டிசம்பர் 2018
விலை ரூ.15

நிறுவனர் :
நா. மகாலிங்கம்




## ஷீரடி சாய் பாபா

# கு ம ர கு ரு

பொறியியற் கல்லூரி | வணிக மேலாண்மைப் பள்ளி | வேளாண்மைக் கல்லூரி
பன்முகக் கலை அறிவியல் கல்லூரி | சக்தி மேம்பாட்டுக் கல்வி மையம்

**ஒழுக்கமே வாழ்வு**



*"கல்வியைப் போலவே தொழில்களும் கடவுளுக்குச் சமமானவை. படிக்கும் காலத்திலேயே தொழிலுக்கான பயிற்சியை மாணவர்கள் பெறவேண்டும்."*

***அருட்செல்வர் டாக்டர்.நா.மகாலிங்கம்***






## குமரகுரு பன்முக கலை அறிவியல் கல்லூரி

அடிப்படை அறிவியலிலிருந்து சமூக அறிவியல் வரையும், இலக்கியத்திலிருந்து நுண்கலைவரையும் அனைத்தையும் வழங்கி, சமூக முன்னேற்றத்திற்கான ஆய்வுகளை முன்னெடுத்து, வாழ்நாள் முழுதும் கற்றலில் ஆர்வம் கொண்டு, உலகியலின் போக்கில் தாக்கத்தை ஏற்படுத்தும் தனியாத ஆர்வம் கொண்ட இளைஞர்களை உருவாக்கும் கல்வி நிறுவனம்.




## குமரகுரு தொழில்நுட்பக் கல்லூரி

150 ஏக்கர் வளாகத்தில் 6000 மாணவர்களுடனும் 400 பேராசிரியர்களுடனும் 34 ஆண்டுகளாக 'ஒழுக்கமே வாழ்வு' எனும் உயர் குறிக்கோளுடன், ஆராய்ச்சியையும் தொழில் இணைவையும் அடிப்படையாகக் கொண்டு தேசிய தர வரிசையில் முதல் நூறு நிறுவனங்களில் ஒன்றாகத் திகழ்கிறது.




## கே.சி.டி. வணிக மேலாண்மைப் பள்ளி

தொழிலகங்கள் மற்றும் சமூகத்தின் முன்னேற்றத்தில் முனைப்புடன் செயல்படும் இளைய தலைமுறைக்கான தலைவர்களை உருவாக்கும் இந்தியாவின் முதல் 100 நிறுவனங்களில் ஒன்றாகும் கல்வி, மனித வளம், மாணவர்கள் சேவை, ஐ.டி. தொழில்நுட்பம், தொழிலிணைவு, சமூக பங்களிப்பு போன்றவைகளில் மிகுந்த ஈடுபாட்டுடன் செயல்படும் இணையற்ற நிறுவனம்.




## குமரகுரு வேளாண்மைக் கல்லூரி

தொழில்நுட்பம் மூலமாக வேளாண்மை உற்பத்தியைப் பெருக்கி, வேளாண்மையைத் தற்சார்புத் தொழிலாக மாற்றுவதற்குரிய வேளாண்மைக் கல்வியை, கிராமப்புற மாணவர்களுக்கு வழங்குவதை நோக்கமாகக் கொண்ட நிறுவனம்.

## ஆராய்ச்சி அமைப்புக்கள்

**மாணவர் ஆராய்ச்சிகள்**




GARAGE




**தொழிலக ஆராய்ச்சிகள்**










**போர்ஜ்**

கே.சி.டி.யின் ஒர் அங்கமான 'போர்ஜ்' வளர்ந்து வரும் நவீனத் தொழில்நுட்பத்தையும், கணினி அறிவியலையும் இணைத்து ரோபோட் தானியங்கிஇயந்திரங்களையும் செயற்கை அறிவூட்டல் கருவிகளையும், டிஜிட்டல் வணிகத்தையும் வளர்த்தெடுத்துப் பல்வேறு தொழில் துறைகளிலும் இந்த நுண்ணறிவுப் பயன்பாட்டைக் கொண்டுசெல்லும் நோக்கில் செயல்படுகிறது.

குமரகுரு கல்வி வளாகம்
சரவணம்பட்டி
கோயம்புத்தூர்
**0422 2661100**
**kct.ac.in**
**kctbs.ac.in**
**kclas.ac.in**
**kia.ac.in**





டாக்டர் நா. மகாலிங்கம்

சுரங்கம்

# நீர்வழித் தடங்கள் நிறையத் தேவை

சென்ற நவம்பர் 12-ஆம் தேதி உள்நாட்டு நீர்வழிச்சாலையைப் பிரதமர் நரேந்திரமோடி நாட்டிற்கு அர்ப்பணித்த நாளாகும். மேற்கு வங்க மாநிலம் ஹால்டியாவிலிருந்து வாரணாசிக்குச் சரக்குக் கப்பல் போக்குவரத்து வழித்தடத்தில் முதல் சரக்குக் கப்பல் வாரணாசி வருவதை வரவேற்றார். ரூ. 5 ஆயிரத்து 369 கோடி செலவில் இத்திட்டம் உருவாகியுள்ளது.

நீர்வழிச்சாலையைப் பற்றி 10 ஆண்டுகளுக்கு முன்பே அருட்செல்வர் சிந்தனையில் தோன்றிய கருத்து, இன்றைக்கு ஓரளவிற்கு நிறைவேறியுள்ளது. அதனை நினைவுபடுத்தும் வகையில் இம்மாத 'சுரங்கம்' பகுதியில் இக்கட்டுரை வெளியாகிறது.

– இ.ஆர்.

தேசியப் போக்குவரத்தில் சாலைப் போக்குவரத்து, ரயில் போக்குவரத்து, விமானப் போக்குவரத்து ஆகியவை நம் நாட்டில் பயன்பாட்டில் இருந்து வருகின்றன.

சாலைப் போக்குவரத்தும், ரயில் போக்குவரத்தும் உள்நாட்டு அளவில் உள்ளன. விமானப் போக்குவரத்து உள்நாட்டு அளவிலும், வெளிநாட்டு அளவிலும் செயல்பட்டு வருகின்றது.

இம்மூன்று போக்குவரத்துகளுடன் நீர்வழிப் போக்குவரத்தும் இந்தியாவைப் பொறுத்த அளவுக்குச் சில மாநிலங்களில் சிறப்பாகச் செயல்பட்டு வருகின்றது. பல மாநிலங்களில் இதைப் பற்றி அரசுகள் கவனம் செலுத்தவில்லை.

இந்த 21–ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே நாம் சந்தித்துக் கொண்டிருக்கிற மிகப் பெரிய எரியும் பிரச்சனை பெட்ரோலியம், டீசல் ஆகியவற்றைத் தருகிற கச்சா எண்ணெய்ப் பிரச்சனைதான்.

பெட்ரோல் – டீசலைக் குறைந்த அளவில் உபயோகப்படுத்திக் கொள்ள நீர்வழிப் போக்குவரத்து உதவும்.

நமது நாட்டில் நீர்வழிப் போக்குவரத்து செயலில் உள்ள தூரம் ஏறக்குறைய 15 ஆயிரம் கி.மீ.தான். இதிலும் சுமார் 5700 கி.மீ. தூரத்திற்கு மட்டுமே சிறு கப்பல்கள் செல்வதற்கான ஆழமும் அகலமும் கொண்ட நீர்வழிச்சாலைகள் உள்ளன.

மீதமுள்ள 10 ஆயிரம் கி.மீ. தூர நீர்வழிகள் கால்வாய்களாக, வாய்க்கால்களாக, ஆறுகளாக மட்டுமே உள்ளன. இவற்றில் சரக்குகளுக்கும் பயணிகளுக்குமான துடுப்புப் படகுகள், விசைப் படகுகள்தான் சென்று வருகின்றன.

நமது நாட்டிலுள்ள வாகனப் போக்குவரத்துக்கான சாலைகளின் மொத்த தூரம்தான் 33 லட்சம் கி.மீ. என வளர்ந்துள்ளது. அதேசமயம் ரயில் போக்குவரத்தின் மொத்த தூரம் சுமார் 64 ஆயிரம் கி.மீ. மட்டுமே.

நமது நாட்டில் ரயில் போக்குவரத்தின் மூலமாக 40 சதவிகிதமும் சாலைப் போக்குவரத்தின் மூலம் 60 சதவிகிதமும் சரக்குகள் கொண்டு செல்லப்படுகின்றன. பயணிகள் போக்குவரத்து, சாலைகளின் வழியாக 80 சதவிகிதமும், ரயில்களின் வழியாக 20 சதவிகிதமாகவும் உள்ளன.

259 தேசிய நெடுஞ்சாலைகள் நமது தேசத்தில் பயன்பாட்டில் உள்ளன. என்.எச். 47 டெல்லியில் தொடங்கி, கன்னியாகுமரிக் கடல் வரை இருக்கிறது. இதுபோன்ற தேசிய நெடுஞ்சாலைகள் நமது நாட்டில் 52 ஆயிரம் கி.மீ. தொலைவிற்கு அமைக்கப்பட்டுள்ளன.

இவையல்லாமல், சுமார் 30 லட்சம் கி.மீ. சாலைகள் மாநில அரசாலும், நகராட்சிகளாலும், பஞ்சாயத்துகளாலும் உருவாக்கப்பட்டு நாடு முழுவதிலும் பராமரிக்கப்பட்டு வருகின்றன.

புதிய சாலைகளைப் போடுவதற்கும், பழைய

சாலைகளைப் பராமரிப்பதற்கும் ஆண்டுதோறும் பல்லாயிரம் கோடி ரூபாய் செலவாகி வருகின்றது. இதைத் தவிர்க்கவும் முடியாது, குறைக்கவும் முடியாது.

சாலைகள் சிறப்பாக அமைக்கப்பட்டால்தான் வாகனங்கள் சீரான வேகத்தில் செல்ல வசதி ஏற்படும். அப்போதுதான் பெட்ரோல் – டீசல் உப யோகமும் குறையும். சாலைகள் சரிவரப் பராமரிக் கப்படவில்லையானால், குறைந்த வேகத்தில் செல்லும் வாகனங் களுக்குப் பெட்ரோல் – டீசல் அதிகம் செலவாகும்.

பெட்ரோல் – டீசல் உற்பத்தி செய்வதற்கான கச்சா எண் ணெய் இறக்குமதிக்கு ஆண்டு தோறும் நமக்கு ரூ. 2 லட்சம் கோடி செலவாகிறது. நமது மத்திய அரசின் மொத்த வரி வருமானமே ரூபாய் 8 லட்சம் கோடிதான். அதில் 4–இல் ஒரு பங்கு கச்சா எண்ணெய் இறக்கு மதிக்கே செலவாகிறது.

இந்தச் சூழ்நிலையில் தேசிய அளவில் நீர்வழிப் போக்குவரத்தையும் அபிவிருத்தி செய்வோமானால், நெடுஞ்சாலைகளில் செல்கிற வாகனங்களின் எண்ணிக்கையைக் கணிசமாகக் குறைக்க முடியும். அதன் காரணமாக, அச்சாலை களின் தேய்மானம் தள்ளிப்போடப்படும்.

அதுமட்டுமல்ல, வாகனங்கள் குறைவாகச் செல்வதால், குறைந்த அளவு வாகனங்களின் டயர்கள்தான் தேய்மானம் அடையும்.

இந்தியாவின் வடகிழக்கு எல்லைப்பகுதியில் உள்ள அசாம் மாநிலத்தில் ரயில், சாலை, விமானப் போக்குவரத்துகளும், நீர்வழிப் போக்குவரத்தும் சிறப்பாகச் செயல்பட்டு வருகின்றன.

பிரம்மபுத்திரா நதி மற்றும் பராக் நதி இவை இரண்டிலும் நீர்வழிப் போக்குவரத்தை வர்த்தக ரீதியில் அசாம் அரசு நடத்தி வருகிறது. சரக்கு களுக்கும், பயணிகளுக்கும் இது அதிகமாகப் பயன்படுகிறது.

அசாமுக்குள் பல ஊர்களுக்கு நீர்வழிப் போக்குவரத்தின் மூலமாகத்தான் பயணிகள் போகிறார்கள். உள்ளூரில் பல இடங்களுக்குச் சாலைப் போக்குவரத்து இல்லை. அசாமிலிருந்து கொல்கத்தா வரை பயணிக்கும் அளவுக்கும், பக் கத்திலுள்ள பங்களாதேஷுக்கும் நீர்வழிப் போக்கு வரத்தின் மூலமாகவே போய்வரலாம்.

இந்தியாவில் நீர்வழிப் போக்குவரத்து அதிகம் உள்ள மற்றொரு மாநிலம் கேரளம். மாநில அரசே இப்போக்குவரத்தை நடத்துகிறது. திருவாங்கூர் – கொச்சி பிரதேசத்திற்குள் மட்டும் இந்த நீர்வழிப் போக்குவரத்தின் தூரம் சுமார் 2 ஆயிரம் கி.மீ. ஆகும். இதில் இயற்கையான ஆறுகளும் உண்டு. அரசு வெட்டிய கால்வாய்களும் உண்டு.

கேரளாவிலுள்ள 44 ஆறுகளில் மேற்கு நோக் கிப் பாயும் 41 ஆறுகள் இந்தக் கால்வாய்களுடன் சேர்ந்து நீர்வழிப் போக்குவரத்தைச் சிறப்பாகச் செயல்பட உதவி செய்திருக்கின்றன. இந்த நீர் வழிப் போக்குவரத்தில் தினசரி 80 ஆயிரம் மக்கள், சராசரியாக 79 ஆயிரம் கி.மீ. தூரம் சென்று வருகிறார்கள்.



மேற்கு வங்க மாநிலம் ஹால்தியாவிலிருந்து வாரணாசிக்குக் கங்கை ஆற்றில் தொடங்கப்பட்டுள்ள சரக்குக் கப்பல் போக்குவரத்து.

கேரளாவில் உள்ள நீர்வழிப் போக்குவரத்தில் கட்டணம் குறைவு. விபத்துகளும் அதிகமில்லை.

இதுமட்டுமல்ல. ஜெர்மனியின் ரைன் நதியில் உள்ள போக்குவரத்து ஓர் அதிசயம். ஜெர்மனி யின் முக்கியமான நீர்வழித்துறையாக இந்த ரைன் நதி உள்ளது. அதைப் பார்த்த பிறகுதான் நீர்வழிப் போக்குவரத்தைத் தமிழ்நாட்டிலுள்ள காவிரியில் செய்ய வேண்டும் என்ற கருத்துருவும் என் மனதில் ஏற்பட்டது.

ரைன் நதியின் நீளம் 1320 கி.மீ. எப்போதும் அதில் தண்ணீர் நிரம்பி ஓடுவதில்லை. மழைக் காலங்களில் மட்டும் 70 கன மீட்டர் தண்ணீர் ஓடும். போக்குவரத்திற்கு வசதியாக ரைன் ஆற் றில் எப்போதும் 40 அடி ஆழத்திற்குத் தண்ணீர் நிற்குமாறு ஜெர்மனி அரசு பராமரித்து வருகிறது.

1320 கி.மீ. தூரமுள்ள இந்த அகலமான நதியில் விசைப்படகுகள், சிறு சிறு சரக்குக் கப்பல்கள், பயணக் கப்பல்கள் ஏராளமான பயணி களையும், சரக்குகளையும் ஏற்றிக்கொண்டு, சென்னை – கொச்சி சாலைகளில் செல்லும்



நாட்டின் முதலாவது உள்நாட்டு நீர்வழி முனையத்தை பிரதமர் நரேந்திர மோடி தொடங்கிவைத்த காட்சி. உடன் உ.பி. முதல்வர் யோகி ஆதித்யநாத், மத்திய அமைச்சர் நிதின் கட்கரி ஆகியோர்.

லாரிகளைப் போலச் சென்று கொண்டிருப்பதைப் பார்த்து வியந்தேன்.

போக்குவரத்திற்கு இந்த நதி வசதியாக அமைக்கப்பட்டிருப்பதால், இந்த நதியின் இரு கரைகளிலும் ஏராளமான தொழிற்சாலைகள் உருவாகியுள்ளன. இந்த நதி ஜெர்மனிக்குள் ஓடி, பிரான்ஸ், சுவிட்சர்லாந்து, நெதர்லாந்து, ஹாலந்து, லக்சம்பர்க் வரைக்கும் செல்கிறது.

அதனால், இந்த ரைன் நதி சர்வதேச முக்கியத்துவம் வாய்ந்ததாக வளர்ந்துள்ளது. ஏறக்குறைய 10 கோடி மக்களின் வாழ்விடங்களுக்கு ஊடே செல்கிறது.

இந்தியாவில் தேசிய நீர்வழிகளாக கங்கா, பிரம்மபுத்திரா, மூன்றாவதாக மேற்குக் கடற்கரை நீர்வழிச்சாலை என ஏற்கனவே மூன்று உள்ளன.

புதிதாக 2 நீர்வழிச் சாலைகள் உருவாகி வருகின்றன. ஆந்திர அரசு காக்கிநாடாவைத் தமிழ்நாடு வழியாகப் பாண்டிச்சேரி வரை கிருஷ்ணா, கோதாவரி நதிகளின் மூலம் இணைக்கத் திட்டமிட்டு வருகிறது.

இரண்டாவது புதிய நீர்வழிப் போக்குவரத்து அசாமிலுள்ள பிரம்மபுத்திரா நதியின் மூலம் ஹால்டியா – கொல்கத்தா துறைமுகங்களை இணைப்பதாகும்.

நீர்வழிப் போக்குவரத்தால் ஒரிசாவையும், மேற்கு வங்காளத்தையும் இணைப்பதற்கான திட்டமும் அரசிடம் உள்ளது.

திட்டமிடப்பட்டுள்ள இந்த மூன்று புதிய நீர்வழிப் போக்குவரத்தினால் அசாம், பீகார், ஜார்க்கண்ட், கேரளா, உத்தரப்பிரதேசம், மேற்கு வங்காளம் ஆகிய மாநிலங்கள் நீர்வழிப் போக்குவரத்து வசதியைப் பெறும்.

இதேபோல நர்மதா நதியை நீர்வழிப் போக்குவரத்திற்காக அபிவிருத்தி செய்தால், மத்தியப் பிரதேசத்தையும், குஜராத்தையும் இணைக்க முடியும்.

10 அடி ஆழத்திற்குத் தண்ணீரைத் தேக்கி வைக்கும் ஏற்பாட்டைச் செய்தாலே போதும். பாட்னா, பகல்பூர், வாரணாசி, அலகாபாத், ஹால்டியா ஆகியவற்றிற்கு இடையில் 1000 கி.மீ. தூரத்திற்கு நீர்வழிப் போக்குவரத்து வசதியை உருவாக்க முடியும் என்று இந்திய உள்நாட்டு நீர் வழிப் போக்குவரத்து ஆணையம் திட்டமிட்டுள்ளது.

நீர்வழிப் போக்குவரத்துத் திட்டத்திற்கு அரசே செலவழிக்க வேண்டுமென்ற அவசியமில்லை. தனியார் துறையிலும் இதன் கட்டுமானப் பணிகளை விடலாம். BOT (Build - Operate - Transfer) முறையில் அபிவிருத்தி செய்யத் தனியார் துறையை அழைக்கலாம். ஏற்கெனவே சாலைப் போக்குவரத்தில் எல். அண்ட் டி. நிறுவனம் இவ்வாறு செயல்பட்டு வருகிறது.

பவானி ஆற்றில் படகுகளிலும், பரிசல்களிலும் செல்கிற அளவுக்கு மட்டும்தான் நமது நீர்வழிப் போக்குவரத்து உள்ளது.

தமிழக அரசு உள்ளூர் ஆறுகளை 534 கோடி ரூபாய் செலவில் இரண்டு கட்டங்களாக இணைக்கத் திட்டமிட்டுள்ளது. காவிரியில் மழை வெள்ளம் ஏற்பட்டால், அத்தண்ணீரைக் கொள்ளிடம் வழியாகக் கடலுக்குத் திறந்து விடுவதுதான் வழக்கம்.

காவிரி ஆற்றின் வெள்ளத்தை நெப்பிலி ஆறு, கோரை ஆறு, அக்கினி ஆறு, பாம்பாறு, விருசுழி ஆறு, மணிமுத்து ஆறு, வைகை ஆறு, குண்டாறு என 9 தென் மாவட்டங்களோடு இணைப்பதற்கான ஆய்வு செய்யப்பட்டுள்ளது. இதற்கான திட்டச் செலவு ரூ. 295 கோடி. இதன் மொத்த தூரம் 255 கி.மீ. ஆகும்.

இது அல்லாமல், இரண்டாம் திட்டமான தாமிரபரணியில் ஏற்படும் வெள்ள உபரி நீரைக் கருமேனி ஆறு – நம்பி ஆறு வரை ரூ. 369 கோடி செலவில் இணைக்கும் திட்டத்தையும் தமிழக அரசு மேற்கொள்ள இருக்கிறது.

**இத்திட்டங்கள் நிறைவேறுமானால், அவற்றைப் பாசன நீருக்காக மட்டும் பயன்படுத்திக் கொள்ளாமல், நீர்வழிப் போக்குவரத்திற்காகவும் பயன்படுத்தலாம்.** அவ்வாறு செய்தால், தமிழ்நாட்டின் சாலைப் போக்குவரத்தில் வாகன நெரிசல் குறையும், விபத்துக்கள் குறையும். சாலைகளின் பராமரிப்புச் செலவும் குறையும்.



ரைன் நதியில் படகுப் போக்குவரத்து



நீர்வழிப் போக்குவரத்து வசதியைச் செய்வதற்கு நீரைத் தேக்கி வைப்பதைத் தவிர, வேறு எதுவும் செய்யத் தேவையில்லை.

நீர்வழிப் போக்குவரத்து நமக்குப் புதிதல்ல. பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்திலேயே இங்கே நீர்வழிப் போக்குவரத்து இருந்து வந்துள்ளது.

150 ஆண்டுகளுக்கு முன்பு நம் நாட்டை ஆண்ட ஆங்கிலேய அரசு இங்கே ரயில் பாதைகள் அமைக்கத் தொடங்கியபோது, அன்றைக்கு இருந்த பொறியியல் மேதை சர். ஆர்தர் காட்டன், "ரயில் பாதைகளைவிட, நீர்வழித் தடங்கள் சிறந்தவை, சிக்கனமானவை. இங்கிருக்கும் நதிகளை இணைத்தால் நீர்வழித் தடங்களை உருவாக்கி விடலாம்" என்ற யோசனையை பிரிட்டிஷ் அரசுக்குத் தெரிவித்தார்.

லண்டனில் இருந்த கிழக்கிந்தியக் கம்பெனி டைரக்டர்கள் இதனை ஏற்றுக் கொள்ளவில்லை. காரணம், ரயில் பாதைகளை அமைப்பது பிரிட்டிசாருக்கு லாபம் தருவதாக இருந்தது. அதனால்தான் நீர்வழிப் போக்குவரத்து தமிழ்நாட்டில் வளரவில்லை.

இப்போது, மத்திய அரசில் உள்நாட்டு நீர்வழி ஆணையம் இயங்கி வருகிறது. இது கங்கை, பிரம்மபுத்திரா, பராக் ஆகிய நதிகளையும், கோதாவரி, கிருஷ்ணா நதிகளையும், கேரள நதிகளையும் நீர்வழிப் போக்குவரத்திற்காக அபிவிருத்தி செய்து வருவதுபோல், தமிழ்நாட்டின் காவிரி நதியிலும் கவனம் செலுத்தலாம்.

சென்னையில் உள்ள பக்கிங்ஹாம் கால்வாய் சாக்கடைத் தேக்கமாகவே மாறிவிட்டது. ஒரு காலத்தில் அது நீர்வழிப் போக்குவரத்தாக இருந்துள்ளது. அதற்கு மறு உயிர் தரலாம்.

சென்னையிலிருந்து மகாபலிபுரத்திற்குப் படகிலேயே பயணம் செய்யக்கூடிய வசதி அந்நாட்களில் இருந்துள்ளது. கவிஞர் பாரதிதாசனும் தமிழறிஞர்கள் சிலரும் அவ்விதம் பௌர்ணமி இரவு ஒன்றில் மகாபலிபுரத்திற்குப் படகில் உல்லாசப் பயணம் செய்தது குறித்து, பாரதிதாசன் ஒரு கவிதையே பாடியிருக்கிறார்.

நான் கேள்விப்பட்ட மற்றுமொரு செய்தி, தற்காலத்தில் சாக்கடை ஆறாக மாறிவிட்ட கூவம் நதி, ஒரு காலத்தில் நந்நீர் ஓடும் நதியாகத் திகழ்ந்திருக்கிறது. வள்ளலார் காலத்தில், சென்னை வாசிகள் கூவத்தில் நீராடி மகிழ்ந்திருக்கிறார்கள். அதன் கரைமீது அமர்ந்து சிவநேசச் செல்வர்கள் பூசைகள் செய்துள்ளனர்.

இன்றைய தருணத்தில் நமது காவிரி நதியை நீர்வழிப் போக்குவரத்திற்கு உரியதாகவும் மாற்றுவது அவசியம். இந்நதியிலிருந்து 26 கிளைகள் பிரிந்து கடலில் கலக்கின்றன. ஒவ்வொரு கிளை நதியிலும் 'வால் இறுதிக் கதவணை' (Tail End Regulator) உள்ளது. இந்தக் கதவணைகள் கடலுக்கு 5 கி.மீ. தூரத்திற்கு முன்பு வரை அமைக்கப்பட்டுள்ளன. இவ்வாறு கதவணைகளை அமைத்துத் தேக்கப்படும் நீரில், நாகப்பட்டினத்திலிருந்து கொள்ளிடம் வரையிலும் சமச்சீரான கால்வாய் ஒன்றை 80 கி.மீ. அளவுக்கு அமைக்கலாம்.

கொள்ளிடம் நதி கடலில் கலக்கும் இடத்திலிருந்து அணைக்கரை ஆற்றின் தென்கரையினை ஒட்டி 60 கி.மீ. தூரத்திற்கு ஒரு கால்வாய் அமைக்கலாம். இவற்றை நீர்வழிப் போக்குவரத்துக்குப் பயன்படுத்தலாம்.

கீழ்க் கொள்ளிட அணையின் நீர்மட்டம் + 30 அடி. முக்கொம்பில் காவிரியும் கொள்ளிடமும் பிரியும் இடத்திலுள்ள மேல் அணை நீர்மட்டம் + 234 அடி. இவ்விரண்டிற்கும் இடையில் உள்ள தூரம் 106 கி.மீ. இந்தப் பகுதியில் 8 கதவணைகள் கட்டி ஒவ்வொன்றிலும் 'லாக்' அமைக்க வேண்டும்.

'லாக்' என்பது ஒரு கப்பலைத் தாழ் நீர்மட்டத்திலிருந்து மேல் நீர்மட்டத்திற்கு உயர்த்துவதற்கும், மேல் நீர் மட்டத்திலிருந்து கீழ் மட்டத்திற்கு இறக்குவதற்கும் பயன்படும் பொறியியல் கட்டமைப்பு.

'லாக்கு'கள் அமைத்துத் தண்ணீரைத் தேக்கினால், நாகைத் துறைமுகத்திலிருந்து மேட்டூர் வரை 536 கி.மீ. தூரத்திற்குக் கப்பல்களே செல்லலாம். சூயஸ் கால்வாயிலும், பனாமா கால்வாயிலும் இந்த 'லாக்கு'கள் உள்ளன.

மேட்டூரில் காவிரி ஆற்றின் மட்டம் + 650 அடி. மேல் அணையின் மட்டம் + 234 அடி. மேட்டூருக்கும் மேல் அணைக்கும் இடையே உள்ள தூரம் 240 கி.மீ.

இந்த இடைவெளியில் 10 கதவணைகள் கட்டி மின்சக்தியை உற்பத்தி செய்யலாமென்று 1964–ஆம் ஆண்டே சட்டசபையில் நான் பேசியிருக்கிறேன். எனது ஆலோசனை ஓரளவுக்கு நிறைவேறியுள்ளது. இதனை நீர்வழிப் போக்குவரத்திற்கும் பயன்படுத்தத் திட்டமிடலாம்.

மத்திய அரசின் உள்நாட்டு நீர்வழி ஆணையம் காவிரி நதியை ரைன் நதி போல நீர்வழிப் போக்குவரத்திற்கு உரியதாகச் செய்யத் திட்டமிட வேண்டும். ●


சீரடி
சாய் பாபா

அட்டைப்படக் கட்டுரை

# சீரடியில் சமாதிக் கோயில்

சமாதிகளைக் கோயில்களாக வழிபடுகிற வழக்கம் இசுலாமிய சமயத்தில் இல்லை. கிறிஸ்தவ சமயத்தில் ‘கல்லறை நாள்’ என்று முன்னோர்கள் அடக்கம் செய்யப்பட்ட இடங்களில் வருடா வருடம் வழிபாடு செய்கிறார்கள். இந்து சமயத்தில் இறந்தவர்களைத் தெய்வமாக வழிபடும் மரபு தொடர்கிறது. அதேசமயம் பழனிமலை முருகன் கோவில், திருப்பதிக் கோவில், மருதமலைக் கோவில்களில் சித்தர்கள் சமாதிகள் உள்ளதாகக் கூறப்படுகின்றன.

போகர் என்ற சித்தர்தான் முருகன் சிலையை நவபாஷாணத்தால் உருவாக்கியதாகவும், அச்சிலையில் வழிபாடு செய்யப்படும் அபிஷேகம் அனைத்தும் அச்சிலையில் உள்ள 9 விதமான நவபாஷாணங்களோடு கலந்து தீர்த்தமாகத் தரப்படுகிறது. அதனை அருந்துபவர்களின் நோய் குணமாவதோடு, இழந்த ஆரோக்கியத்தைப் பெறுவதாகவும் நம்பப்படுகிறது.

போகர் சமாதிபோல, திருப்பதியில் கொங்கணர் சமாதி, மருதமலையில் பாம்பாட்டிச்சித்தர் சமாதி முதலிய சமாதிகள் ஆலயங்களிலேயே உள்ளன. இப்படிச் சமாதிகள் உள்ள கோயில்கள் மிகவும் சக்தி வாய்ந்தவை.

மராட்டிய மாநிலத்தில் அகமத் நகரில் உள்ள ஸ்ரீர்டி (சீரடி) சாயிபாபா சன்ஸ்தான் என்கிற கோவில் வித்தியாசமானது. அங்கு சாயிபாபாவின் சமாதிதான் உள்ளது. அதற்குத்தான் வழிபாடு நடைபெறுகிறது. அப்பகுதி தங்கத் தகடுகள் பதிக்கப்பட்ட மண்டபமாகத் திகழ்கிறது. அங்குள்ள தூண்களும் தங்கமாக ஜொலிக்கின்றன. அங்கு சென்று பாபாவின் பாதங்களைத் தொட்டு வணங்கலாம். தங்கப் பாதங்கள் சமாதியில் தனியாக உள்ளன.

பக்தர்கள் நின்று கொண்டிருக்கும் மண்டபத்தில் கூட்டம் நெருக்கமாகவே இருக்கிறது. பஜனைப் பாடல்கள் ஒலித்துக்கொண்டே இருக்கின்றன. பக்தர்கள் மெய்மறந்து அப்பாடல் ஓசையில் மூழ்கிப் போகிறார்கள். அப்பாடல் மராட்டிய மொழிப் பாடலா, சமஸ்கிருதப் பாடலா எனப் புரிந்து கொள்ள முடியவில்லை.

சமாதிக்கு முன்பு நடக்கும் காலை 11 மணிப் பூசையில் கட்டுக்கடங்காத கூட்டம். இரவு 9 மணிப் பூசையில் சிவப்பு உடையணிந்த ஆராதனைக்காரர்கள் தங்கள் கைகளில் செங்கோல் போல அழகான கோல்களை வைத்துக்கொண்டு அவற்றை உருட்டி ஓசைப்படுத்துகிறார்கள். அப்போது சமாதியில் தீபாராதனை நிகழ்ந்து கொண்டிருக்கிறது.

ஆராதனைக்குப்பிறகு பக்தர் கூட்டம் நெருக்கிக் கொண்டு சமாதியை நெருங்கி வழிபாடு செய்துவிட்டு வெளிவருகிறார்கள்.

மூத்த குடிமக்களுக்குத் தனி அனுமதி தரப்படுவதால், வயதானவர்கள் சற்றுச் சுலபமாக 1 மணி நேரத்தில் வழிபாடு செய்ய முடிகிறது. சிறப்புக் கட்டணச் சீட்டு வாங்கி வருபவர்களும் உண்டு.

பாபாவின் சலவைக்கல் சிலை தத்ரூபமாகக்

காட்சி தருகிறது. அதன்கீழ்தான் சரியாக 100 ஆண்டுகளுக்கு முன்பு **1918-இல்** சமாதியான பாபாவின் தெய்வ உடல் அடக்கம் செய்யப்பட்டுள்ளது. தற்போது 2018-இல் அச்சமாதியின் 100-ஆவது ஆண்டு தினத்தைச் சிறப்பிக்க பாரதப்பிரதமர் மோடி வந்து சென்றது ஒரு வரலாற்றுப் பதிவாகியுள்ளது.



பொன் தகடுகளால் வேய்ந்த பாபா சமாதி

யார் இவர்? ஹிந்துவா? முஸ்லீமா? இப்படி ஒரு சர்ச்சை முடிவற்று நீடிக்கிறது. அவருடைய உருவத்தைப் பார்த்தால், அவரை ஒரு பக்கீர் (Fakir) எனலாம். பக்கீர் என்றால், புனித யாசகர் – பிச்சைக்காரர்.

பிச்சை வேறு, பிட்சை வேறு. பிட்சாண்டவர் பற்றியும், பிட்சாந்தேகி பற்றியும் பேசுகிற ஹிந்து சாஸ்திரங்கள் ஞானிகளுடையது பிட்சை. பிச்சை அல்ல.

பாபா பக்தர்களின் முழக்கங்களில் **ஓம் சாய் நமோ நம, ஜெய் ஜெய் சாய் நமோ நம** என்கிற மந்திரவார்த்தைகள் மண்டபம் முழுவதும் சுவாச மூச்சோடு சேர்ந்து ஒலித்துக்கொண்டே இருக்கின்றன.

2018-ஆம் ஆண்டு அக்டோபர் 19-இல் சமாதி மந்திர் எனப்படும் சாயிநாதரின் சமாதிக் கோயிலின் நூற்றாண்டை பாரதக் குடியரசுத் தலைவர் மேதகு ராம்நாத் கோவிந்த் தொடங்கி வைத்தார்.

இங்கே சமாதியான பாபா அங்கு இருந்த போது சீரடி ஒரு குக்கிராமத்தையும் விடக் குறுகிய சிறிய ஊராக மட்டுமே இருந்துள்ளது. அங்கிருந்த ஒரு வேப்பமரத்தின் நிழலில் உட்கார்ந்துள்ளார். அங்கிருந்த தொழுகை இல்லாத ஒரு மசூதியில் தங்கியிருந்துள்ளார். அவர் கையிலிருந்த தட்டில் கிடக்கும் உணவைத் தெருநாய்களும் சாப்பிடும். சிலர் அதில் பிச்சைக் காசுகளைப் போடுவார்கள். வேறு சிலர் இவரைக் கல்லால் அடித்து விரட்டியும் இருக்கிறார்கள்.



பாபாவை பாமரர்களே சந்தித்தனர்

ஆனாலும், பாபா அவற்றைச் சகித்துக் கொண்டு தன்னைக் காண வருபவர்களின் உடல் வியாதிகளையும் மன நோய்களையும் குணப்படுத்தியிருக்கிறார்.

பாபாவின் அதிசயச் செயல்கள் அவரைப் பாமர மக்கள் மத்தியில் பிரபலப்படுத்தி வந்தன. 'ரேஸ்மி தேஷ்பாண்டே' என்ற பெண்மணி எல்லோராவுக்குப் போனபோது, பாபா தன்னை சீரடிக்கு வருமாறு அழைத்ததைக் கேட்டு அங்கு வந்ததாகவும், அவருடைய கணவருக்கு வந்த வேலை மாறுதல் உத்தரவுகள் மூன்று முறை ரத்து செய்யப்பட்டதும் எப்படி என்று தெரியவில்லை என்கிறார். பாபா தான் அவற்றை ரத்து செய்தார் என்கிறார்.



பாபாவின் காலணிகளை சமாதிக் கோவிலிலிருந்து ஊர்வலமாக எடுத்துச் செல்லும் காட்சி.

ஆராதனை தொடங்கும்முன் தலைமை அர்ச்சகர் ஒலி பெருக்கியில் “ஸ்ரீ சச்சிதானந்த குரு சாயிநாத மகராஜுக்கு ஜெய்” என்று முழக்கமிடுகிறார். பக்தர்கள் அதனை எதிரொலிக்கிறார்கள்.

சமாதியில் உள்ள பாபாவின் விக்கிரகம் பனிக்கட்டி நிறச் சலவைக்கல்லில் செய்யப்பட்டுள்ளது. தங்க நாற்காலியில் அமர்ந்த கோலத்தில் பாபா. செவ்வண்ணச் சால்வை அந்த வெள்ளை நிற விக்கிரகத்தை அழகு செய்கிறது.

சக்கரவர்த்தியைப் போலக் காட்சி தருகின்ற சாயிநாதர் யாசகமாக இங்கேயிருந்த வேப்பமர நிழலில் இருந்தவர் என எண்ணிப்பார்க்கிறபோது, அவர் செய்த அதிசயம் நமக்கு மட்டும் செய்யப்பட்டதல்ல, அவருக்கே அவர் அதிசயம் செய்து கொண்டவராகத் தெரிகிறது.

பாபாவின் திருமுகத்தில் உள்ள அவருடைய தீட்சண்யம் மிக்க கண்களின் பார்வை யாரையும் சுண்டியிழுக்கக் கூடியவை. முகம் முழுவதும் கருணையும், வழிபாட்டுத் தலம் முழுவதிலும் வாசனைப் பூக்களின் நறுமணமும் நிரம்பி நிற்கின்றன.

சமாதியில் நின்று கொண்டிருக்கும் இரண்டு அர்ச்சகர்கள் பக்தர்களின் பூங்கொத்துகளையும், பழங்களையும், சால்வைகளையும் பெற்றுக் கொள்கிறார்கள். சால்வையை மட்டும் பாபாவின் முன்பு காட்டியபிறகு நொடிப் பொழுதில் திருப்பித் தந்து விடுகிறார்கள்.



சர்வ சமயங்களும் பாபாவுக்குள் சங்கமம்

சமாதிக் கோயில் சரியாக அதிகாலை 4 மணி அளவில் திறக்கப்படுகிறது. பாபா விக்கிரகத்தை வெந்நீரில் குளிப்பாட்டுகிறார்கள். பின்னர் மொத்தமுள்ள 4 ஆராதனைகளில் முதல் ஆராதனை 5 மணிக்கு. இரவு 11 மணிக்குக் கோயில் நடை சாத்தப்படுகிறது.

பாபா விக்கிரகத்தைக் கொசு வலையால் மூடி வைக்கிறார்கள். பாபா விக்கிரகத்திற்குக் காலைச் சிற்றுண்டி, மதிய உணவு, இரவுச் சாப்பாடு



பசித்தோருக்கு உணவளிக்கும் சாய்பாபா

அனைத்தும் வழங்கப்படுகின்றன. ஒரு குவளைத் தண்ணீரும் அங்கு வைக்கப்படுகிறது. தினசரி பாபாவின் ஆடைகள் 4 முறை மாற்றப்படுகின்றன.

ஆரத்தி நேரத்தில் பாபாவின் சிரசில் தங்கக் கிரீடமோ, வெள்ளிக் கிரீடமோ சூட்டப்படுகிறது.

ஹிந்து மதத்தினர் பாபாவைச் சிவபெருமான் அவதாரமாகக் காண்கிறார்கள். தத்தாத்ரேயரா கவும் தரிசிக்கிறார்கள். முஸ்லீம்கள் அவரைத் தெய்வ யாசகன் எனப்படும் பக்கீராகப் பார்க் கிறார்கள்.

கடவுள் ஒருவரே என்பதை பாபா தனது பக்தர்களுக்குத் தெளிவித்தவர். 19–ஆம் நூற் றாண்டில் இந்தியாவில் இருந்த அனைத்து ஞானி களுக்கும் உடன்பாடான இச்சிந்தனை, சமூக மறுமலர்ச்சிவாதிகளுக்கு ஆதரவாக அமைந்தது.

சாயிபாபா கோயிலின் பக்தர்களின் காணிக்கை மிக மிக அதிகரித்துக் கொண்டே செல்கிறது. திருப்பதி கோயிலுக்கு அடுத்தபடியாக இதன் ஆண்டு வருவாய் உள்ளது. நாள்தோறும் 1 லட்சம் பக்தர்கள் இங்கு வருகிறார்கள். சென்ற ஆண்டு 1.5 கோடிப்பேர் வந்திருக்கிறார்கள். இந்த ஆண்டு சென்ற 6 மாதத்திலேயே 1 கோடியைத் தாண்டிவிட்டது. நிச்சயமாக இந்த ஆண்டு 3 கோடியைத் தாண்டும்.

இந்த ஆண்டு பெறப்பட்ட நன்கொடை ரூ. 580 கோடி. செலவு ரூ. 300 கோடி. மீதி ரூ. 280 கோடி பொதுத்துறை வங்கியில். இதன் டெபாசிட் ரூ 21 ஆயிரம் கோடி. இதில் சீரடித் திருப்பணி களுக்காக வருடம் ரூ. 100 – 200 கோடி செல வாகிறது. சீரடி நகராட்சிக்கு மாதா மாதம் ரூ. 30 லட்சத்தை இக்கோயில் கொடுக்கிறது.

காங்கிரஸ் தலைவர் நமதேவ் காடம் தன்னை ஒரு நாத்திகரென்று கூறிவந்தவர். தற்போது அவருக்கு வயது 53. ஆனால், சீரடி பாபா பக்த ராகத் தான் மாறிவிட்டதாகக் கூறுகிறார். அதுமட் டுமல்ல, பாகிஸ்தானில் கூட சீரடி பக்தர்கள் இருப்பதாகக் கூறுகிறார். 1977 வரை சீரடி சின்ன ஊராக இருந்தது. நடிகர் மனோஜ்குமாரின் சாயி பாபா சினிமாதான் பாபாவின் பலமடங்குப் பிரபலத்திற்குக் காரணம் என்கிறார்.

பாபாவாக அந்தச் சினிமாவில் நடித்த சுதிர் தால்வி, தன்னை ஒரு நாத்திகராகக் கூறி வந்தாலும், பாபாவின் சமூகச் சீர்திருத்தப் பணி கள் தன்னைக் கவர்ந்து விட்டதெனக் கூறுகிறார். அதனால், பாபாவாக நடிப்பதற்கு முன்பு அவரைப் பற்றி ஏராளமான செய்திகளைத் திரட்டிப் படித்த தாகவும் கூறுகிறார். எத்தனையோ சினிமாவில் நடித்திருந்தாலும், பாபாவாக நடித்த அனுபவத்தை மறக்க முடியவில்லை என்கிறார்.

தன்னைத் தரிசிக்க வரும் நோயாளிகளுக்கு பாபா தனது ஸ்பரிசத்தை உணர்த்துமாறு தொடு வார். அதுவே அவர்களின் நோய்களைக் குணப் படுத்திவிடும். அவர்களுக்கு இவர் மருந்தாகத் தருவது ‘உதி’ எனப்படும் புனிதச் சாம்பல் மட்டும் தான். 100 ஆண்டுகளுக்கு முன்பு ஏற்றிய விறகு நெருப்பு மசூதியில் எரிந்து கொண்டே இருக் கிறது. இன்றைக்கும் அந்த ‘**உதி**’தான் அனை வருக்கும் பிரசாத மருந்தாக விநியோகிக்கப் படுகிறது.

அந்த அடுப்பு எரியும் அந்த மசூதியின் ஒரு மூலையில் பாபா ஒரு பாறையின்மீது அமர்ந்திருப்

*தொடர்ச்சி : 43–ம் பக்கம்*

கட்டுரை




# இணைப்பா - பிணைப்பா?




சமீபத்தில் காவிரியில் ஏராளமான தண்ணீர் ஓடிக் கடலில் கலந்துவிட்டது. இந்தத் தண்ணீரைத் தேக்கிக்கொள்ள வேண்டுமெனப் பலரும் ஆத்திரப்படுகிறார்கள். இது நியாயமானதே. ஆனால், ஒவ்வொருவரும் ஒரு கருத்தைச் சொல்கிறார்கள். தானும் தனது பங்கிற்கு ஏதாவது சொல்ல வேண்டுமென்பதற்காகவா அல்லது தனக்கும் தீர்வு தெரியும் என மற்றவர்களிடம் காட்டிக் கொள்வதற்காகவா என்பது புரியவில்லை. இதைப் பார்க்கும் பொதுமக்களும், அதிகாரிகளும் குழம்பிப் போய் விடுகிறார்கள்.

காவிரியில் கடலுக்குச் செல்லும் ஏராளமான தண்ணீரைத் தேக்குவது அவசியம். சிலர் தடுப்பணைக் கட்ட வேண்டும் என்கிறார்கள். அப்படிக் கட்டினால், எத்தனைத் தடுப்பணைகள் கட்ட வேண்டியிருக்கும்? அதனால் எவ்வளவு தண்ணீர் தேக்க முடியும்? வெறும் 5 டி.எம்.சி. அல்லது 10 டி.எம்.சி. தான் தேக்க முடியும். அதற்கு மேல் முடியாது.

ஆனால் கடந்த 3 மாதங்களில் மட்டும் காவிரியிலிருந்து கடலுக்குச் சென்ற நீரின் அளவு சுமார் 160 டி.எம்.சி. இந்தத் தண்ணீர் எவ்வளவு? வைகை அணையை 25 முறை நிரப்பியிருக்கலாம். தடுப்பணைக் கட்டி 10 டி.எம்.சி. தேக்கி 150 டி.எம்.சி தண்ணீரைக் கடலுக்கு விட்டுவிட்டால் யாருக்கு என்ன பயன்?

மேட்டூருக்கு மேல்புறம் அணை கட்டலாம் என்று சிலர் கூறுகிறார்கள். அந்தப் பகுதியில் காவிரி ஆற்றின் ஒரு கரை தமிழ்நாட்டிற்குச் சொந்தம். மறுகரை கர்நாடகாவிற்குச் சொந்தம். கர்நாடகா அவர்களுக்குச் சொந்தமான கரையை உயர்த்தச் சம்மதிப்பார்களா? மேகதாதுவில் கர்நாடகா அணை கட்ட வேண்டுமென மத்திய அரசிடம் கேட்கிறது. அவர்கள் சொல்லும் காரணம், கர்நாடகா, தமிழ்நாட்டுக்குக் கொடுக்கும் தண்ணீரைக் கடலில் விட்டுவிட்டு எங்களிடம் மேலும் தண்ணீர் கேட்கிறார்கள் என்பதே.

அதனால், கர்நாடகா மேகதாதுவில் அணை கட்ட அனுமதிக்க வேண்டுமென்று அவர்கள் சொல்கிறார்கள். அப்படி அவர்கள் அணை கட்டினால் நமக்குத் தண்ணீர் வராது. காவிரி, வைகை, குண்டாறு நதிகள் இணைப்பைச் செயல்படுத்த வேண்டும் என்று சிலர் கூறுவர். இந்தத் திட்டத்தில் காவிரியில் வெள்ளம் வரும்பொழுது சுமார் 6300 கன அடி தண்ணீரையே எடுக்க முடியும்.

ஆனால், காவிரியில் வருவதோ 1 லட்சம் கன அடிக்கு மேல். அது மட்டுமல்ல, இத்திட்டத்தில் 1 டி.எம்.சி. தண்ணீரைகூடத் தேக்க முடியாது. உச்சநீதிமன்றம் வலியுறுத்தும் நீர்வழிச்சாலையும் இதில் கிடையாது. ஆக, இத்திட்டத்தால் பயன் மிகமிகக் குறைவு.

1982–லிருந்து நதிகள் இணைப்பைச் செயல்படுத்த வேண்டுமென்று மத்திய அரசின் தேசிய நீர் மேம்பாட்டு முகமை (NWDA) முயற்சி செய்து வருகிறது. ஆனால் சென்ற 36 ஆண்டு களாக நதிகள் இணைப்பைச் செயல்படுத்த முடியவில்லை. ஏனென்றால், மாநிலங்கள் இவர் களின் நதிகள் இணைப்புத் திட்டத்தை ஏற்றுக் கொள்ள மறுக்கின்றன.

சமீபத்தில் விவசாயிகள் டெல்லியில் போராட்டம் நடத்தினார்கள். அதில் கலந்து கொண்ட தமிழக விவசாயிகள் நதிகளை இணைக்க வேண்டுமென்று மாண்புமிகு மத்திய அமைச்சர் திரு. ராஜ்நாத் சிங் அவர்களிடம் வலியுறுத்தினார்கள். அதற்கு மத்திய அமைச்சர் நதிநீர் இணைப்புத் திட்டத்தினைச் செயல் படுத்துவதில் மத்திய அரசு உறுதியாக உள்ளது என்றும், முதற்கட்டமாக, கோதாவரி – காவிரி இணைப்புத் திட்டம் செயல்படுத்த நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன என்றும் கூறியுள்ளார்.

கோதாவரி – காவேரி நதிநீர் இணைப்புத் திட்டத்தில் சுமார் 300 அடிக்கு மேல் தண்ணீரைப் பம்ப் செய்துதான் நீரைத் கொண்டுவர வேண்டும். இந்தத் திட்டத்தின் மூலம் மொத்தம் 150 டி.எம்.சி. தண்ணீரைக் கொண்டுவரத் திட்டம் வகுத் திருக்கிறார்கள். அந்தத் தண்ணீர் முதலில் நாகார்ஜுனா சாகர் அணைக்கு வந்து பிறகு காவேரிக்கு வரவேண்டும்.

தண்ணீரைப் பம்ப் செய்து கொண்டுவர முயற்சித்தால், தமிழகத்திற்கு ஒரு சொட்டுத் தண் ணீர்கூடக் கிடைக்காது. ஏனென்றால், நாகர் ஜுனா சாகர் நீர்த்தேக்கம் ஒன்றின் கொள்ளளவே 408 டி.எம்.சி. இந்த விவரத்தை சமீபத்தில் மாண்புமிகு மத்திய நீர்வளத்துறை அமைச்சர் திரு. நிதின் கட்கரி அவர்களைச் சந்தித்து விளக்கியிருக்கிறோம். அவரும் இதை ஏற்றுக் கொண்டு நாம் கொடுத்த நவீன நீர்வழிச்சாலைத் திட்டத்தின்படி, கோதாவரி – காவேரி பிணைப்பு களைத் தாமிரபரணி வரை செய்வதாக உறுதி கொடுத்திருக்கிறார்கள். இதன்மூலம் தமிழ் நாட்டுக்கு ஏராளமான தண்ணீர் கிடைக்கும்.

இந்தத் திட்டத்தில் தண்ணீரை எங்கும் பம்ப் செய்ய வேண்டியதில்லை. மேலும் இதில் கோதா வரியில் வெள்ளம் வந்தால், அது காவேரிக்கு வரும். காவேரியில் வெள்ளம் வந்தால், அது கோதாவரிக்குப் போகும். இது நீர்ப் பிணைப்பாகச் (Water Grid) செயல்படும்.

நதிநீர் இணைப்பிற்கும், நதிநீர் பிணைப் பிற்கும் உள்ள வேறுபாட்டை நாம் புரிந்துகொள்ள வேண்டும். நதிநீர் இணைப்பில் தண்ணீர் ஓர் ஆற்றிலிருந்து மற்றொரு ஆற்றுக்குப் போகும். ஆனால் நதிநீர்ப் பிணைப்பில் தண்ணீர் ஓர் ஆற்றிலிருந்து மற்ற எந்த ஆற்றுக்கும் அது வடக்கோ, தெற்கோ, கிழக்கோ, மேற்கோ எங்கு வேண்டுமானாலும் போகும். இது நீர்ப்பிணைப்பு (Water Grid). மின்பிணைப்பில் வடக்கோ, தெற்கோ எங்கு வேண்டுமானாலும் போகும். அது போன்று தண்ணீர் எங்கு வேண்டுமானாலும் செல்லும்.

உச்சநீதிமன்றம் நதிகள் பிணைப்பை வலி யுறுத்தியே மத்திய அரசைச் செயல்படுத்த வலியுறுத்துகிறது. நதிகள் இணைப்பை அல்ல. ஏனெனில், நதிகள் இணைப்பைப் பல மாநிலங்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. ஆனால் அதே மாநிலங் கள் நதிகள் பிணைப்பினை ஏற்றுக் கொள் கின்றன. ஏனெனில், நதிகள் பிணைப்பில் வெள்ள நீரை மட்டும் எடுத்து, அதே மாநிலத்திற்கும் கொடுத்து உபரிநீரை மற்ற மாநிலங்களுக்குக் கொடுக்கிறோம். தண்ணீரைக் கொடுத்துக் கொள்ள முடியும். தண்ணீரை மீண்டும் எடுத்துக் கொள்ள முடியும். மேலும் நதிகள் பிணைப்பில் தண்ணீரைப் பகிர்ந்து கொள்வதிலும் பிரச்னைகள் இருக்காது.

திரு.வாஜ்பாய் பிரதமராக இருந்தபோது, நதிகள் இணைப்பைச் செயல்படுத்துவதற்காக திரு. சுரேஷ் பிரபு தலைமையில் சிறப்பு உயர்மட்டக் குழு அமைக்கப்பட்டது. அது நதிகள் இணைப்பில் பல பிரச்சனைகள் இருப்பதை அறிந்த காரணத் தால், நாடு முழுவதிலுமிருந்து மாற்றுத் திட்டங் களைக் கேட்டார்கள். ஏராளமான மாற்றுத் திட்டங்கள் வந்தன. நாமும் நமது கங்கா – குமரி

தேசிய நீர்வழிச்சாலைத் திட்டத்தைக் கொடுத்திருந் தோம். அவற்றை ஐ.ஐ.டி. பேராசிரியர்களைக் கொண்டு ஆராய்ந்தது. இறுதியாக நதிகள் இணைப்புத் திட்டத் திற்கு நவீன நீர்வழிச் சாலையே / கங்கா – குமரி தேசிய நீர்வழிச்சாலையே மிகச் சிறந்த மாற்றுத் திட்டம் என அறிவித்தது.

தமிழ்நாட்டில் பெரிய அணைகள் கட்ட இடமில்லை. தகுதியிருந்த இடத்திலெல் லாம் பெருந்தலைவர் காம ராஜர் அவர்களே அணைகள் கட்டிவிட்டார்கள். இனி அணை கட்ட வேண்டும் என் றால், அதற்கு ஒரே வழி சம வெளிக் கால்வாய் மூலம் அனைத்து ஆறுகளையும் பிணைக்கக் கூடிய நவீன நீர்வழிச்சாலைத் திட்டமே. இங்கு ஒரே மட்டத்தில் அனைத்து ஆறுகளையும் பிணைப்பதால், தண் ணீரை எந்த ஆற்றிலிருந்தும் எந்த ஆற்றுக்கும் கொண்டு செல்ல முடியும். தண்ணீரைத் தேக்கிக் கொள்ளவும் முடியும்.




*நவீன நீர்வழிச்சாலை செயல்படும் விதம்*

இந்தத் திட்டத்தில் மேட்டூர் அணையில் எவ்வளவு தண்ணீரைத் தேக்க முடியுமோ, அந்த அளவிற்கும் அதிகமாகத் தண்ணீரைத் தேக்க லாம். இதிலிருந்து காவிரிக்கோ, பாலாற்றுக்கோ, வைகைக்கோ எங்கு வேண்டுமானாலும் தண்ணீர் கொடுக்க முடியும். குடிநீருக்கும், விவசாயத் திற்கும் வேண்டிய அளவு தண்ணீர் கிடைக்கும்.

நவீன நீர்வழிச்சாலைத் திட்டத்தை முன்னாள் குடியரசுத் தலைவர் டாக்டர் ஏ.பி.ஜெ. அப்துல் கலாம் அவர்கள் வெகுவாக ஆதரித்ததோடு, முன்னாள் முதல்வர் செல்வி ஜெ. ஜெயலலிதா அவர்களிடமும் இத்திட்டத்தை உடனே நிறை வேற்றும்படி பரிந்துரைத்துள்ளார். அதன்பிறகு பொறி. ஏ.சி.காமராஜ் ஆகிய என்னை அழைத்து ஆலோசித்த பின்னர் திட்டத்தினை உடனே நிறை வேற்ற விரும்பினார். தேர்தல் அறிக்கையிலும் வாக்குறுதியாகக் கொடுத்துள்ளார்.

மற்றொன்றையும் முக்கியமாக நாம் கவனிக்க வேண்டும். சமீபத்தில் சென்னை வந்த மாண்புமிகு நீர்வளத்துறை அமைச்சர் திரு. நிதின் கட்கரி அவர்கள் கோதாவரியிலிருந்து 175 டி.எம்.சி. தமிழகத்திற்குக் கொடுக்க முடியும் என மாண்பு மிகு தமிழக முதல்வரும் உடனிருக்கும்போது உறுதி கொடுத்திருக்கிறார்கள். இது அவர்களால் முடியும்.

ஏனென்றால், கோதாவரி ஓர் ஆற்றில் மட்டும் ஆண்டுதோறும் 3000 டி.எம்.சி. தண்ணீர் கட லுக்குச் செல்கிறது. இந்த ஓர் ஆற்றில் செல்லும் நீரில் ஒரு பகுதி எடுத்தாலே ஆந்திரா, தெலுங் கானா, தமிழ்நாடு ஆகிய 3 மாநிலங்களில் தண்ணீர்ப் பிரச்சனை இருக்காது. இது நமது நவீன நீர்வழிச்சாலை மூலமாகவே சாத்தியமாகும்.

தமிழகத்தில் பாலாறு முதல் தாமிரபரணி வரை மேற்கிலிருந்து கிழக்கு நோக்கிப் பாயும்

அனைத்து முக்கிய ஆறுகளையும் வடக்கு தெற்காக ஒரே சம மட்டத்தில் 900 கி.மீ. நீளத்திற்கு அமையும் நவீன நீர்வழிச்சாலைப் பிணைக்கிறது. நவீன நீர்வழிச்சாலை ஒவ்வொரு ஆற்றினையும் கடக்கும் இடத்தில் ஒரு சிறிய நீர்த்தேக்கம் போன்ற அணைக் கட்டப்படும்; தடுப்பணை போன்று.

இவ்வாறு ஒவ்வொரு ஆற்றிலும் அமைக்கப்படும் தடுப்பணைகள் ஒன்றோடொன்று இணைக்கப்படும். இதில் அமைக்கப்படும் தடுப்பணைகள் அனைத்தும் கடல் மட்டத்திலிருந்து ஒரே மட்டத்தில் அமைவதால், நீரோட்டம் எங்கு வேண்டுமானாலும் போகும், வரும்.

ஏதாவது ஓர் ஆற்றில் தண்ணீர் வரும்பொழுது சாதாரண காலங்களில் அது ஆற்றின் வழியாகவே ஓடிக் கொண்டிருக்கும். வெள்ளமாக வரும்பொழுது அதைத் தடுத்து எடுத்து அந்தத் தண்ணீரை மற்ற ஆறுகளுடன் இணைக்கப்படும் கால்வாய் மூலமாகத் தண்ணீரை வலது புறமாகவோ அல்லது இடதுபுறமாகவோ அனுப்ப முடியும். அதேபோன்று மற்ற ஆற்றில் வெள்ளம் வரும்போது அந்தத் தண்ணீரைத் தடுத்து இந்த ஆற்றிற்கு அனுப்ப முடியும்.

ஆகவே நீரோட்டம் இரு வழியாக இருக்கும். இதன்மூலம் தண்ணீரை எந்த ஓர் ஆற்றிலிருந்தும் எந்தவொரு ஆற்றுக்கும் அனுப்ப முடியும். இது ஆறுகளின் பிணைப்பாகும். வெள்ளமாகக் கடலுக்குப் போகின்ற தண்ணீரைத் தடுத்துத் தேக்கிய பின், அதே ஆற்றுக்கும் மற்ற ஆறுகளுக்கும் கொடுக்க முடியும். இதனால் யாருக்கும் பாதிப்பில்லை. பலன்தான் அதிகமாய் இருக்கும்.

மேலும் இக்கால்வாய் (சமநிலைப்படுத்தும் நீர்வழிச்சாலை) போதிய அகலத்துடனும் ஆழத்துடனும் அமைக்கப்படுவதால், இது தண்ணீரை உள்வாங்கி, தேக்கி, வேண்டிய இடத்திற்கு மாற்றிக் கொடுக்கும் திறன் உள்ளது. இதற்காக ஒரு செயல்படும் மாதிரி (Working Model) செய்யப்பட்டு அது மதுரையில் வைக்கப்பட்டுள்ளது. இதைப் பலரும் வந்து பார்ப்பது மட்டுமல்ல, பாராட்டவும் செய்கிறார்கள்.

கடலில் போய் விழும் நீரில் 25 விழுக்காடு நீரையே நாம் பயன்படுத்தப் போகிறோம். மீதியுள்ள 75 விழுக்காடு வெள்ளநீர் கடலில் சங்கமமாகும். நீர்வழிச்சாலை என்பது ஏற்ற இறக்கங்கள் அற்ற சம உயரச்சாலை என்பதால், எந்த இடத்திலும் நீரை ஏற்றி இறைக்க வேண்டிய (பம்பிங்) அவசியம் ஏற்படாது.


*மத்திய கப்பல் போக்குவரத்துத்துறை அமைச்சர் நிதின் கட்கரி மற்றும் மத்திய இணை அமைச்சர் பொன் ராதாகிருஷ்ணனுடன் ஏ.சி. காமராஜ்.*

மின் பிணைப்பு மூலம் தற்போது மாநிலங்களிடையே மின்சாரம் எப்படிப் பகிர்ந்து அளிக்கப்படுகின்றதோ, அதைப் போன்றே இந்த நீர்வழிச்சாலை நீர்ப் பிணைப்பை உருவாக்கித் தண்ணீரைப் பங்கீடு செய்துகொள்ள வகை செய்கின்றது.

ஆக, பொதுமக்கள், பொறியாளர்கள், அரசியல் தலைவர்கள் தமிழ்நாட்டின் தண்ணீர்த் தாகத்தைத் தீர்க்க தமிழ்நாடு நவீன நீர்வழிச் சாலைத் திட்டமே தீர்வு என்பதை அறிந்து, புரிந்து அனைவரும் ஒருமித்த குரல் கொடுப்பது மிகமிக அவசியம்.

●

கட்டுரை

# காஷ்மீர் யாருடைய தேசம்?

ஏரிகளுக்குப் புகழ் பெற்ற மாநிலம் இப்போதுள்ள மாநிலமான காஷ்மீர். மொத்தம் 80 ஆயிரத்து 24 சதுர மைல்களைக் கொண்டது. பண்டைய காலத்தில் இந்தப் பகுதி முழுதும் சட்டீசர் ஏரியாக இருந்தது. சிவபெருமானின் மனைவிக்குச் சட்டி என்ற பெயரும் உண்டு.

இந்த ஏரியின் ஒரு பகுதியில் நீர்த்தேக்கம் இருந்தது. அந்த இடத்திற்குப் பெயர் வரஹ் முல்லா. அதுதான் இன்றைய பாரமுல்லா.

நில்மாட் என்ற புராணத்தில் சட்டீசரில் ஜாலோட்பவா என்ற அரக்கன், நர மாமிசம் சாப்பிட்டு, மக்களைக் கொடுமைப்படுத்திக் கொண்டிருந்தான். அவனுக்கு நீரால் அழிவு வரும் என்பதைத் தவ வலிமை மிக்க காஷ்யப் முனிவர் அறிந்திருந்தார். அம்முனிவர் வரஹ்முல்லாவுக்கு வந்தார். மக்களால் வெறுக்கப்படும் ஜாலோட்பவாவை அழித்துவிட முடிவு செய்தார்.

அரக்கன் இருந்த இடம் மலைப்பகுதி. மலைக்கு மறுபுறம்தான் நீர்த்தேக்கம் இருந்தது. தனது தவவலிமையால் மலையை இரண்டாகப் பிளக்கும்படிச் செய்தார். தேக்கப்பட்டிருந்த நீர் அசுர வேகத்தோடு மலையின் பிளவு வழியாகச் சீறிப்பாய்ந்து வெளியேறியது. அதில் அரக்கன் சடலமாகி நீரில் அடித்துச் செல்லப்பட்டான். நீரெல்லாம் வடிந்து வரஹ்முல்லாப் பள்ளத்தாக்குப் பகுதியாகியது. முனிவரின் விருப்பப்படி மக்கள் அப்பள்ளத்தாக்கில் மனைகளை அமைத்துக் குடியேறினர்.



இரா. கல்யாணசுந்தரம்

காஷ்மீரி மொழியில் ‘கா’ என்றால் தண்ணீர். ‘சிம்மிரா’ என்றால் ‘உருவானது’ என்று பொருள். எனவே, அந்தப் பள்ளத்தாக்குக் குடியிருப்புகளுக்குக் ‘காசிம்மிரா, காஷ்யப்மார், காஷிப்புரா’ என்ற பெயர்கள் ஏற்பட்டன. கடைசியில் அதிகாரப்பூர்வமான பெயராகக் ‘காஷ்மீர்’ என்ற பெயர் நிலைகொண்டு விட்டது.

**இந்துக்களுக்கு அனுமதி! :** பண்டைய காலத்தில் பாண்டவர் வம்சாவளியைச் சேர்ந்த கால்கன் என்ற அரசனும், அவன் வழியில் வந்தவர்களும் ஆண்டனர். இப்படி ஆட்சி செய்தவர்களில் 35 பேர்களின் பெயர்கள் ‘ரத்னாஹார்’ என்ற சமஸ்கிருத மொழிப் புத்தகத்தில் காணப்படுகின்றன.

அதற்கடுத்து, மௌரிய அரசர் அசோகர், இப்பூமியை ஆட்சி பரிபாலனம் செய்திருக்கிறார். அவர்தான் ‘பண்ட்ரிதன்’ நகரை உருவாக்கினார். அந்த நகரின் இன்றைய பெயர் ஸ்ரீநகர்.

அசோகருக்குப் பிறகு அவரது மகன் ஜலூகாவும், அதற்குப் பிறகு இரண்டாம் கிங் தாமோதரும் ஆட்சி செய்தனர். இன்று ஸ்ரீநகர் விமான நிலையம் அமைந்துள்ள இடம், தாமோதர் மன்னனின் அரண்மனை இருந்த இடமாகும்.

இந்தப் பள்ளத்தாக்கு, 200 வருடங்களுக்கு மேலாக, இந்திய அரசர்களால் ஆளப் பட்டிருக்கிறது. இவர்களுக்குப் பிறகுதான் துருக்கரான குஷானா வம்சத்தவர் ஆட்சி செய்தனர். குஷானா வம்சத்தின் மூன்று அரசர்களைப் பற்றிய சரித்திரச் சான்றுகள் உள்ளன.

ஹாஸ்கா – ஜோஸ்கா – கனிஷ்கா ஆகியோரே அவர்கள். இந்த மூவரும் தங்கள் பெயரில் ஹாஸ்காபுரா, ஜோஸ்காபுரா, கனிஷ்காபுரா என்ற மூன்று நகரங்களை உருவாக்கினர். கனிஷ்காவுக்குப் பிறகு காஷ்மீரை ஆண்டவர் ஹீன் வம்சத்து 'மஹிர்–ஹில்' என்பவர். இவர் ஒரு கொடுங்கோலர்.


அசோகர்


அக்பர்

கொனண்டா பரம்பரையைச் சேர்ந்த பிரவன் சென் என்ற அரசர் 'பிரவன்சென்புரா' என்ற புது ஸ்ரீ நகரை உருவாக்கினார். இவருக்குப் பிறகு காரகோட்டா பரம்பரை ஆட்சி ஏற்பட்டது. அப்போது காஷ்மீரத்தின் எல்லையில் வாயில் அமைத்து, மிகப் பெரிய கல் கதவால் மூடி, 'இந்துக்கள் தவிர வேறு யாரும் காஷ்மீருக்குள் வரக் கூடாது' என்ற நடைமுறை அமலில் இருந்தது.

காஷ்மீர் இந்து அடிப்படையிலானதா? மொகலாயர் அடிப்படையிலானதா? என்பதற்குப் பளீரெனப் பதில் கூறும் ஆதிகால உதாரணம் இது . இந்த எல்லை வாசல், கல் கதவுகளை நேரில் பார்த்த சீன யாத்ரிகர் தனது நாட்குறிப்பில் எழுதியுள்ளார்.

**இந்துக் கோயில்கள்!** : காரகோட்டா பரம்பரையில் வந்த சமுத்திரகுப்தரின் இயற்பெயர் லலித் ஆதித்யா முகடபித். இவர் பல சிற்றரசர்களை வென்று தன் ஆட்சிக்குக் கீழ் கொண்டு வந்தார். சிந்து மாகாணத்தை ஆண்டு வந்த அரேபியர்களை இவர் விரட்டியடித்தார். இவருக்குப் பிறகு இவரது பேரன் ஜெய ஆதித்யாவின் ஆட்சிக்குப்பின் காஷ்மீர் சிதைந்தது. காஷ்மீருக்குக் கப்பம் கட்டிவந்த குறுநில மன்னர்கள் சுயமாக ஆளத் தொடங்கினர். சிதறிய காஷ்மீரை, பின்னர் வெகுகாலம் கழித்து உத்பல் பரம்பரையினர் ஆட்சி புரியும்போது ஒன்றிணைத்தனர்.

மகாராஜா அவந்தி வர்மன், காஷ்மீரை வலுவான நாடாக்கினான். அவந்தியூரைத் தலைநகராக்கி, அங்கே சிவனுக்கும் விஷ்ணுவுக்கும் தனித்தனியாகக் கோயில்களை அமைத்தான். அக்கோயில்கள் இப்போதும் சிதைந்த நிலையில் உள்ளதைக் காணலாம்.

ராஜா ஜெயசிம்மா ஆட்சியில் காஷ்மீர் நன்றாகத்தான் இருந்தது அவனுக்குப் பிறகு மங்கோலிய மற்றும் துருக்கியப் படையெடுப்புகள் நிகழ்ந்தன. அதனால், ராஜ்ய எல்லைகள் குறுகின. காஷ்மீர் என்பது அந்தப் பள்ளத்தாக்கில் வாழ்ந்த மக்களை மட்டும் கொண்டதாய் ஆகியது.

தைமூர், பஞ்சாபிலும் டெல்லியிலும் படையெடுத்ததைப் போன்று, துருக்கியர்கள் அறுபதாயிரம் படைவீரர்களுடனும், மிரட்டும் பீரங்கிகளுடனும் வந்து நகரம் மற்றும் கிராமங்களைச் சூறையாடி ஆயிரக்கணக்கான மக்களைக் கொன்று குவித்தனர்.

**இந்துக்களுக்குத் தடை!** : காஷ்மீரின் கடைசி இந்து ராஜாவின் பெயர் உதயம்தேவ். பெயருக்குத்தான் இவர் ராஜா. ஆட்சி செய்தது இவனது மனைவியும், பட்டத்து ராணியுமான கோட்டா ராணி.

வீர தீரப் பெண்மணியான இவள், தன்னால் முடிந்த வரை ராஜ்யத்தைக் கட்டிக் காத்தாள். துருக்கியின் அக்கல்லாவும், மங்கோலியரும் படையெடுத்து வந்தபோது, கோட்டா ராணியே போர் முனையில் நின்று போராடி அவர்களைத் தோற்கடித்தாள். அத்துடன், அந்நியர்களின்

ஆக்கிரமிப்புகளையும் கண்டறிந்து அகற்றினாள்.

ஷாமீர் என்ற மன்னன் பெரிய படையுடன் வந்து சம்பால் என்ற இடத்தில் போரிட்டு, கோட்டா ராணியைத் தோற்கடித்தான். அத்துடன் கைதியான கோட்டா ராணியைத் தனது மனைவியாக்கவும் முனைந்தான். அதனால், கத்தியால் தன்னைத்தானே குத்திக்கொண்டு கோட்டா ராணி உயிர் நீத்தாள்.

இவளுடைய தற்கொலைதான் இஸ்லாமிய ஆட்சி காஷ்மீரில் வலுவாகக் காலூன்ற வழி கோலியது. ராணி கோட்டாவின் மறைவிற்குப் பின் ஷாமீர், சுல்தான் 'சமாட்வுட்டீன்' என்ற பெயருடன் ஆட்சி புரிந்தான். இவனது வம்சாவளியினர் 222 ஆண்டுகள் காஷ்மீரை ஆண்டனர். சுல்தான் சிகாபுதீன் என்பவன் சிந்துவின்மீது படையெடுத்து அதைக் கைப்பற்றினான்.

அவன் டெல்லியை நோக்கிப் படை திரட்டி வந்து, பெரோஸாஷா துக்ளக்குடன் சட்லஜ் நதிக்கரையில் சமர் புரிந்தான். இவர்கள் அப்போது ஒப்பந்தம் செய்துகொண்டனர். இதுதான் காஷ்மீரின் முதல் ஒப்பந்தம். இதன்படி ஜகிந்திலிருந்து காஷ்மீர் வரை உள்ள பகுதிகள் காஷ்மீர் மன்னரைச் சாரும் என்று முடிவானது.

சிகாபுதீனுக்குப் பிறகு சுல்தான் குதுாப் உதினும், அவனையடுத்து மூத்த மகன் சுல்தான் சிக்கந்தரும் ஆட்சிப் பீடமேறினர். சிக்கந்தரின் ஆட்சியில் இந்துக்கள் மிகவும் கொடுமைக்குள்ளானார்கள். இந்துக்களின் பண்டிகைகள் அனைத்தும் தடை செய்யப்பட்டன. நெற்றியில் பொட்டு வைத்துக் கொள்ள இந்துக்களுக்குத் தடை விதிக்கப்பட்டது.

இந்துக்கோயில்கள், விக்கிரகங்கள் எல்லாம் சிக்கந்தரின் தூண்டுதலாலும், அமைச்சர் சைபுதீனாலும் உடைத்து நொறுக்கப்பட்டன. இந்த சைபுதீன் பிறப்பால் இந்து. வாலிப வயதில் முஸ்லீமாக மதம் மாறியவன்.

இதனால், காஷ்மீரிலிருந்த ஆயிரக்கணக்கான இந்துக்கள், தங்கள் உயிரையும் மதத்தையும் காப்பாற்றிக் கொள்ளவும், தங்களது இந்துமத நூல்களைப் பாதுகாக்கவும் டெல்லிக்கும், அதைச் சுற்றியுள்ள பகுதிகளுக்கும் அகதிகளாக ஓடி வந்தனர்.

சிக்கந்தருக்குப் பிறகு ஆட்சிக்கு வந்த சுல்தான் ஜெய்னூல் அபைதீன் அரை நூற்றாண்டுகள் ஆட்சி புரிந்தான். இன்றைக்கும் காஷ்மீர் மக்களால் 'பாட்ஷா' என்று செல்லமாய் நினைவுகூரும் அளவுக்கு மிகச்சிறந்த ஆட்சியைத் தந்தவன் அவன்! 'தங்களின் தாய் மதத்திற்குத் திரும்பலாம்' என்று இஸ்லாமியர்களாக்கப் பட்டவர்களுக்கு அனுமதி வழங்கினான். பசுவதையைத் தடுத்தான்! இவனது காலத்தில் காஷ்மீரில் பேப்பர் மெஷின் வந்தது. ஜமக்காளங்கள், பட்டுக்கள் தயாரிக்கப்பட்டன. பீரங்கிப்பவுடர் தொழிற்சாலை உருவானது.

இவனுக்குப் பிறகு அக்பரின் ஆட்சி அமலுக்கு வந்தபோது, எல்லா மக்களும் மகிழ்ச்சியாயிருந்தனர். 1579–இல் தொடங்கி, ராஜா தோடர் மல்லுடன் மூன்று முறை அக்பர் காஷ்மீருக்கு வந்திருக்கிறார். தோடர்மல்லின் ஆலோசனைப்படி காஷ்மீரை அழகுபடுத்திச் சுற்றுலா பூமியாக்கினார்.


மகாராஜா
சர் பிரதாப் சிங்


மகாராஜா
குலாப் சிங்

ஜஹாங்கீர் காலத்திலும் காஷ்மீர் பேணப்பட்டு வந்திருக்கிறது. 13 முறை காஷ்மீருக்கு விஜயம் செய்த ஜஹாங்கீர், ஷாலிமர், நிஷாத் தோட்டங்களை உருவாக்கினார்.

ஔரங்கசீப் காலத்தில் நாதிர்ஷா படையெடுத்து வந்து காஷ்மீரைக் கைப்பற்றினான். அதன்பிறகு 67 ஆண்டுகள் காபூல் மன்னர்களிடம் காஷ்மீர் சிக்கியிருந்தது. அந்த இருண்ட காலத்தில் அனைவரின் சொத்துக்களும் கொள்ளையடிக்கப் பட்டதுடன், அப்பாவி மக்களும் கொல்லப்பட்டனர். அதற்குப் பிறகு பீர்பால்தார் என்பவரும், அவரது மகன் ரஜாக்தார் என்பவரும் மூன்று முஸ்லீம் பிரதிநிதிகளின் ஒத்துழைப்பால் காஷ்மீரிலிருந்து தப்பித்து, லாகூருக்கு வந்து சேர்ந்தனர். அப்போது, ராஜா ரஞ்சித்சிங்கின் ஆட்சி


மகாராஜா
ஸ்ரீ ஹரிசிங்

நடந்து கொண்டிருந்தது. ரஞ்சித்சிங்கிடம் காஷ்மீரில் நடக்கும் கொடுமைகளை எடுத்துக் கூறினர். அத்துடன் அங்குள்ள ஆட்சியைத் 'தங்களால்தான் அகற்ற முடியும்' என்றனர்.

**இந்தியாவுடன் இணைந்தது காஷ்மீர்! :** மக்களுக்கெதிரான ஆட்சி அங்கு நடைபெறுவதைக் கேட்ட பிறகு, ரஞ்சித்சிங்கால் பொறுத்திருக்க முடியவில்லை.

அது 1819–ஆம் ஆண்டு. 30 ஆயிரம் படை வீரர்களுடன் காஷ்மீர் மீது பாய்ந்தார். அந்த சொர்க்க பூமி ரஞ்சித்சிங்கிடம் அடைக்கலம் புகுந்தது. அதன் பிறகு சீக்கிய மன்னர்களின் பரம்பரை ஆட்சி காஷ்மீரில் தொடர்ந்தது. அந்தக் காலகட்டத்தில், காஷ்மீரைக் காலராவும், பிளேக் நோயும் தாக்கின. அங்கு வாழ்ந்த 8 லட்சம் பேரில், 6 லட்சம் பேரைக் காவு கொண்டன அந்தக் கொடிய நோய்கள்!

1830–இல் ரஞ்சித்சிங் இறந்தபிறகு பஞ்சாபிலும், காஷ்மீரிலும் ஆங்காங்கே மோதல்கள் வெடித்துக்கொண்டே இருந்தன. ஒரு காலகட்டத்தில் மிகப்பெரிய உள்நாட்டுக் கலவரம் ஏற்பட்டு, பஞ்சாப் தனித்தனியே உடைந்தது. எங்கு பார்த்தாலும் தடியெடுத்தவன் எல்லாம் தண்டல்காரன் என்ற நிலைதான். இரண்டு முறை பஞ்சாபியர்களுக்கும், ஆங்கிலேயர்களுக்கும் நடந்த போர்களால் சீக்கிய வம்சத்து ஆட்சி முடிவுக்கு வந்தது.

டோக்ரா பரம்பரையைச் சேர்ந்த மகாராஜா குலாப்சிங் என்பவர் பிரிட்டிஷாருக்கு 75 லட்சம் பணம் கொடுத்துக் காஷ்மீரில் ஆட்சி செய்யும் உரிமையை 1848–இல் பெற்றார். இவர்தான் ஜம்மு – காஷ்மீர் மாநிலங்களை உருவாக்கியவர்.

1885 முதல் ஜம்மு – காஷ்மீரை மகாராஜா சர். பிரதாப் சிங் ஆண்டார். டெலிகிராப், டெலிபோன், போஸ்ட் ஆபீஸ் முதலியவை இவர் காலத்தில் காஷ்மீருக்கு வந்தன. பிரதாப்சிங் காலமாகி, 1925–இல் மகாராஜா ஸ்ரீ ஹரிசிங் அரியணை ஏறி, 1950 வரை ஆண்டார். 1947–இல் இந்தியாவுடன் இணைந்தது வரலாறு.

ஆனால், பாகிஸ்தானுக்குக் காஷ்மீரை மறக்க மனம் வரவில்லை. பழங்குடி மக்களைத் தூண்டி விட்டும், தீவிரவாதிகளுக்குப் பயிற்சியளித்தும், இந்து மாவட்டங்களான முசாராபாத், பாராமுல்லா, பூஞ்ச், ரஜோரி, மிர்பூர், பம்பர், கோட்லி, ஸ்கார்டு, கில்ஜிட், லடாக் பகுதிகளில் புகுந்து அப்பாவி மக்களைக் கொன்று குவித்தது. அதன்பின் 1965 மற்றும் 1971–ஆம் ஆண்டுகளில் நேரடியாகவே காஷ்மீர்மீது படையெடுத்து இந்தியாவுடன் மோதித் தோற்றது.

காஷ்மீர் ஆரம்பமும், இப்போதும் இந்தியாவுக்குரியதுதான்! இடையில் ஆண்ட இனத்துக்குரிய நாடாக்க முனைந்து முட்டி மூக்கை உடைத்துக் கொண்டிருக்கும் பாகிஸ்தானுக்கு இன்னும் புத்தி தெளியவில்லை.

காஷ்மீர் இந்தியாவின் சிரசு. அதை இழந்தால் மனதளவில் நமக்குப் பலவீனம் ஏற்படும். இயற்கையான இமயமலை எனும் பாதுகாப்பு அரணை நாம் இழக்க முடியாது. பாகிஸ்தான், சீனா ஆகிய நாடுகளின் எல்லைகள் இந்தியாவின் எல்லையை இங்குதான் தொடுகின்றன.

## தீப்பந்தம் பிடித்த தேவி!

திருக்கோவிலூர் – திருவெண்ணெய் நல்லூர் பாதையில் உள்ள சின்ன செவலையில் காட்சி தரும் காளியை கம்பரும் சடையப்பரும் வழிபட்டுள்ளனர். கம்பர் இராமாயணம் எழுதியபோது இந்தத் தேவி தீப்பந்தம் பிடித்த தாகத் தல வரலாறு கூறுகிறது!

– பே. சண்முகம்,
செங்கோட்டை

கட்டுரை

# நாலுகவிப் பெருமான் ஞானக்கவி வள்ளலார்




சைவ சமயத்தில், நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய திருஞான சம்பந்தரையும், வைணவ சமயத்தில் திருமங்கையாழ் வாரையும் 'நாலுகவிப் பெரு மான்' என்று அழைப் பதுண்டு. அதற்குப் பின் ஒருசிலர் இப்புலமை கைவரப் பெற்றிருந்தனர் எனினும் இலக்கியத்தில் இடம் பெறுமளவிற்கு உச்சம் தொட முடியவில்லை.

தனக்கென ஓர் ஆசிரியரை குரு வாக ஏற்றுக் கவி இயற்றும் ஆற்றலை வளர்த்துக் கொள்ளாமல், இறை வனையே குருவாகக் கொண்டு, பக்தி இலக்கியத்தில் ஒரு புரட்சியையும், பண்டிதர்களிடையே ஒரு மிரட்சியை யும், பாமரர்களிடையே ஓர் எழுச்சி யையும், பாட்டு இலக்கியத்தை, இலக் கண மரபோடு தந்து, திருஅருட் பாக்களைப் பாடச் செய்த பெருமை வள்ளல் இராமலிங்க அடிகளுக்கே உண்டு.

தொடக்க காலத்தில் முரு கனை வழிபடு தெய்வமா கவும், திருஞானசம்பந்தரை வழிபடு குருவாகவும், திரு வாசகத்தை வழிபடு நூலா கவும் ஏற்றுக் கொண்ட அருட்கவி,

"வெம்மாலைச் சிறுவரொடும்
விளையாடித் திரியும்
மிகச்சிறிய பருவத்தே வியந்து
நினை நமது
பெம்மானென்று அடிகுறித்துப்
பாடும்வகை
புரிந்த பெருமானே"

(அருள்விளக்க மாலை 76)

என்று பாடியுள்ளதன் மூலம் அவர் யாரிடமும் சென்று இலக்கணம்கூடக் கற்றதாகத் தெரியவில்லை. எனினும் அவ ரது திருஅருட்பாக்கள் யாவும் யாப்பிலக்கணப் படியே இயற்றப்பட்டிருக்கின்றன என்பது முற்றிலும் உண்மை. அவர் யாப்பியல் வகையில் சுமார் 29 வகைகளைக் கையாண்டுள்ளார்.

குறள் வெண்பா, குறள் வெண் செந்துறை, குறள் தாழிசை, நேரிசை வெண்பா, வெண்துறை முதலிய யாப்புகளில் அமைந்தவை. வள்ளலார் எழுதிய இலக்கண மடல், ஒழிவிலொ டுக்கப் பாயிரவிருத்தி, தொண்டை மண்டல சதகம் – நூற்பெயர் இலக் கணம், அதன் வழிபடு கடவுள், வணக்கப் பாட்டுரை, 'தமிழ்' என்ற சொல்லுக்கு இட்ட உரை, முதலியவை இலக் கண உரைநடை விளக்கங் களாகும். கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பருளும் அருட்பாவைப் படிப்பவர் கள் பொருளுடன், செய் யுளின் கட்டமைப்பையும் அறிந்து கற்க வேண்டும்



பின்னலூர் மு. விவேகானந்தன்

என்பதே வள்ளற்பெருமானின் பெரு நோக்காக இருக்கக் கூடும்.

பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடற் புராணத்தில் வரும் "வளையல் விற்ற படலம்" போல வள்ளற்பெருமானும் ஒரு நீண்ட செய்யுள் இயற்ற வேண்டும் என்று அன்பர்கள் கேட்க, திருவொற்றியூர் படம்பக்க நாதர் பிச்சை ஏற்கும் பெரு மாளாகவும், இறைவியிடம் அவர் வினவுவதன் பொருள் பிச்சையிட வரும் இறைவிக்கு விளங்காததாகவும், அதை அவர் தோழியருடன் அள வளாவுவதாகவும் அமைத்து "இங்கித மாலை" என்னும் 166 பாடல்களைக் கொண்ட 'நாயக – நாயகி' பாவத்தில் அமைந்த பாமாலையைப் பெருமான் இயற்றினார். பெருமானின் இலக்கிய இலக்கணப் புலமையைப் பறை சாற்றும் இதனை வள்ளற்பெரு மானின் அன்பர்கள் ஒவ்வொருவரும் அவசியம் படித்து இன்புற வேண்டிய பனுவல் ஆகும்.

எதுகையும், மோனையும், சீரும், தளையும் முறையாக அமையும் பாட்டு ஒவ்வொன்றும் இன்பம் பயப் பதாகும். அதிலும் ஒரே சொல்லைக் கவிதையில் திரும்பத் திரும்பப் பயன்படுத்திச் சொன்மாலையை எளிய நடையிலும், பண்டிதர்க்கே புரி யாத கடின நடையிலும் பா இயற்றும் வல்லமை வள்ளற்பெருமானுக்கு உண்டு. உதாரணமாக : (தெய்வ மணிமாலை – பாடல் 28).

"நீருண்டு பொழிகின்ற காருண்டு விளைகின்ற
நிலனுண்டு பலனுமுண்டு
நிதியுண்டு துதியுண்டு மதியுண்டு கதிகொண்ட
நெறியுண்டு நிலையுமுண்டு..."

இது பாவின் நான்கு அடிகளுக் குள் ஓரடி. ஓரடியில் 'உண்டு', 'உண்டு' என்னும் சொல் இன்னும் மூன்று அடிகளில் உள்ளதையும் சேர்த்தால் 26 உண்டு உண்டு. பாமரர்க்குப் புரியும் எளிய சொல்லலங்காரம் இதில் உண்டு.

திருவைந்தெழுத்து மந்திரம் பற்றிய ஒரு பாடல் (தனித் திருமாலை)

"ஆவி ஈரைந்தை அபரத்தே வைத்தோதில்
ஆவி ஈரைந்தை அகற்றலாம் – ஆவியீர்
ஐந்துறலாம் ஆவியீரைந்தறலாம் ஆவியீ
ரைந்திடலாம் ஓரிரண்டோ டாய்ந்து"

இதன் பொருளாவது; ஆவி ஈரைந்தை – உயிர்க்குரிய 'ய' என்னும் எழுத்தை (தமிழ் எண்களில் பத்தா வது எழுத்து – ய என்ற எழுத்தாகும்). அபரத்தே வைத்து ஓதில் – 'சிவ' என்ற எழுத்துக்கட்குப் பின்னால் வைத்து 'சிவய' என ஓதுவோமாயின்; ஆ ஈரைந்து – ஆ பத்தையும் (ஈரைந்து (2 x 5) = பத்து) வி – ஈரைந்து – விபத் தையும் அகற்றலாம். ஆவி ஈர் ஐந்து அறலாம் – ஆன்மா பிறவிக்கடலுக்கு இழுக்கும் மலங்கள் ஐந்தின் (ஐந்து மலங்கள் மூலமலம், திரோதனமலம், மாயாமலம், கன்மமலம், மாமாயை மலம் என்பன) தொடர்பும் அறுத்துக் கொள்ளலாம்; ஆவி ஈரைந்து உறலாம் – ஆன்மா பத்தினை எய்துமாம் (பத்து என்பது இங்கே பக்தியைக் குறிக்கும்) இரண்டோடு ஆய்ந்து – முக்திநெறி இரண்டையும் (பதமுக்தி, பரமுக்தி) ஆராய்ந்து; ஆவி ஈரைந்திடலாம் – ஆன்மா தொண்டுவகை பத்தையும் இனிச் செய்யலாம் (தொண்டு வகை பத்து ஆகும்; வல்வினையும், மெல் வினையுமாகத் தொண்டர் செய்த செயல் வகைகள் பத்து).

திருவைந்தெழுத்தை முறையாக ஓதினால் எல்லாவித ஆபத்துக்களி லிருந்தும் விடுபட்டு, முக்தியை அடை யலாம் என்பது வள்ளற்பெருமானின் கருத்தாகும். இத்தகு ஆற்றல்மிக்க பெருமான் நாலுகவிப் பெருமானுக் குரிய திறமைகளைக் கொண்டிருந்தார் என்பது நாம் இதுவரை அறியாத ஓர் அபூர்வச் செய்தியாகும்.

***வள்ளற்பெருமானின் நாற்கவித் திறன் :*** தமிழ்ப் புலமையும், வட மொழித் திறனும் கொண்ட பெரு மான், வடமொழி வகுத்த செய்யுள் நெறிகளான ஆசுகவி, மதுரகவி, சித்திரக்கவி, வித்தாரக்கவி என்னும் கவிக்கூறுகளுக்கேற்ப ஏராளமான பாடல்களை இயற்றியுள்ளார் என்பது அவரது பாடல்களைப் பயின்றவர் களுக்குத் தெரியும்.

***ஆசுகவி :*** வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா எனப் பாவின் ஓர் அடியையோ அல்லது சீரையோ கொடுத்துப் பாவினை இயற்றச் சொன்னால், அந்நேரத்திலேயே இயற் றப்படுவது ஆசுகவி எனப்படும்.

“அறியாத பருவத்தே என்னைவலிந்து அழைத்தே

ஆடல்செயும் திருவடிக்கே பாடல் செயப்பணித்தார்”

(அனுபவமாலை)

என்று திருத்தணிகை முருகனும், கந்தக்கோட்டத்துச் சண்முகனும், திரு வொற்றியூர் தியாகராஜப் பெரு மானும் “பாடும் வகை புரிந்ததனால், அருள்விளக்க மாலையாகவும், அன்பு மாலையாகவும், அலங்கல்களாகவும் பாடியருளினார் வள்ள லார்.

தமிழின் சிறப்பைக் கூறும் “தமிழ்விடு தூதில்” முத்தமிழானது பால் (க்ஷீர பாகம்), முந்திரி (திராட்சா பாகம்), வாழை (கதலீ பாகம்), கரும்பு (இட்சு பாகம்), தேங்காய் (நாளி கேர பாகம்), அமுதம் மற் றும் முத்திக்கனி (அழியாப் பேரின்ப வீடு) எனப் பல வகைச் சுவைகளைக் கொண்டது முத்தமிழ் எனச் சிறப்பிக்கப்பட்டுள்ளது. வள்ளலார் பாடல்களில் அத்தகைய சுவையனைத் தும் உண்டு.




***மதுரகவி :*** பொருட்செல்வம், சொற்செல்வம், தொடை, தொடை விகற்பம், செறியறிஉரூ முதலிய அலங் காரத்தோடும், பாவில் மெல்லினமும், இடை இனமும் நிறைந்தும், வல்லினம் இருந்தாலும் அவற்றின் மீது இ, ஈ சேர்ந்து (க்+இ=கி, த்+இ=தி) இன் னோசை உடையதாய் அமையப் பெற் றால் அந்தப்பா மதுரகவி எனப்படும்.

திருவருட்பாவில் ஏராளமான சந்தப் பாடல்களும், இசைப் பாடல் களும் இன்னோசை ததும்ப இடம் பெற்றுள்ளன.

“தாயாகித் தந்தையுமாய்த் தாங்குகின்ற தெய்வம்

தன்னைநிக ரில்லாத தனித்தலைமைத் தெய்வம்”

இப்படி வரும் பாடல்களும்,

“வருவார் அழைத்துவாடி வடலூர் வடதிசைக்கே

வந்தால் பெறலாம் நல்ல வரமே”

முதலிய கீர்த்தனைகளும் பாடப் பாட நயம்பயப்பன.

***சித்திரக்கவி :*** மாலை மாற்று, சக் கரம், சுழிகுளம், ஏகபாதம், எழு கூற் றிருக்கை, காதைக் காப்பு, காந்துரைப் பாட்டு, துசங்கொனல், கூடசதுக்கம், கோமூர்த்தி, ஒரெழுத் தினால் உயர்பாட்டு, பாத மயக்கு, பாவின்புணர்ப்பு, ஒற்றுப் பெயர்த்தல், ஒரு பொருட்பாட்டு, சித்திரக்கா, விசித்திரக்கா, விகற்பநடை, வினாவுத்தரம், சருப்ப தோபத்திரம், எழுத்து வருத் தனம், அக்கரச்சுதகம், நாக பந்தம் முதலியன சித்திரக் கவி வகையைச் சாரும்.

பாடலின் முதலிரண்டு சீர்களையோ, மூன்று, நான்கு சீர்களையோ வலப் பக்கத்திலிருந்து இடப்பக்க மாகவோ அல்லது இடப் பக்கத்திலிருந்து வலப் பக்கமாகவோ படித்தாலும்

வெவ்வேறு பொருள் தருவது மடக்கு அணி எனப்படும்.

"உரை வளர்கலையே கலைவளர் உரையே
உரைகலை வளர்தரு பொருளே
விரைவளர் மலரே மலர்வளர் விரையே
விரைமலர் வளர்தரு நறவே
கரைவளர் தருவே தருவளர் கரையே
கரைதரு வளர்கிளர் கனியே
பரைவளர் ஒளியே ஒளிவளர் பரையே
பரையொளி வளர்சிவ பதியே"

(ஆறாந்திருமுறை – சிவபதி விளக்கம்)

எழுசீர் விருத்தத்தில் அமைந்த இப் பாடலில் முதல் நான்கு நான்கு சீர் களைக் கட்டங்களில் – கோலங்களில் அமைக்கலாம். இறுதியில் உள்ள 'ஏ' முதல் சீரின் இறுதியில் அமையும். ஒவ் வோர் அடியிலும் உள்ள நான்காவது ஐந்தாவது சீர்கள் எல்லாம் இடை எதுகைகளாக வந்துள்ளன. இது வேறொரு முறை. உரையே உரை, விரையே விரை, கரையே கரை, பரையே பரை எனப் பாடல்கள் பத் திலும் இக்கவிக்கோலம், சித்திரக் கவி யாகச் சிறப்புற்றுள்ளன. இங்கித மாலையில், 'அக்கரச் சுதகம்' கவி யழகை ரசிக்கலாம்.

**வித்தாரக்கவி** : விரிவாகப் பரந்து அமைந்த நீண்ட பா வித்தாரக்கவி எனப்படும். மும்மணிக்கோவை, பன் மணிமாலை, மறம், கலி வெண்பா, தசாங்கம், மட லூர்தல், கிரீடை, இயல், இசை, நாட கம், பாசண்டத்துறை இவை முதலிய விரித்துப் பாடுதல்.

வள்ளல் பெருமானின் 'திருவடிப் புகழ்ச்சி' மற்றும் 'அருட்பெருஞ்சோதி அகவல்' இரண்டுமே வித்தாரக் கவிக்குச் சான்றுகளாகும்.

முதல் திருமுறையில் அமைந்த திரு வடிப்புகழ்ச்சி, 1 அடிக்கு 192 சீர் களைக் கொண்டு 4 அடிகளில் ஒரு விருத்தத்திற்கு 768 சீர்களைப் பெற்று இறைவன் திருவடியை வித்தாரமாகப் புகழ்கின்றது. ஆறாந்திருமுறையில், அருட்பெருஞ்சோதி அகவல் நிலை மண்டில ஆசிரியப்பா 1596 அடி களைப் பெற்று அண்ட, பிண்டம் அனைத்து அலகிலா விளையாட்டு டைய ஆடல்வல்லானின் தத்து வத்தை விரிவாக எடுத்து ஓதுகிறது.

திருஅருட்பா என்ற பெயரையே பெற்றதனால் 'பா'விற்கு இலக்கண மாகிய யாப்பிலக்கணக் கூறுகள் யாவும் இவற்றில் அடக்கம்.

'பாட்டுவித்தால் பாடுகின்றேன்' என்று பாடிய பெருமானது பாடல் கள் யாவும் சொற்சுவையும், பொருட் சுவையும் மிகுந்தவை. 'நான் உரைக் கும் வார்த்தையெல்லாம் நாயகன் தன் வார்த்தையன்றோ' என்று உரைத்த பெருமான்,

"ஏதாகு மோஎனநான் எண்ணி இசைத்தவெலாம்
வேதா கமமென்றே மேலணிந்தான்"

என்பதை நயமாக உணர்த்தியவர்.

"பெரிய சிவ அனுபவத்தால் சமரச சன்மார்க்கம்
பெற்றேன் இங்கிறவாமை உற்றேன் காண்"

என்ற அருட்கவி அருளிய "அருட் பெருஞ்சோதி, அருட்பெருஞ்சோதி, தனிப்பெருங்கருணை, அருட்பெருஞ் சோதி" என்னும் மகாமந்திரத்தை ஓதி, எல்லா உயிர்களும் இன்புற்று வாழ இறையருளை வேண்டுவோமாக!

●



## இங்கிதம்...

'இங்கிதம்' என்பதற்கு இனிமை, உட்பொருள், எண்ணக் குறிப்பு என் றும் பொருள்கள் உள்ளன. இதற்குமாறாகப் பேசுபவர்களை, "இங்கிதம் தெரியாதவர்" என்று கூறுவதுண்டு. வள்ளலார் "இங்கித மாலை", "இங்கிதம் பத்து" நூற்பாடல்கள் பாடியுள்ளார்.

– நெ. இராமன், சென்னை–74.

கட்டுரை

ஜானகி மணாளன்

# 2018-இன் நோபல் பரிசாளர்கள்






**2018**-ஆம் ஆண்டுக்கான 'நோபல் பரிசு'களைப் பெறுபவர்களின் பெயர்கள், வழக்கம் போல் அக்டோபரின் தொடக்கத்தில் அறிவிக்கப்பட்டுவிட்டன. அவை டிசம்பர் 10, ஆல்பிரட் நோபலின் நினைவு நாளன்று வழங்கப்படும்.

இயற்பியல், வேதியியல், இலக்கியம், மருத்துவம், பொருளாதாரம் ஆகிய பிரிவுகளுக்கான பரிசுகள் ஸ்வீடனின் தலைநகர் ஸ்டாக்ஹோமிலும், அமைதிக்கான நோபல் பரிசு மட்டும் நார்வேயின் தலைநகர் ஆஸ்லோவிலும் வழங்கப்படும்.

ஆனால், இவ்வாண்டு மட்டும் இலக்கியத்திற்கான பரிசு எவருக்கும் அறிவிக்கப்படவில்லை. அதற்குக் காரணம், தேர்வில் ஏற்பட்ட ஏதோ சர்ச்சை. ஆனால், அடுத்த ஆண்டு சேர்த்து வழங்கப்படும்.

**மருத்துவம்** : இத்துறைக்கான நோபல் பரிசுக்கு இருவர் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளனர். இருவருக்கும் அவர்கள் நிகழ்த்திய புற்றுநோய் மருத்துவத்தில் புரட்சிகரக் கண்டுபிடிப்புகளுக்காக இப்பரிசு வழங்கப்படுகிறது. அவ்விருவர் அமெரிக்க விஞ்ஞானி ஜேம்ஸ் அலிஸன் மற்றும் ஜப்பானிய விஞ்ஞானி டாஸுகு ஹோஞ்சோ ஆகியோர் ஆவர். இருவரும் மனித உடலில் இயற்கையாக அமைந்துள்ள நோய் எதிர்ப்புச் சக்தியைக் கொண்டே புற்றுநோய் அணுக்களை அழிக்கும் சிகிச்சை முறையை உருவாக்கியதற்காக இந்த உயரிய விருது வழங்கப்படுகிறது.

ஜேம்ஸ் அலிஸன்(70) அமெரிக்காவின் ஆண்டர்சன் புற்றுநோய் மையத்தின் நிர்வாக இயக்குநராக உள்ளார். 13-க்கும் மேற்பட்ட விருதுகளைப் பெற்றுள்ளார். டாஸூகு ஹோஞ்சோ (76) அமெரிக்காவின் தேசிய அறிவியல் அகாதெமியின் வெளிநாட்டு உறுப்பினராக இருந்தவர். கடந்த ஆண்டு முதல் இவர் ஜப்பானின் கியாட்டோ பல்கலைக்கழகத்தில் விரிவுரையாளராகப் பணியாற்றுகிறார். நோபல் பரிசுத்தொகை 8 கோடி ரூபாய் இருவருக்கும் சமமாகப் பகிர்ந்தளிக்கப்படுகிறது.

**இயற்பியல்** : இத்துறைக்கான நோபல் பரிசு, மூவருக்கு வழங்கப்படுகிறது. அவர்கள் அமெரிக்காவின் ஆர்தர் அஷ்கின்(96), பிரான்சின் ஜெரார்டு மோரூ (74), மற்றும் கனடா நாட்டின் டான்னா ஸ்ட்ரிக்லேண்ட்(59) ஆகியோர் ஆவர். மொத்தப் பரிசுத் தொகையின் சரிபாதி ரூ. 4 கோடி ஆர்தர் அஷ்கினுக்கும், மறு பாதியாகிய 4 கோடி ரூபாய் மற்ற இருவருக்கும் சமமாகப் பகிர்ந்தளிக்கப்படுகிறது.


ஜேம்ஸ் அலிஸன் டாஸுகு ஹோஞ்சோ டான்னா ஸ்ட்ரிக்லேண்ட்

இம்மூவரும் லேசர் சிகிச்சைக்குப் பயன்படும் ஒளியியல் லேசர்களைக் கண்டு பிடித்ததற்காக இப்பரிசைப் பெறுகின்றனர். இவர்களில் ஆர்தர்

அஷ்கின்தான் இதுவரையில் நோபல் பரிசு பெற்றவர்களிலேயே மிகவும் அதிக வயது டையவர். இவர், 1987–இல் வைரஸ்கள் மற்றும் உயிரணுக்களை அள்ளி எடுக்கும் ஒளியியல் லேசரைக் கண்டுபிடித்தார். கதிர்வீச்சைப் பயன் படுத்திப் பொருள்களை நகரச் செய்யும் அறிவியல் கனவை இக்கண்டுபிடிப்பு நனவாக்கியது.

மிகவும் சக்தி வாய்ந்த லேசர் அதிர்வுகளை ஜெரார்டு மோரூ மற்றும் டான்னா ஸ்ட்ரிக்லாண்ட் இருவரும் உருவாக்கினர். இவ்விருவரின் ஒளியியல் லேசர் கதிர்கள் கண் குறைபாடு நீக்கச் சிகிச்சைக்குப் பெரிதும் பயன்படுகிறது. மூன்றா மவர் டோனா ஸ்ட்ரிக்லாண்ட் என்பவர் ஒரு பெண் விஞ்ஞானி. 1901–க்குப் பிறகு நோபல் பரிசு வாங்கும் ஒரு முதல் பெண்மணி. ஜெரார்டு மோரூவின் மாணவி இவர்.


வில்லியம் நார்தாஸ்


பால் ரோமர்

**வேதியியல் :** இவ்வாண்டுக்கான வேதியியல் பரிசு, ஒரு பெண் உள்பட மூன்று பேருக்கு வழங்கப்படுகிறது. கடந்த 50 ஆண்டுகளில் முதன்முறையாக ஒரு பெண் இத்துறைக்கான பரிசைப் பெறுகிறார். பிரான்ஸ் நாட்டின் ஹெச். அர்னால்ட் (62), அமெரிக்காவின் ஜார்ஜ் பி. ஸ்மித் (72), பிரிட்டனின் சர் கிரகரி பி. வின்டர் (67) ஆகியோர் பரிசு பெற்ற அம்மூவராவர். நொதித் திறனின் பரிணாம வளர்ச்சியைப் பயன்படுத்தி உயிரி எரிபொருள் முதற்கொண்டு, மருந்துகள் வரை ஏராளமான பொருள்களை உற்பத்தி செய்தமைக்காக இப்பரிசு வழங்கப்படுகிறது.

பெண் விஞ்ஞானி அர்னால்ட் இவ்விருதைப் பெறும் 5–ஆவது பெண் என்ற சிறப்பைப் பெறு கிறார். அர்னால்டுக்கு மொத்தப் பரிசுத்தொகை 7.3 கோடி ரூபாயில் சரிபாதித் தொகை வழங்கப் படுகிறது. மீதமுள்ள தொகை ஜார்ஜ் ஸ்மித் மற்றும் கிரகரி பி. வின்டர் இருவருக்கும் சமமாகப் பிரித்து அளிக்கப்படுகிறது. 3 மகன்களின் தாயான அர்னால்ட் மார்பகப் புற்று நோயால் பாதிக்கப் பட்டவர். அமெரிக்க கலிபோர்னியா பல்கலைக் கழகத்தில் இத்துறையின் பேராசிரியராகப் பணியாற்றுகிறார்.

ஜார்ஜ் ஸ்மித் மிஸ்ஸௌரி பல்கலைக் கழகத்திலும் கிரகரி வின்டர் கேம்பிரிட்ஜில் உள்ள MRC ஆய்வகத்தில் ஆராய்ச்சியாளராகவும் உள்ளனர். நச்சுத்தன்மையை நீத்துப்போகச் செய்தல், நோய் எதிர்ப்புக் குறைபாடு, ரத்த ஓட்டம் அல்லது நிணநீர் மண்டலம் வாயிலாகப் பரவும் புற்றுநோய் முதலியவற்றுக்கான மருந்துகளும் இவர்களால் கண்டறியப்பட்டன. இவர்களது நோய் எதிர்ப்பு மருந்துகள் வீரியம் மிக்கதாகவும், பக்க விளைவுகள் குறைவானதாகவும் உள்ளன என்று பரிசுத் தேர்வுக்குழுத் தலைவர் கோரஸ் ஹன்சன் கூறியுள்ளார்.

**அமைதி :** இவ்வாண்டின் அமைதிக்கான நோபல் பரிசு, காங்கோ நாட்டைச் சேர்ந்த மருத் துவர் டென்னிஸ் முக்வேஜா மற்றும் ஈராக்


நாடியா முராத்


டென்னிஸ் முக்வேஜா

நாட்டைச் சேர்ந்த நாடியா முராத் ஆகியோருக்கு வழங்கப்படுகிறது. இருவரும் போர் நடக்கும் பகுதிகளில் பெண்கள் மீது நிகழ்த்தப்படும் பாலியல் வன்கொடுமைகளை எதிர்த்துப் போராடிய சமூக ஆர்வலர்கள் ஆவர்.

யாஜிதி இனத்தைச் சேர்ந்த நாடியா முராத், இஸ்லாமிய தேச (ஐ.எஸ்.) பயங்கரவாதிகளால் பாலியல் அடிமையாக வைக்கப்பட்டிருந்தவர். போர் உத்தியாகப் பயன்படுத்தப்படும் பெண்கள் மீதான பாலியல் வன்கொடுமை என்ற அவலத்திற்கு முடிவு கட்டும் முயற்சிகளை மருத்துவர் முக்வேஜா யும், நாடியா முராத்தும் மேற்கொண்டுள்ளனர்.

பெண்களின் பாதுகாப்பு மற்றும் அடிப்படை உரிமைகள் காக்கப்பட்டால்தான் உலகின் உண்மையான அமைதியை நம்மால் எட்ட முடியும் என்கிறார், தேர்வுக்குழுத் தலைவர் பெரிட்ரீஸ்–ஆண்டர்சன்.

இந்த ஆண்டின் இலக்கியத்திற்கான நோபல் பரிசு, பாலியல் குற்றச்சாட்டுகள் காரணமாக எழுந்த சர்ச்சை அடிப்படையில் நிறுத்தி வைக்கப் பட்டுள்ள நிலையில், அதே பாலியல் விவகாரத்தை அடிப்படையாகக் கொண்டு இவ்வாண்டுக்கான அமைதிக்கான நோபல் பரிசு வழங்கப்படுவது குறிப்பிடத்தக்கதாகும்.

**பொருளாதாரம் :** இவ்வாண்டிற்கான இந்த நோபல் பரிசு இருவருக்கு வழங்கப்படுகிறது. ஒருவர் அமெரிக்காவின் ‘யேல்’ பல்கலைக் கழகத்தில் பட்டம் பெற்று அதே பல்கலைக் கழகத்தில் பேராசிரியராகப் பணியாற்றி வரும் வில்லியம் நார்தாஸ் (77) என்பவர். மற்றொருவர், உலக வங்கியின் முதுநிலைத் துணைத் தலைவ ராகக் கடந்த ஜனவரி மாதம் வரையில் பொறுப்பில் இருந்த பால் ரோமர் (62) ஆவார். தற்போது அவர் நியூயார்க் பல்கலைக்கழகத்தில் பணியாற்றி வருகிறார். இவர் பட்டம் பெற்றது, அமெரிக்கா வின் பிலிப் எக்ஸடர் அகாதெமியில். புதிய கண்டு பிடிப்புகள் மற்றும் சுற்றுச்சூழலைப் பொருளாதாரத் துடன் ஒருங்கிணைத்தமைக்காக இவ்விருவருக் கும் இப்பரிசு வழங்கப்படுகிறது. நாட்டின் பொருளாதார வளர்ச்சி நிலையானதாகவும், நீடித்ததாகவும் இருக்கச் செய்வது எப்படி என்ற சவாலுக்கு இருவரும் தமது ஆய்வுகளில் தீர்வு கண்டறிவித்துள்ளனர்.

சந்தைப் பொருளாதாரத்தை முக்கியமான சுற்றுச்சூழல் மற்றும் புத்தாக்கச் சிந்தனையுடன் இணைத்ததன் மூலம் பொருளாதாரப் பகுப்பாய் வின் எல்லையை இவ்விருவரும் விரிவுபடுத்தி யுள்ளனர் என்று தேர்வுக்குழு கூறியுள்ளது. வில்லியம் நார்தாஸ் பருவநிலை மாறுபாடு என்ற முக்கியப் பிரச்சனையைப் பொருளாதாரத்துடன் இணைத்துள்ளார். அதேபோல், பால் ரோமர் தொழில்நுட்பக் கண்டுபிடிப்புகளைப் பொருளா தாரத்துடன் இணைத்துள்ளார்.

•



உஷா முத்துராமன்

சிறுகதை

# அம்மா வந்தாள்



"ரொம்ப நாளைக்குப் பிறகு நிஷா இப்படிச் சந்தோஷமாகச் சிரிக்கிறாள். ரொம்ப தேங்க்ஸ் சுதா" என்றான் சந்துரு.

சந்துருவுக்கும் சாந்திக்கும் கல்யாணம் வெகு விமரிசையாக நடந்தது. பின் இருவரும் மும்பையில் தனிக்குடித்தனத்தைச் சந்தோஷமாகத் தொடங்கினர். பெரிய கம்பெனியில் சந்துரு நல்ல வேலையில் இருந்தான். வாழ்க்கைப்படகு சந்தோஷமாகச் செல்லத் தொடங்கியது. சந்தோஷமான அவர்களுடைய வாழ்க்கைக்குச் சாட்சியாகக் குழந்தை நிஷா பிறந்தாள். குழந்தை நிஷாவுக்கு நான்கு வயது ஆனது.

ஒருநாள் மாலை சந்துரு ஆபீசிலிருந்து வரும்பொழுதே 'சாந்தி, சாந்தி' என்று கூப்பிட்டுக்கொண்டே வந்தான். ஆனால், பதில் இல்லை. வீட்டின் வாசல் கதவு திறந்திருக்க, குழந்தை நிஷா மட்டும் வாசலில் மணலில் விளையாடிக்கொண்டிருந்தாள். சந்துருவைப் பார்த்ததும், 'அப்பா' எனச் சந்தோஷமாக ஓடிவந்தாள்.

"அப்பா, அம்மாவுக்கு மத்தியானத்திலிருந்து ஜுரம்" என்று மழலையில் சொன்னாள். சந்துருவுக்கு உடனே பகீர் என்றது. காலையில் தன்னை ஆபீசிற்கு அனுப்பும்போது நன்றாகத்தானே இருந்தாள், இப்போது என்னவாயிற்று? என்று எண்ணியபடியே குழந்தையைத் தூக்கிக்கொண்டு உள்ளே போனான். சாந்தி தன் நினைவில்லாமல் தூங்கிக்கொண்டிருந்தாள்.

பக்கத்து வீட்டுக்காரரிடம் குழந்தையை விட்டுவிட்டு, டாக்டரைக் கூப்பிட்டு வந்தான். டாக்டர் ஊசி போட்டு மாத்திரையைக் கொடுத்துவிட்டு, 'கவலைப்பட வேண்டாம், சரியாகிவிடும்' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார். சந்துருவுக்கு ஒன்றும் புரியவில்லை.

குழந்தைக்குச் சாப்பாடு போட்டுத் தூங்க வைத்துவிட்டு, சாந்திக்குச் சாப்பிட என்ன வேண்டும் எனக் கேட்பதற்காக, அவளிருந்த அறைக்குச் சென்று, 'சாந்தி, சாந்தி' என்று கூப்பிட்டுத் தொட்டுப் பார்த்தான். பிறகுதான் தெரிந்தது, அவளது உடலில் உயிர் இல்லை என்பது. உடனே, அவளின் பெற்றோர், தன் அம்மா எல்லோருக்கும் போன் செய்து, அவர்கள் வந்தவுடன் நடக்க வேண்டிய காரியங்களைச் செய்து முடித்தான். பின் ஆபீசிற்கு லீவு போட்டுவிட்டுக் குழந்தையுடன் அம்மா தங்கியிருக்கும் மன்னார்குடிக்குப் போனான்.

இடமாற்றம் அவனுக்கும், குழந்தைக்கும் ஓரளவு தெம்பைக் கொடுத்தாலும், மனைவியின் இழப்பு அவனை மிகவும் பாதித்தது.

‘‘சந்துரு, நீ எத்தனை நாளைக்கு இப்படியே இருப்பே! உன் குழந்தைக்காகவாவது இன்னொரு கல்யாணம் பண்ணிக்கோ. நான் எவ்வளவு நாளைக்குக் குழந்தையை வளர்க்க முடியும்? நான் செத்துப் போய்விட்டால்...’’ என்றாள் சந்துருவின் அம்மா.

‘‘அம்மா, ஏன் இப்படிப் பேசறே?’’ என்றான் கண்ணீருடன்.

‘‘நெருப்பு என்றால் வாய் வெந்து போயிடுமா? ம்... நான் என்ன சொன்னாலும் நீ கேட்கவா போறே... ஏதோ கடவுள் விட்ட வழிப்படி நடக்கட்டும். என் ஆதங்கத்தைச் சொன்னேன். சரி... சரி... நீ எப்போ ஆபீசிற்குப் போக வேண்டும்?’’ என்று கேட்டாள் சந்துருவின் அம்மா.

‘‘ஒரு வாரம்தான் லீவு போட்டிருக்கிறேன். நாளைக்கு இங்கிருந்து கிளம்பிச் சென்னை போய்விட்டு, பிறகு அங்கிருந்து மும்பை போக டிக்கெட் வாங்கியிருக்கிறேன்’’ என்றான்.

‘‘குழந்தையும், நானும் இங்கேயே இருக்கோம் சந்துரு.’’

‘‘அம்மா, நீயும், குழந்தையும் எப்போ மும்பை வரணும்னு நினைக்கிறியோ, உடனே எனக்குச் சொல்லு, நான் கூட்டிப்போறேன்’’ என்றான் சந்துரு.

‘‘இல்லை சந்துரு, நான் மும்பைக்கு வரலை. உங்க அப்பா உயிர் போன இதே வீட்டில்தான் நானும் சாகணும். அதனால்தான் நீ கல்யாணம் செய்துகொண்ட பிறகுகூட உன்னுடன் மும்பைக்கு அவ்வளவு கூப்பிட்டும் வரலை.’’

‘‘சரிம்மா, உன் விருப்பம்’’ என்றான். பிறகு மறுநாள் குழந்தையைப் பிரிய மனமில்லாமல் பிரிந்து மும்பைக்குச் சென்றான்.

இயந்திரம் போல் வாழ்க்கை நடத்தினான் சந்துரு. அவன் கைகள் கடமையைச் செய்து கொண்டிருந்தாலும், மனம் முழுவதும் சாந்தியைப் பற்றியும், குழந்தை நிஷாவைப் பற்றியும் நினைத்துக் கொண்டிருந்தது.

அன்று ஆபீசிற்குப் போக பஸ்ஸுக்குக் காத்துக் கொண்டிருந்தான் சந்துரு. அப்போது ஓர் ஆணும், பெண்ணும் தமிழில் பேசினர். தமிழாக இருப்பதால், அவர்கள் என்ன பேசுகிறார்கள் என்று கவனித்தபோது, அவர்களின் உரையாடலில் தன் பெயர் சொல்லப்படுவதைக் கேட்டு வியப்புடன் பார்த்தான். அவர்களை எங்கேயோ பார்த்தது போல இருந்தது. யார் என விசாரிக்கலாம் எனத் திரும்பியபோது, அவன் செல்ல வேண்டிய பஸ் வந்ததால், ஓடிச் சென்று ஏறிக் கொண்டான். ஆபீஸ் சென்றும், பஸ் ஸ்டாண்டில் பார்த்தவர்கள் யார் என மனம் குழம்பியது. பின் ஆபீஸ் வேலையில் மூழ்கிப் போனதால், பஸ் ஸ்டாண்டில் பார்த்தவர்களைப் பற்றிச் சுத்தமாக மறந்தே போனான்.

இப்படியே சந்துருவின் வாழ்க்கைப் படகு நகர்ந்து கொண்டிருந்தது.

சந்துரு கொஞ்சம் நிம்மதியாக மூச்சு விட்டாலே, கடவுளுக்குப் பொறுக்காது போல. அன்று ஆபீசில் வேலை பார்த்துக் கொண்டிருந்த சந்துருவின் நிம்மதியைப் போக்குவதற்காகவே அந்த போன் செய்தி வந்தது.

மன்னார்குடியில் சந்துருவின் அம்மா திடீரென நெஞ்சு வலியால் இறந்த செய்திதான் அது. என்ன செய்வது என்றே புரியாமல், ஆபீசில் லீவ் சொல்லிவிட்டு, மன்னார்குடியைப் பார்க்க ஓடினான்.

தாய்க்குச் செய்ய வேண்டிய இறுதிக் கடன்களைச் செய்து முடித்தான்.

இனி என்ன செய்வது? கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டது போன்று உணர்ந்தான் சந்துரு. குழந்தை நிஷாவுடன் மும்பைக்கு வந்து சேர்ந்தான். குழந்தையை எப்படிக் கரை சேர்ப்பது? மனம் குழம்பியது.

வீட்டிற்கு ஒரு வேலைக்காரியை அமர்த்திப் பார்த்தான். அவள் சந்துரு இல்லாத சமயங்களில் எதை எடுக்கலாம் என்பதில்தான் குறியாக இருந்தாள். குழந்தையை அன்புடன் கவனித்துக் கொள்வதைத் தண்டனையாக எண்ணினாள்.

‘ஐயோ, கடவுளே என்ன செய்வது? குழந்தை நிஷா முகத்தில் மகிழ்ச்சியைப் பார்த்தே ரொம்ப நாளாகிவிட்டது.’ குழந்தையைச் சந்தோஷப்படுத்தும் எண்ணத்துடன் கடற்கரைக்கு அழைத்துச் சென்றான். நிஷா கடல் அலைகளில் கால்களை நனைத்து மகிழ்ச்சியாக விளையாடியதைப் பார்க்கச் சந்துருவுக்குச் சந்தோஷமாக இருந்தது. அந்தச் சந்தோஷத்தில் சுற்றும் முற்றும் பார்த்தான்.

அன்று பஸ் ஸ்டாண்டில் பார்த்த பெண்ணும், ஆணும் சிறிது தொலைவில் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தான். உடனே குழந்தையைத் தூக்கிக் கொண்டு அவர்களை நோக்கி நடந்தான். அவர்களை நெருங்கியதும் தயங்கியபடியே நின்றான்.

‘‘சார், உங்களை எங்கேயோ பார்த்த மாதிரி இருக்கு, ஆனா எங்கே என்று சரியாக ஞாபகம் இல்லை. சாரி...’’ என்று மெதுவாகத் தொடங்கினான்.

“என்ன சந்துரு சார்! எங்களை ஞாபம் இல்லையா? நாங்கள் சுதாவின் அண்ணன் விவேக்கும், அண்ணி ரோஸியும்” என்று தெளிவாகப் பேசினான்.

“ஆமாம் சார். இப்போ ஞாபகம் வந்துவிட்டது. சுதா எப்படி சார் இருக்கா?”

“ஏதோ நடைப்பிணமாக இருக்கிறாள். இது உங்க குழந்தையா? வொய்ப் எங்கே சார்?” என்று கேட்டான் விவேக்.

சந்துரு தன் மனைவி இறந்ததையும், பிறகு அம்மா இறந்ததையும் ரொம்ப சோகமாகச் சொன்னான்.

“சார், சுதாவுக்குக் கல்யாணம் ஆகிவிட்டதா? இப்போ எங்கே இருக்கா? என் மேலே ரொம்பக் கோபமா இருக்காளா?” எனக் கேள்வி மேல் கேள்வி கேட்டான் சந்துரு.

“ஏதோ இருக்கா சார். ஆனால் கல்யாணம் ஆகலை. நீங்க இப்போ சுதாவைப் பார்த்தா, எப்படியிருந்த சுதா இப்படி ஆயிட்டான்னு ரொம்ப வருத்தப்படுவீங்க. ஆனால், சுதா உங்களைப் பார்த்தால் ரொம்பச் சந்தோஷப் படுவா” என்று ஏதோ புதிர் போடுவது போலப் பேசிவிட்டு, தன் வீட்டு முகவரியைக் கொடுத்தான் விவேக்.



“நான் கண்டிப்பாக உங்களைப் பார்க்க வீட்டிற்கு வரேன்” என்று சொல்லி, அவர்களிடமிருந்து விடைபெற்றுக் கொண்டான் சந்துரு. வீட்டிற்குச் செல்லும் வழியில் சந்துரு, தன் சுதாவைச் சந்தித்த நிகழ்ச்சியை எண்ணிப் பார்த்தான்.

**த**ந்தையின் மறைவுக்குப் பிறகு சந்துருவின் தாயார், சந்துருவையும், அவன் தங்கை லதாவையும் வாழ்க்கையில் முன்னுக்குக் கொண்டு வர ரொம்பவும் கஷ்டப்பட்டாள். அம்மாவின் கஷ்டத்தைப் புரிந்து கொண்ட சந்துருவும், லதாவும் பொறுப்பாகப் படித்தார்கள். என்னதான் கஷ்டப்பட்டுப் படித்தாலும், லதாவால் அதிக மதிப்பெண்கள் எடுக்க முடியவில்லை. பத்தாம் வகுப்பில் அவள் கால் வைத்ததே அதிசயம்.

படித்து முடித்த சந்துருவுக்கு மும்பையில் நல்ல சம்பளத்தில் வேலை கிடைத்தது. லதா படித்துக் கொண்டிருந்ததால் அம்மாவையும், லதாவையும் அங்கேயே விட்டுவிட்டு, தான் மட்டும் மும்பைக்குப் போனான். புதிய இடம், புதிய மொழி சந்துரு ரொம்பவே திணறிப்போனான். எங்கு தங்குவது என யோசித்து, வாடகைக்கு வீடு கிடைக்கும் வரை ஹோட்டலில் தங்கினான்.

தினமும் ஆபீஸ் முடிந்ததும், வீடு தேடினான். அன்று மாதுங்காப் பகுதியில் பல தெருக்களில்

அலைந்த பிறகு, கடைசியாக ஒரு வீட்டில், இங்கு கேட்டுப் பார்ப்போம் என்று நினைத்துக் கொண்டு வாசலில் நின்று, 'சார்... சார்...' எனக் கூப்பிட்டான்.

''கோன் ஹை' என்று கேட்டுக்கொண்டே ஒரு பெண் வெளியே வந்தாள்.

''இங்கு தங்க இடம் கிடைக்குமா?'' மிக அப்பாவியாக முகத்தை வைத்துக் கொண்டு அவன் ஆங்கிலத்தில் கேட்க, ''உள்ளே வாங்க. அப்பாவைக் கூப்பிடுகிறேன்'' என்று அந்தப் பெண்ணும் ஆங்கிலத்தில் பதில் சொல்லிவிட்டு, ''அப்பா, யாரோ வந்திருக்காங்க'' என்று உள்நோக்கித் தமிழில் குரல் கொடுத்தாள். சங்கரன் வந்தார்.

''சார், நான் தமிழ்நாட்டிலிருந்து வந்திருக்கேன். இப்பதான் புதுசா வேலை கிடைச்சிருக்கு. எனக்கு ஹோட்டலில் தங்க இஷ்டம் இல்லை. அதுதான் வீடு தேடுகிறேன்'' என்றான் சந்துரு.

''அப்படியா தம்பி, நீங்க தமிழ் பேசுவதைக் கேட்கச் சந்தோஷமா இருக்கு. மாடியில் ஒரு ரூம் இருக்கு. நாங்க வாடகைக்குக் கொடுக்கிற உத்தேசமே இல்லை. தமிழனுக்குத் தமிழன் உதவி செய்யணும் அப்படிங்கிற எண்ணத்திலே இந்த ரூமை வாடகைக்குத் தருகிறேன்'' என்று சொன்னார். சந்துருவுக்குச் சந்தோஷமாக இருந்தது.

சந்துரு ரொம்ப ஜாக்கிரதையாகத்தான் பழகினான். முதலில் நண்பர்களாகப் பழகிய சந்துருவும், சுதாவும் நாளடைவில் காதலர்களானார்கள். சங்கரன் ரொம்பக் கோபப்பட்டார். பிறகு சந்துருவைக் கூப்பிட்டுப் பேசினார்.

''சார், நீங்க எதுவும் தப்பாக நினைக்காதீர்கள். நான் சுதாவைக் கைவிட மாட்டேன்'' – உத்தரவாதம் கொடுத்தான் சந்துரு.

''அதில்லை சந்துரு, உனக்கே தெரியும். ஒரு மாதம் முன்பு நடந்த கலாட்டா'' தயங்கித் தயங்கிப் பேசினார்.

''ஆமாம் சார். உங்க மகன் ஒரு பெண்ணைக் காதலிப்பதாகவும், அவளைத்தான் திருமணம் செய்து கொள்வேன் என்று சொல்லி அழைத்துவர, அந்தப் பொண்ணும் உங்க எல்லோருடனும் சண்டை போட்டுக்கொண்டு தனிக்குடித்தனம் போனது தெரியும் சார்.''

''ஆமாம் தம்பி, நாங்க அந்த அதிர்ச்சியிலிருந்தே இன்னும் மீளவில்லை. என் மகன் விவேக் நல்ல வேலையில் இருப்பதால், நிறையப் பணம் கொடுப்பான். அதில் சுதாவுக்கு நிறையச் சீர் செய்து கல்யாணம் செய்யலாம்னு திட்டம் போட்டேன். ஆனால் இப்போ எல்லாம் மாறிப்போச்சு.''

''எனக்கு எதுவும் வேண்டாம் சார். என் அம்மா சம்மதம் கிடைத்தால் அதுவே எனக்குப் போதும்'' என்று சொல்லிவிட்டு, தன் அம்மாவிடம் பேச மன்னார்குடிக்குப் புறப்பட்டான் சந்துரு.

அம்மாவையும், தங்கை லதாவையும் பார்த்த சந்தோஷத்தில் என்ன பேசுவது என்றே தெரியவில்லை. இந்தச் சந்தோஷமான நேரத்தில் தன் காதலைப்பற்றிச் சொல்லிவிட நினைத்தான்.

''சந்துரு, நீ வந்தது ரொம்ப சந்தோஷமா இருக்கு. நானே உனக்குப் போன் செய்து வரச் சொல்ல நினைச்சேன்'' அம்மா ஏதோ புதிர் போடுவது போல் பேசினாள்.

''சந்துரு, அடுத்த தெரு சுந்தரேசன், அவருடைய பிள்ளைக்கு நம் லதாவை எந்தச் சீரும் எதிர்பார்க்காமல் கல்யாணம் செய்துக்கச் சம்மதம் என்றார். நீயோ, இப்போதான் வேலைக்குப் போயிருக்கிறாய். இனி நீ பணம் சேர்த்து லதாவுக்குக் கல்யாணம் செய்ய நிறைய நாளாகும். அதற்குள் நம்ம லதாவுக்கு 30 வயதாகிவிடும். உனக்கும் வயதாகிவிடும். நல்ல வரன் வலிய வரும்போது விடக்கூடாது. ஆனால்...'' என்று தயங்கியபடியே சொன்னாள்.

''என்ன அம்மா ஆனால்... என்று நிறுத்தி விட்டாய்?''

''அவருடைய பெண் சாந்தியை நீ கல்யாணம் செஞ்சிட்டாத்தான் உன் தங்கையை அவர்கள் பையனுக்குக் கல்யாணம் செய்து கொள்வார்கள். சாந்தி நல்ல பெண்தான். பார்க்க நன்றாகத்தான் இருக்கிறாள்'' என்றாள்.

''என்ன அம்மா, நீங்க ரொம்ப அவசரப் படறீங்க...'' என்று அங்கிருந்து நகர்ந்துவிட்டான்.

கஷ்டப்பட்டு வளர்த்த அம்மாவை எதிர்த்துப் பேச முடியாமல் ரொம்பத் திணறினான். 'கடவுளே, காதல் என்றால் ஏதாவது பிரச்சனையுடன்தான் முடிய வேண்டுமா? சந்தோஷமாக வெற்றி பெற முடியாதா?' என்றெல்லாம் அவனால் நினைத்துத் தான் பார்க்க முடிந்ததே தவிர, அவன் வாய் மூடிய ஊமையாகவே இருந்தான்.

சந்துரு தன் காதலைப் பற்றித் தன் அம்மாவிடம் எதுவும் சொல்லாமல் மௌனமாகவே இருந்தான். சந்துருவின் அம்மா, அவனுடைய மௌனத்தைச் சம்மதமாக எடுத்துக்கொண்டாள். லதாவின் திருமணம் வெகு விமரிசையாக நடந்தது. பின் சாந்தி – சந்துருவின் திருமணமும் நடந்தது.

இதனால் மனமுடைந்த சந்துரு, மும்பை வந்து விஷயத்தைச் சொன்னதும் சங்கரன், ''உங்கள் புத்தியெல்லாம் தெரியும். கண்டதும் காதல் செய்யும் ரகம் நீங்கள். பணத்தைப் பார்த்ததும் எல்லாம் மறந்துவிடும்'' என்று குதித்தார். பின் சுதாதான்

அவளுடைய அப்பாவைச் சமாதானம் செய்ததுடன் தன் மனதையும் தேற்றிக்கொண்டாள்.

சாந்தியுடன் குடும்பம் நடத்தத் தொடங்கிய சந்துரு, நாளடைவில் சுதாவையும், அவள் குடும்பத்தையும் மறந்தே போனான். அபலைப் பெண்ணான சுதாவின் சாபமோ என்னவோ, சந்துருவுக்குச் சோதனை மேல் சோதனை.

மறுநாள் மாலை குழந்தையுடன் விவேக் கொடுத்த முகவரிக்குப் போனான் சந்துரு.

''ஹலோ, வாங்க சந்துரு'' சுதாதான் வரவேற்றாள். சந்துரு திணறிப்போனான். அவள் முகத்தைப் பார்க்கவே அவனுக்குக் கஷ்டமாக இருந்தது. எப்படி இருந்த சுதா எப்படி ஆகிவிட்டாள். காய்ந்த சருகு போல் இருந்தாள். சந்துருவின் மனம் வேதனையால் வாடியது. இவளுடைய இந்த நிலைக்குத் தான்தான் காரணம் என்று நினைக்கவே வருத்தமாக இருந்தது.

சுதாவின் குரல் கேட்டு உள்ளேயிருந்து வந்த விவேக், ''ஹலோ, வாங்க சார்'' என்று சந்துருவை வரவேற்றான். குழந்தையுடன் அமர்ந்தான் சந்துரு. சுதாவும் உட்கார்ந்தாள். யாருக்கும் எதுவும் பேசத் தோன்றாததால், அங்கு மௌனம் நிலவியது.

சந்துருவுக்கு அந்த மௌனம் என்னவோ செய்தது. ''ஏன் சுதா, நீ இன்னும் கல்யாணம் செய்துக்கலை?'' மௌனத்தைக் கலைக்க வேண்டுமே எனச் சந்துரு கேட்டான்.

''சார், நீங்க வேற கல்யாணம் செஞ்சதும் சுதா ரொம்பக் கலங்கிப் போய்விட்டாள். நாங்களும் இல்லாததால் அம்மா, அப்பாவுக்குச் சுதாவை எப்படித் தேற்றுவது என்றே தெரியவில்லை. சரியாகச் சாப்பிடாமல், தூங்காமல் சுதாவின் உடல் நிலை ரொம்ப பாதிக்கப்பட்டது. இதனால், டாக்டரிடம் காட்டியதில் சுதாவுக்கு இடமாற்றம்தான் நல்ல ஆரோக்கியத்தைக் கொடுக்கும் என்று சொன்னதால், அம்மா, அப்பா, சுதா மூவரும் ஊட்டியில் கொஞ்ச நாள் தங்குவதற்காகப் போனார்கள். அங்கேயும் விதி எங்களைத் துரத்தியது'' அழுது கொண்டே சொன்னான் விவேக்.

''அங்கே என்ன ஆச்சு? விவேக், ப்ளீஸ் அழாமல் சொல்லுங்க.''

''சென்னையிலிருந்து அம்மா, அப்பா, சுதா மூவரும் ஊட்டிக்கு பஸ்ஸில் போனார்கள். அந்த பஸ் விபத்தில் சிக்கியதில் அம்மா, அப்பா இரண்டு பேருமே இறந்து விட்டார்கள். சுதா மட்டும் வயிற்றில் பலத்த அடியுடன் தப்பித்தாள். ஆனால் பாருங்கள், அவள் அதிர்ஷ்டத்தை. வயிற்றில் அடிபட்டதால், கர்ப்பப்பை சேதமாகி, அதை எடுத்தால்தான் சுதா உயிர் பிழைப்பாள் என்ற கட்டாயத்தில் அவளது கர்ப்பப்பை எடுக்கப்பட்டது. கர்ப்பப்பை இல்லை என்ற உண்மையைச் சொன்னால் யார் சார் அவளைக் கல்யாணம் செய்து கொள்வார்கள்? ஆனால், சுதாவுக்கு உண்மையை மறைத்துக் கல்யாணம் செய்ய மனசில்லை. உண்மை தெரிந்த யாரும் இவளை மணக்க முன்வரவில்லை'' ரொம்ப வருத்தத்துடன் பேசினான் விவேக்.

சந்துருவுக்கு என்ன பேசுவது என்றே தெரியவில்லை. பேசிக் கொண்டிருந்ததில் குழந்தையை மறந்தே போனவன், திடீரென்று, ''எங்கே குழந்தையைக் காணோம்?'' என்றான்.

''கவலைப்படாதீங்க சந்துரு, குழந்தையும் சுதாவும் மாடிக்குப் போனாங்க'' என்று விவேக்கின் மனைவி பதில் சொன்னாள்.

உடனே எல்லோரும் மாடிக்குப் போனார்கள். அங்கு சுதாவுடன் குழந்தை நிஷா சிரித்து விளையாடிக் கொண்டிருந்தாள். குழந்தையின் முகத்தில் சிரிப்பைப் பார்த்ததும், சந்துருவுக்கு ரொம்ப சந்தோஷமாக இருந்தது. எப்போதும் சோகத்துடன் இருக்கும் சுதாவும் சந்தோஷமாகச் சிரிப்பதைப் பார்த்து விவேக்கிற்கு மகிழ்ச்சியாக இருந்தது.

''ரொம்ப நாளைக்குப் பிறகு நிஷா இப்படிச் சந்தோஷமாகச் சிரிக்கிறாள். ரொம்ப தேங்க்ஸ் சுதா'' என்றான் சந்துரு.

''ஆமாம் சந்துரு, சுதாவும் ரொம்ப நாளைக்குப் பிறகு இப்படிச் சிரிக்கிறாள்'' விவேக் சொன்னான்.

''விவேக், உங்களுக்கு விருப்பமானால் நான் ஒன்று சொல்கிறேன்.''

''நீங்க என்ன சொல்லப் போறீங்கன்னு எனக்குத் தெரியும். தாயில்லாத நிஷாவுக்குத் தாயாக சுதாவை நீங்க கல்யாணம் செய்துக்க ஆசைப்படறீங்க. அதுதானே?''

''ஆமாம் விவேக். சுதாவின் வாழ்க்கை இப்படி இருண்டு போனதற்கு நான்தானே காரணம்! அவளுடைய வாழ்க்கையில் நான் விளக்கேற்றி அந்த இருட்டைப் போக்குகிறேன்.''

''கரும்பு தின்னக் கூலியா சந்துரு? ஏற்கனவே உங்களை விரும்பியவள்தான் சுதா. நிச்சயம் இதுக்குச் சம்மதிப்பாள். என்ன சுதா, நீ என்ன சொல்றே?'' என்று தங்கையைப் பார்த்துக் கேட்டான் விவேக்.

இவர்கள் பேசியதைக் கேட்டுக் கொண்டிருந்த சுதா, மௌனமாகச் 'சம்மதம்' என்னும்படி தலையை அசைத்தாள்.

''என்ன நிஷா, உனக்கு இந்த ஆன்ட்டியைப் பிடிச்சிருக்கா?'' என்று குழந்தையைக் கேட்க, அவள் ''அப்பா, இவங்க ஆன்ட்டி இல்லை. இனி என் அம்மா'' என்று சொல்ல, சந்தோஷத்தில் நிஷாவை அணைத்துக் கொண்டாள் சுதா. ●





# விளையாட்டு விளையாட்டல்ல!

சமீபத்தில் நடந்து முடிந்த ஆசிய விளையாட்டுக்களின் பதக்கப்பட்டியலை அலசிப் பார்த்தால், ஓர் உண்மை விளங்கும்.

ஒரு நாடு பெற்ற பதக்க எண்ணிக்கை, அந்த நாட்டின் பொருளாதார வளத்தையோ அல்லது வளக் குறைவையோ சுட்டிக்காட்டுவதாக அமைந்திருக்கிறது. அதாவது, ஒரு நாடு பொருளாதாரப் பலம் உள்ள நாடாக இருந்தால், அதிகப் பதக்கங்களை வென்றுள்ளதை அறியலாம். மிகவும் குறைந்த வளம் உள்ள நாடாக இருந்தால், அதையும் இந்தப் பதக்கப் பட்டியல் பிரதிபலிக்கிறது.

இதற்குச் சரியான உதாரணம், சிறிய நாடாகக் கருதப்படும் ஹாங்காங் 8 தங்கப் பதக்கங்களுடன் மொத்தம் 45 பதக்கங்கள் வாங்கியிருக்கும்பொழுது, பங்களாதேஷ் ஒரு பதக்கம் கூடப் பெறவில்லை.

நம் நாட்டைப் பொறுத்தவரை, சீனாவுடன் ஒப்பிட்டுப் பார்ப்பதுதான் சரியானது. இந்த ஆண்டு, சீனா 132 தங்கம் உட்பட மொத்தம் 289 பதக்கங்கள் வாங்கியுள்ளது.

பொருளாதார நிலை என்று பார்த்தால், சீன நாட்டின் மொத்த உற்பத்தி மதிப்பு (ஜி.டி.பி.) 14 டிரில்லியன் டாலர். இந்தியா 2.6 டிரில்லியன். 1 டிரில்லியன் டாலர் என்பது இந்திய ரூபாயில் ரூ. 70 லட்சம் கோடி.

சீனா 1 கோடி மக்கள் தொகைக்கு, 2 பதக்கங்கள். அதே மக்கள் தொகைக்கு இந்தியா 0.53 பதக்கங்கள். இந்தியா பெற்றது மொத்தம் 69 பதக்கங்கள். அவற்றில் தங்கம் 15 தான். இப்படியாக நம் நாடு பொருளாதார வளர்ச்சியில் மிகவும் பின்தங்கியிருப்பதையே இது பிரதிபலிக்கிறது.

இந்தப் பட்டியலைச் சரித்திரப்பூர்வமாகக் கொஞ்சம் பார்ப்போம். 1978–க்கு முன்பாக சீனா இந்தியாவைவிடப் பின்தங்கியிருந்தது. அதற்கு ஒரே எடுத்துக்காட்டு, இந்தியாவில் அன்று வறுமை நிலை 50 சதவிகிதம். ஆனால் சீனாவில் 80 சதவிகிதமாக இருந்தது.

சீனா, வேக வளர்ச்சி காணத் தொடங்கியது. அதற்குச் சற்று முன்பாகவே, அதாவது 1974–இல் நடந்த ஆசியப் போட்டியில் இந்தியாவை முந்திக் கொண்டு வேகநடை போடத் தொடங்கியது. அது இன்றுவரை உள்ளது.

1974–க்கு முன்பாக இந்தியா – சீனா பதக்கப் பட்டியலைப் பாருங்கள்.

1954–இல் இந்தியா பெற்ற மொத்தப் பதக்கங்கள் 13. அவற்றில் தங்கம் 4. சீனா மொத்தம்



பெற்றது 12. அவற்றில் தங்கம் 2.

1966–இல் இந்தியா பெற்ற பதக்கங்கள் மொத்தம் 22. அவற்றில் தங்கம் 7. சீனா பெற்றது மொத்தம் 24. அவற்றில் தங்கம். 5.

களில் உலக அளவில் சிறந்து விளங்குகின்றன. ஆக, கிரிக்கெட் ஒரு முட்டுக்கட்டை இல்லை போன்று தோன்றுகிறது.



## எம். சி. சிவசுப்பிரமணியன்

1970–இல் இந்தியா பெற்ற பதக்கங்கள் மொத்தம் 25. அவற்றில் தங்கம் 6. சீனா பெற்றது மொத்தம் 18. அவற்றில் தங்கம் 1.

1974–இல் சீனா வேகம் எடுக்கத் தொடங்கியது, இன்றுவரை தொடர்கிறது. 1974–இல் இந்தியா பெற்ற பதக்கங்கள் மொத்தம் 28. அவற்றில் தங்கம் 4. சீனா பெற்றது மொத்தம் 105. அவற்றில் தங்கம் 32.

பின்னர் எல்லா ஆசிய விளையாட்டுப் போட்டிகளிலும் சீனா மிகவும் முந்தியே இருந்து வருகிறது. இந்தியா சற்றே முன்னேறியிருக்கிறது.

ஆனால், சீனா பெற்றது, 1986–இல் மொத்தம் 222 பதக்கங்கள். 1990–இல் 341 பதக்கங்கள். 2014–இல் 345 பதக்கங்கள். ஆக, பொருளாதார வளத்தைப் பொறுத்தே பதக்கப்பட்டியல் அமைகின்றது.

இந்த விதிக்கு ஒரு விதிவிலக்கும் உண்டு. ஒலிம்பிக் விளையாட்டுகளில் எத்தியோப்பியா, போர்ட்டேரிகோ முதலிய நாடுகள் தங்கம் வென்றிருக்கின்றன. இவை மிகவும் பின்தங்கிய ஆப்பிரிக்க நாடுகள்.

இவ்வாறு, நம் நாடு அகில உலக விளையாட்டுப் பந்தயங்களில் பின்னடைந்து இருப்பதற்குக் காரணம், கிரிக்கெட் மோகமா என்று பார்த்தால், அதுவும் இல்லை என்று தோன்றுகிறது. ஏனென்றால், நம்மைப் போலவே கிரிக்கெட்டைக் கொண்டாடும் நாடுகளான ஆஸ்திரேலியா மற்றும் இங்கிலாந்து ஆகியவை மற்ற விளையாட்டுக்



பதக்கப்பட்டியலை மக்கள் தொகையோடு ஒப்பிட்டுப் பார்த்தால், மேலும் சில உண்மைகள் வெளிவரும்.

ஜப்பான் தனது 8 கோடி மக்கள் தொகைக்கு 209 பதக்கங்கள் பெற்றது. அதாவது, 1 கோடி மக்களுக்கு 25 பதக்கங்கள். சீனா, 2 பதக்கங்கள். இந்தியா 0.53 பதக்கம்.

சிறிய நாடுகளான பஹ்ரீன், ஹாங்காங், சிங்கப்பூர் கணக்கைப் பார்த்தால், 1 கோடிக்கு 100 கூட இருக்கலாம். ஆக, விளையாட்டு விஷயம் விளையாட்டல்ல என்று தெரிகிறது.

இந்தியாவில் விளையாட்டில் வெற்றி பெற்றோருக்கு 10 லட்சம், 20 லட்சம் என்று அரசு அறிவிக்கிறது. சமீபத்தில் பி.வி. சிந்து ஒலிம்பிக் மெடல் வாங்கியதற்கு 20 கோடிக்கு மேல் சன்மானம் வழங்கப்பட்டது.

இதை முகாந்திரமாகக் கொண்டு மேலும், மேலும் இளைஞர்கள் விளையாட்டில் அக்கறை காண்பிப்பர் என்று எதிர்பார்க்கிறது அரசு. ஆனால், அது விரும்பிய விளைவுகளைக் கொண்டுவரவில்லை.

சீனா, விளையாட்டுகள் மற்றும் ஓட்டப் பந்தயங்களைப் பயிற்றுவிக்க ஏராளமான சிறப்புக் கல்லூரிகளைத் திறந்திருக்கிறது. பல லட்சம் பேர் பயிற்றுவிக்கப் படுகிறார்கள் என்று செய்திகள் உண்டு.

இந்தியர்கள் பொதுவாக, விளையாட்டுப் பிரியர்கள் இல்லை. ஆனால், சினிமாப் பிரியர்கள் என்று சொல்லப்படுகிறது. வாழ்க்கை சினிமா மயம் என்றிருக்கும் இளைஞர்களுக்கு, ஆரோக்கியமான பொழுதுபோக்கான விளையாட்டுக்கள் தாக்கத்தை ஏற்படுத்தவில்லை போலும்!

நம் நாட்டில் பத்திரிகைகளின் பரப்பளவைச் சினிமா ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிறது. நடிகர் மன்றங்கள் அரசியல் களங்களாக இருக்கின்றன. தனி மனித வழிபாடு, நடிகர் மன்ற நடவடிக்கைகள் நல்ல விளையாட்டுப் பந்தயங்களை நிராகரித்துவிட்டன.

முற்றிலும் ஆரோக்கியமான சூழ்நிலையில் நல்ல ஆரோக்கியமான விளையாட்டுப் பந்தயங்கள் எடுபடுமா? ●

நேர்காணல்

மாதவ் காட்கில்

# மலையை அழித்தால்... நாம் அழிவோம்!



ஈரோடு **ஜீவா**

**புக**ழ் பெற்ற இயற்கை அறிஞர் மாதவ் காட்கில், மேற்குத் தொடர்ச்சி மலையைப் பாதுகாப்பதற்கான அறிக்கையைச் சமர்ப்பித்து, ஏழு ஆண்டுகள் ஓடிவிட்டன. அந்த அறிக்கையில் அவர் கேரளம், குடகு முதலிய பகுதிகள் சூழல் அபாயத்திற்குரிய பகுதிகள் என எச்சரித்துள்ளார். அந்தப் பகுதிகள் அண்மையில் ஏற்பட்ட பெரு மழை வெள்ளத்தால் பெரும் அழிவுக்கு உள்ளாகியுள்ளன.

அவர், செப்டம்பர் 2011-இல் நன்கு ஆராயப்பட்ட மேற்குத் தொடர்ச்சி மலைகள் பற்றிய ஆய்வைத் தக்க தரவுகள் கொண்டும், வான்கோள் பட ஆய்வுப் பதிவுகள் கொண்டும் கனமான அறிக்கையை வெளியிட்டார். அவற்றை ஆர்வம் மிக்கோர் தரவிறக்கம் செய்து படிக்கலாம். மிக மென்மையான ஆபத்திற்குரிய இந்தப் பகுதிகளைப் பாதுகாப்பது எப்படி என்பதற்கான வழிமுறைகளையும் விளக்கியுள்ளார்.

கனிமவளக் கொள்ளைக்கான சுரங்க அகழ்வுகள், காடுகளை அழித்து மேற்கொள்ளப் படும் வளர்ச்சிப்பணிகள், மரம் வெட்டுதல், தவறான மலைநிலப் பயன்பாடு ஆகியன அழிவுக்கு வித்திடுவன என்று அவர் எச்சரித்துள்ளார். ஆனால், கடந்த காலத்தில் மேற்குத் தொடர்ச்சி மலை சார்ந்த ஆறு மாநிலங்களிலும் ஆட்சிக்கு வந்த அரசுகள் அவரது வழிகாட்டலை மதிக்கவுமில்லை, ஏற்கவுமில்லை. மாறாக, அதற்கு எதிரான தீர்மானத்தை ஆளும் கட்சி, எதிர்க்கட்சி என அனைத்தும் ஒருமித்த கருத்துடன் எதிர்த்தன.

அரசுகளும், சில வளர்ச்சி மோகிகளும் எதிர்ப்பதைக் காரணம் காட்டி, மத்திய அரசு புதிய குழு அமைத்து, மாற்றுத் திட்டம் கொண்டுவர முடிவு செய்தது. இதன்படி மாதவ் காட்கில் குழு முடிவை மறுபரிசீலனை செய்ய கஸ்தூரி ரங்கன் குழு அமைக்கப்பட்டது.

பல்வேறு கோணங்களில் ஆய்வு செய்து, முழுமையான நீண்டகாலப் பயனுள்ள மாதவ் காட்கில் திட்டத்திற்கு மாற்றாக, சிறிது தளர்த்தப்பட்ட அறிக்கையை கஸ்தூரி ரங்கன் குழு 2013-இல் சமர்ப்பித்தது. இதன்படி மூன்றில் ஒரு பகுதியான மேற்குத்தொடர்ச்சி மலை இயற்கை ஆபத்துக்குரியதாக முடிவு செய்யப்பட்டது. இயற்கை நில அமைப்பு, பண்பாட்டு நில அமைப்பு எனப் பிரித்துப் பார்க்கப்பட்டு, மாதவ் காட்கிலின் ஆன்மா சிதைக்கப்பட்டது. 73 வயதான இயற்கை ஆர்வலர் திரு. மாதவ் காட்கிலிடம் 'Front Line' எடுத்த பேட்டி...

**கேள்வி : இந்த நூற்றாண்டில் காணாத வெள்ளப் பேரழிவைக் கேரளாவும், குடகும் சந்தித்தன. மோசமான நிலச்சரிவு, இழப்புகளுக்கு மனிதச்**



**செயல்பாடுகள்தான் காரணம் என்கிறீர்களா?**

**பதில் :** கேரளாவிலும், குடகிலும் வரலாறு காணாத பெருமழை பெய்தது என்பது உண்மையே. விஞ்ஞானிகள் பருவநிலை மாற்றம், பூமி சூடாதல் காரணமாக இத்தகைய மோசமான விளைவுகள் அடிக்கடி பெருமளவில் நடக்கக் கூடுமென எச்சரித்திருந்தனர். அதிக மாமழை, வறட்சி என நிலையற்ற விளைவுகள் உண்டாகும் என்றனர்.

ஆனால், கேரளாவிலும், குடகிலும் நிகழ்ந்த பேரழிவுகள் இயற்கையை அழித்து மேற்கொண்ட நியாயப்படுத்த முடியாத அழிவுச் செயல்பாடுகள் கடந்த பல பத்தாண்டுகளாக நடப்பதைத் தடுக்காததே காரணம். மனித அழிவுப் பணிகள் பெருமளவு நடைபெற்றுள்ளன. பெருவெள்ளம், மோசமான மலைச்சரிவுகள் நடைபெற்றுள்ளன. குறிப்பாகக் கேரளாவில் சட்டவிரோதமாகக் கல்வெட்டுதலால் பெருமளவிலான பாறைகளும், கற்களும் மலைகளிலிருந்து அடித்து வரப்பட்டு, ஆற்றுப் பாதை முழுவதும் பரவியுள்ளன. ஆறுகள் மண் குவிப்பால் பாதை மாறியுள்ளன. மலைச் சரிவுகளைச் செதுக்கிப் பெருமளவில் கட்டடங்கள் கட்டப்பட்டுள்ளதும் இதற்கான காரணம் எனலாம்.

**கேள்வி : மலைகளைச் சிதைத்துக் கல் வெட்டுவதை நீங்கள் நீண்ட காலமாகவே எதிர்த்து வந்துள்ளீர்கள். அது அண்மையில் அதிகமாகியுள்ளதா?**

**பதில் :** ஆம்! 2013–இல் நாங்கள் எங்கள் அறிக்கையை அரசுக்குச் சமர்ப்பித்தோம். கற்களை வெட்டியெடுத்தலின் ஆபத்தான விளைவுகளை எச்சரித்தோம். கோழிக்கோட்டில் கல் சுரங்கப்பணிகளுக்கு எதிரான மக்கள் போராட்டம் நடந்தது. ஆனால், எந்தச் சுரங்கக் காரர்கள் மீதும் நடவடிக்கை எடுக்கப்படவில்லை. அரசு மக்களுக்கு உதவாது என்று மக்கள் முடிவு



செய்துவிட்டனர். அண்மைக் காலமாகக் கற்கள் வெட்டுதல் பெருமளவு பெருகி உள்ளது. கற்கள் வெட்டும் அழிவு தடையேதுமின்றிச் சட்டத்திற்குப் புறம்பாக மோசமான வகையில் பெருகியுள்ளது.

சட்டத்திற்குப் புறம்பாகக் காடுகள் அழிப்பு, மரங்கள் வெட்டுதல் ஆகியன இந்தப் பேரழிவுக்கு மற்ற காரணங்கள். வெட்டப்பட்ட மரங்களுக்கு மாற்றாக மரங்கள் நடப்படுகின்றன என்கிறது வனத்துறை. வனத்திற்குரிய இயல்பான மரங்களுக்குப் பதில், புதிய அந்நிய மரவகைகள் நடப்பட்டன. ஓரின மரவகை வளர்ப்பானது, மலையின்

உறுதித்தன்மை, நீர்பிடிப்புத் திறன், மலையின் நீர் இயல்பு ஆகியவற்றை அழித்தது.

**கேள்வி : அணைகளில் விரைவாகச் சகதி குவிவதும், அணைகளின் நீர்பிடிப்பு அளவு குறைவதும், வனப்பகுதிகளும், நீர்பிடிப்புப் பகுதிகளும் மோசமான ஆக்கிரமிப்புக்குள்ளாகியுள்ளன என்றும் நீங்கள் எச்சரித்துள்ளீர்களே?**

**பதில் :** மேற்குத்தொடர்ச்சி மலைப்பகுதி முழுவதுமே இத்தகைய இயற்கை விரோதச் செயல்பாடுகள் நடந்து வருகின்றன. தேவையற்ற அணைகள், இயற்கைக்கு எதிராகவும், மக்கள் தேவை பற்றிய அக்கறையின்றியும், தொழில்நுட்ப ஆபத்துள்ள இடங்களில் பெரும் நிதிச்செலவில் கட்டப்பட்டுள்ளன. இதனால் எவ்விதப் பலனுமில்லை. ஆனால், மலையின் பல சிற்றாறுகளும், அருவிகளும் காய்ந்து போய்விட்டன. பல அருவிகள் நீரின்றிப் பாறையாக நிற்கின்றன.

அதிரம்பள்ளி அணை சாலக்குடி ஆற்றில் கட்டப்படுவது அறிவியலுக்கு ஒவ்வாதது என்று நாங்கள் எதிர்த்தோம். தேவையற்ற அணைகளும், அறிவியலுக்கு ஒவ்வாத மோசமான நீர் நிர்வாகச் செயல்பாடுகளும் வெள்ளத்திற்குக் காரணமாகும். மோசமான நீர் நிர்வாகம் வெள்ளத்திற்கே வழி வகுக்கும். பருவமழைக் காலம் வரும்போது, படிப்படியாக நீரைச் சேமிக்கத் தொடங்க வேண்டும். பருவமழையின் உச்சத்தில் திடீரென நீரை அணையில் குவிப்பது ஆபத்தானது. அதுபோல நீரை அணையிலிருந்து வெளியேற்றுவதும், நதியின் ஓட்டத்தையும், இயற்கையையும் பாதிக்காத வகையில் படிப்படியாகத் திறந்து விடப்பட வேண்டும். திடீரென அதிக நீரை ஒரே நேரத்தில் திறந்து விட்டதுதான் வெள்ளத்திற்குக் காரணமாகிப் பேரழிவை உண்டாக்கியது.

**கேள்வி : பெரு வெள்ளத்திற்குத் தமிழ்நாடு அரசு முல்லைப்பெரியாறு அணை நீரைத் திறந்து விட்டதுதான் காரணம் என்று கேரள அரசு குற்றம் சாட்டியுள்ளது சரியா?**

**பதில் :** ஒவ்வோர் அரசும் பக்கத்து மாநிலத்தைக் குறை கூறித் தப்பிக்கும் வெறுப்பு அரசியலைப் பின்பற்றுகின்றன. கேரள அரசு வெள்ள அழிவுக்கான பொறுப்பைத் தானே ஏற்க வேண்டும். அறிவியலுக்குப் புறம்பான நீர் நிர்வாகம்தான் வெள்ளத்திற்குக் காரணம். அணையில் நீரைச் சேமிக்கும் காலம், முறை, பருவமழை வந்தபின் நீரைத் திறந்துவிடும் முறை என யாவும் விஞ்ஞானப் பூர்வமாக நடக்காவிட்டால் வெள்ள அழிவு நிகழும்.

**கேள்வி : கண்மூடித்தனமாக, சட்டவிரோதமாகக் கட்டடங்கள் கட்டப்பட்டதுதான் கேரள வெள்ள அழிவுக்குக் காரணமா?**

**பதில் :** நிச்சயமாக. குறிப்பாகக் கேரளத்தில் சதுப்புநிலப் பாதுகாப்புக்கெனச் சிறப்புச் சட்டம் உள்ளது. (வயநாடு நெல் விளைச்சல் பகுதி பாதுகாப்பு விதி 2008). ஆனால், அதன்படி வீடுகளும், பிற கட்டடங்களும் கட்டுவதைக் கட்டுப்படுத்தவில்லை. நதிக்கரை ஓரமே வீடுகள் கட்டப்பட்டுள்ளன. நெல் வயல்கள் நீரின் வேகத்தையும், அழிவையும் தடுக்கும் பஞ்சு விரிப்பாகச் செயல்படுவன. ஆனால், அதை அழித்ததன் காரணமாக, நீர் எல்லா இடங்களிலும் வெள்ளமாக ஓடி, கான்கிரீட் கட்டடங்களைக்கூட அழித்துள்ளதைக் காண்கிறோம். மிகைநீர் வடிந்து செல்வதற்கான பாதைகள் யாவும் அடைக்கப்பட்டுவிட்டன.



**கேள்வி : உங்களது ஆலோசனைகளைக் கடந்த ஏழு ஆண்டுகளில் நிறைவேற்றியிருந்தால் இந்த அழிவு ஏற்பட்டிருக்காமல் தடுத்திருக்க முடியும் என்கிறீர்களா?**

**பதில் :** எனது ஆலோசனையை ஏற்பது, ஏற்காதது முதன்மைப் பிரச்சனையல்ல. கேரள அரசு

பொதுவான சுற்றுச் சூழல் விதிகளைச் சரியாக நடைமுறைப் படுத்தி யிருந்தாலே போதும், அழிவு இந்த அளவுக்கு இருந்திருக்காது.

**கேள்வி : உங்களது குழுவின் ஆலோசனை ஏற்கப் படாதது ஏன்?**

**பதில் :** சட்டத்தை மதிக்கும் ஆட்சியில் அது இயல்பாக நடந்திருக்கும். எங்களது அறிக்கை அரசியல் சாசனத்திற்கு உட்பட்டது. சுற்றுச்சூழல் விதிகள், இயற்கைச் சூழலைப் பாதுகாக்க வேண்டுமென்கின்றன. எங்கள் அறிக்கையில் ஏதாவது ஓர் அம்சம் இவற்றிற்கு எதிராக உள்ளதா என்பதை எதிர்ப்பவர்களிடமே கேட்டேன். நடைமுறைக்கு ஒவ்வாத எந்தப் பரிந்துரையும் அதில் இல்லை. ஆனால், அவை நடைமுறைப் படுத்த உகந்தவையல்ல என்றே கூறினர். இதை நான் சட்டத்தை மதிக்காத அரசின் மனநிலை என்கிறேன். இப்போக்கு, ஜனநாயகத்தை மதிக்காது அழிப்பது. கிராம உள்ளாட்சி அமைப்பு களைச் செயலற்றதாக்குவது.

சுயநலம் கொண்ட பேராசைக்காரர்கள் இயற்கைப் பாதுகாப்பு விதிமுறைகள் எதையும் விரும்புவதில்லை. கிராம உள்ளாட்சி அமைப்புகள் பேச்சுரிமையற்று முடக்கப்பட வேண்டுமென நினைப்பவர்கள். அவர்களுக்கு இயற்கை அழிவது, சுற்றுச்சூழல் கெடுவது பற்றியெல்லாம் அக்கறை இல்லை!

நாங்கள் எங்களது அறிக்கை உள்ளூர் மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டு, மக்களுக்கு வாசிக்கத் தரப்பட வேண்டுமென்றோம். அதனால் மலை சார்ந்த கிராமப் பஞ்சாயத்துக்கள் தமது கருத்தைச் சுதந்திரமாகக் கீழ் மட்டத்திலிருந்தே வெளிப்படுத்தும் வாய்ப்பு மக்களுக்குக் கிடைக்க வேண்டுமென்றோம். நாங்கள் அடிப்படை மக்கள் ஜனநாயகம் போற்றப்பட வேண்டுமென்றோம்.



அது நடக்கவில்லை. இப்போது இழப்பு களைச் சரி செய்யக் கேரள அரசு 26 ஆயிரம் கோடியை மத்திய அரசிடம் கேட்டுள்ளது.

**கேள்வி : கேரள நிதி அமைச்சர் "LOCAL DEMOCRACY & DEVELOPMENT - KERALA PEOPLE'S CAMPAIGN FOR DE CENTRALISED PLANNING" என்ற நூலை 20 ஆண்டுகளுக்கு முன் எழுதினார். அவர் கிராமசபை, கிராமப் பஞ்சாயத்துக்கள் வலிமை பெறுவதே ஜனநாயகம் என்று எழுதினார். பஞ்சாயத்து வளர்ச்சி அறிக் கையையும் சமர்ப்பித்தார். ஆனால், அது எதுவும் நடைமுறைக்கு வரவில்லை. ஏன்?**

**பதில் :** கேரளா, தாமஸ் பரிந்துரைகளைச் செயலாக்கினாலே போதும்.

**கேள்வி : நீங்கள் கஸ்தூரிரங்கன் அறிக்கையில் குறை காண்கிறீர்களா?**

**பதில் :** எங்கள் அறிக்கை நீர்வளம், நதிகள், சிற்றாறுகள் சிறப்பாக நிர்வகிக்கப்பட வேண்டு மென்கிறது. கஸ்தூரிரங்கன் அறிக்கை இதை அலட்சியப்படுத்திவிட்டது. அதனால் உண்டான விளைவுதான் நாம் இப்போது காணும் வெள்ள மும், பேரழிவும். கஸ்தூரிரங்கன் குழுப் பரிந்துரை கள்கூடச் சரியாக நடைமுறைப்படுத்தப்பட வில்லை. கஸ்தூரி ரங்கன் அறிக்கை பெரிதும் வனத்துறையினர் அதிகாரங்களை அதிகப் படுத்தவே உதவுவதாக இருந்தது. வனத்துறை வசம் இருந்த காடுகளை அது 'இயற்கை நிலப்பரப்பு' என்றது. தனியார் வசமிருந்த காடு களைப் 'பண்பாட்டு நிலப்பரப்பு' என்று முட்டாள் தனமாக வகைப்படுத்தி அழிப்புக்கு உதவியது. இயற்கை யார் கையில் உள்ளது என்பது பற்றிய அக்கறையுடன் அணுகுவது தவறானது.

**கேள்வி : இதுபோன்ற இயற்கைப் பேரழிவு மீண் டும் கேரளாவுக்கும், பிற மாநிலங்களுக்கும் உண் டாகலாம் என்கிறீர்களா?**

**பதில் :** ஆம். இத்தகைய அழிவு மீண்டும் மீண்டும் நிகழ வாய்ப்புள்ளது. தீவிரமான மாற்று நடவடிக்கைகளை உடனடியாகத் தொடங்குவது அவசியம். லாபப் பேராசை, நுகர்வு வெறி காரண மாக அரசுகள் அலட்சியமாக இருந்துள்ளன. சுற்றுச்சூழல் பாதுகாப்பு வழிகாட்டல்கள் எதையும் பொருட்படுத்தவில்லை. மத்திய அரசு பசுமை மேலாயம் விதிப்படிச் செயல்பட அனுமதிக்க வில்லை. எனவே, மேற்குமலை சார்ந்தே வாழும் தென்னக மாநிலங்கள், மேற்குத் தொடர்ச்சி மலையே தமது வாழ்வின் ஆதாரம் என்பதை உணர்ந்து இனியாகிலும் செயல்பட வேண்டும். ●

கட்டுரை

‘பசுமைப் புரட்சி’ என்றால் விவசாயப் புரட்சி. மத்திய உணவு அமைச்சராக ‘பாரத ரத்னா’ சி. சுப்பிரமணியம் அவர்கள் இருந்த போது, விவசாய விஞ்ஞானி டாக்டர் எம்.எஸ். சுவாமிநாதன் அவர்களை அழைத்து, விவாதித்துப் பொறுப்பு களை ஒப்படைத்து அமோக மகசூல் தரக்கூடிய நெல், கோதுமை முதலிய பயிர்களை உருவாக்கிப் பசுமைப் புரட்சியைத் தொடங்கி வைத்தார்.

உருவாக்கியவர் திரு. வர்கீஸ் குரியன் என்ற கேரள மாநிலத்தைச் சேர்ந்த நிபுணர்.

திரு. குரியன், கேரள மாநிலம் கள்ளிக்கோட்டையில் 26.11.1921–ஆம் ஆண்டு பிறந்தார். தமிழகத்தில் ஈரோடு மாவட்டம் கோபிசெட்டி பாளையத்திலுள்ள ‘வைர விழா மேல் நிலைப்பள்ளியில்’ கல்வி பயின்றுள் ளார்.

குஜராத்திலுள்ள அகமதாபாத் நகரில் ‘அமுல்’ என்ற கூட்டுறவுப் பால் விற்பனை நிறுவனத்தை உருவாக்கி,

# வெண்மைப் புரட்சியாளர்

# வர்கீஸ் குரியன்






அதன்மூலம் அமுல் பால் இந்தியா முழுவதும் ஒரே விலையில் கிடைக்க, ஒரே தரத்தில் விற்பனை செய்ய வழி வகை செய்து அந்நிறுவனத்தை வெற்றிபெறச் செய்தார்.

இந்தியாவிற்கு அன்றைக்குப் பஞ்சம் ஏற்படாமல், பட்டினிச்சாவு இல்லாமல் பசுமைப் புரட்சிதான் தடுத்தது.

இதேபோல, பால் பற்றாக்குறை உள்ள நமது தேசத்தில் பால் புரட்சி யான ‘வெண்மைப் புரட்சி’யை

அவரைப் பற்றிய தகவல்கள் நமது நாட்டு மக்களுக்கு மிகக் குறைவாகவே தான் தெரியும். ஆனால், ஊழல் அரசியல்வாதிகளைப் பற்றி, சினிமா நடிகர் நடிகையரைப் பற்றி




ஏராளமான தகவல்களை இன்றைய இளைய தலைமுறை தெரிந்து வைத்துள்ளது. இது நாட்டுக்கு நல்லதல்ல.

வர்கீஸ் குரியன் ஒரு வரலாற்று நாயகன் என்பதை இந்திய வரலாறு படிக்கிற மாணவர்கள்கூட நினைவு கூர்வார்களா என்பது சந்தேகம். வர்கீஸ் குரியன் 91 ஆண்டுகள் வாழ்ந்தவர். 'வெண்மைப்புரட்சியின் தந்தை' என்று பாரத நாடு அவரைப் போற்றுகிறது. அதுவும் தனியார் நிறுவனத்தை அவர் உருவாக்கவில்லை. கூட்டுறவு நிறுவனமாக அமுல் என்ற பால் நிறுவனத்தை உருவாக்கிப் பிரபலப்படுத்தி மக்களுக்குச் சேவை செய்ய வைத்தார்.

அதில் ஈட்டிய வருமானம் அனைத்தும் தனியாருக்குச் செல்லாமல், அந்த நிறுவனத்திற்குச் சொந்தமாக்கியவர். இது ஈட்டுகிற வருமானத்தில் மேலும் மேலும் அது வளர்கிறது. அதேசமயம் இது கிராமப்புற விவசாயப் பின்புலத்தில் அமைந்திருப்பதால், கிராமப்புறத்தில் வேலை வாய்ப்பைத் தருகின்ற தொழிற்சாலையாக இந்த அமுல் நிறுவனம் உருவாகியிருக்கிறது.

உலகத்திலேயே மிகப்பெரிய பால் அபிவிருத்தித் திட்டத்தை உருவாக்கியவர் என்று இவரைச் சொன்னால் அது மிகையல்ல. இந்தியாவிலுள்ள 160 லட்சம் பால் உற்பத்தியாளர்களின் வாழ்க்கைத் தரத்தை மேம்படுத்தியவர். பால் உற்பத்தியில் இந்தியா முதலிடம் பிடிப்பதற்குக் காரணமாக இருந்தவர்.

கிராமப்புறத்தில் வசிப்போருக்கு அதிக வருமானம் தரக்கூடிய வாய்ப்பை இந்த நிறுவனம் வழங்கி வருகிறது. அதேபோல அவர்களுக்குத் தேவையான கடன் வசதியையும் செய்து கொடுத்திருக்கிறது. சத்துணவு, கல்வி, ஆரோக்கியம், ஆண் – பெண் சமத்துவம், சாதி மறுப்பு, ஜனநாயக அம்சங்கள் அனைத்தையும் போற்றி வளர்க்கக்கூடிய நிறுவனமாக இந்தப் பால் நிறுவனம் பரிணாம வளர்ச்சி அடைந்துள்ளது.

பால் பற்றாக்குறையாக இருந்த நமது தேசத்தில் இரு மடங்கு உற்பத்தியை ஏற்படுத்தி, ஒவ்வொரு தனி மனிதருக்கும் இரு மடங்கு பால் கிடைக்கும்படியாக 30 ஆண்டுகளில் இந்நிறுவனம் உற்பத்தியை விரிவாக்கியுள்ளது. தேசம் முழுவதும் அமுல் பால் நிறுவனத்தின் கூட்டுறவுக் கிளைகள் பெருக இவர்தான் காரணம்.

இந்நிறுவனத்தின் பால் பொருள்கள் நுகர்வோரின் 80 சதவிகித வருமானம் பால் உற்பத்தி விவசாயிகளுக்கே சென்று சேர்கிறது. அதேபோல இந்நிறுவனத்தின் பால் பொருள்கள், அவற்றை உருவாக்குவதற்கான தொழில் நுட்பம் அனைத்தும் அமுல் பால் நிறுவனத்திற்குப் புகழ் சேர்த்துள்ளன. பால் கூட்டுறவு நிறுவனங்களைச் சாதி, மத அடிப்படைகளைத் தாண்டி கிராம அபிவிருத்திக்காகவே உருவாக்கியவர் என்ற பெருமை இவருக்கு உண்டு.

பிரதமர் லால்பகதூர் சாஸ்திரி, 1965–ஆம் ஆண்டு குஜராத்தில்

அமுல் பண்ணையைப் பார்வையிட்டபின், இந்தியா முழுவதும் அமுல் பண்ணைத் திட்டத்தைத் தொடங்க நடவடிக்கை எடுக்குமாறு திரு. குரியன் அவர்களைக் கேட்டுக் கொண்டார்.

உலகத்திலேயே அமுல் நிறுவனம் தான் பால் பவுடரை உண்டாக்கிய முதல் நிறுவனம். அதுவும் எருமைப் பாலிலிருந்து இது உருவாக்கப்பட்டது. வழக்கமாகப் பசும் பாலில் உருவாக்குவதை நிறுத்திவிட்டு, எருமைப்பாலில் உற்பத்தி செய்தது ஒரு மிகப்பெரிய புரட்சியாகும். இதன் விளைவாக, பால் உற்பத்தியாளர்கள் அனைவரையும் ஓரணியில் சேர்த்தவர் திரு. வர்கீஸ் குரியன் அவர்கள். இடைத் தரகர்களை நீக்கி, அமுல் நிறுவனம் பால் உற்பத்தியாளர்களுக்கு ஏற்ற, இறக்கம் இல்லாத சீரான வருமானத்தை வருடம் முழுவதும் உருவாக்கித் தந்தது.

அமுல் நிறுவனத்தின் பாலின் தரம் தனியார் நிறுவனங்களின் பால் தரத்தைவிட மிக உயர்வானது. பம்பாய் நகரத்திலுள்ள பால் நுகர்வோருக்குத் தங்கு தடையில்லாமல் பால் கிடைத்தது என்றால், அதற்குக் காரணம் இந்த அமுல் நிறுவனம் தான். ஆமதாபாத் – மும்பைக்கான பால் வீதிதான் அதற்குக் காரணம்.

50 ஆண்டுக்காலம் இந்த அமுல் நிறுவனத்தைக் கட்டிக் காத்தவர் வர்கீஸ் குரியன். 9 பிரதமர்களைச் சந்தித்தவர். இவரைப்பற்றிச் சுருக்கமாகச் சொல்வதென்றால், 'பாலில் நீந்துகின்ற முதலை' (Milk Crocodile) என்றுதான் சொல்ல வேண்டும். ஏனெனில், பன்னாட்டு நிறுவனங்கள் அமுல் நிறுவனத்தை அசைக்க முடியவில்லை. அதேபோல அதிகார வர்க்கமும், அரசியல்வாதிகளும் இவர் உருவாக்கிய கூட்டுறவுப் பால் பண்ணையை விரிவாக்கம் செய்வதைத் தடுக்க முடியவில்லை.


திரு. படேலுடன் மகள் மணிபென்

இவர் பால் புரட்சி செய்தவர் மட்டுமல்ல, சமையல் எண்ணெயில் சுய தேவையை நமது நாடு நிரப்புவதற்குக் காரணமானவர். கூட்டுறவு இயக்கத்தின் முன்னோடி என்று இவரைச் சொன்னால், அது மிகையல்ல. கூட்டுறவு இயக்கம்தான் வெகுஜன உற்பத்தி இயக்கம். இதன்மூலம் இந்தியாவில் லட்சக்கணக்கான ஏழைப் பால் உற்பத்தியாளர்கள், வறுமையிலிருந்து விடுவிக்கப் பட்டார்கள்.

வெண்மைப் புரட்சியாளர் வர்கீஸ் குரியன் தேசபக்தி மிக்கவர். குஜராத் ஆமதாபாத்தில் இருந்தபோது, சர்தார் வல்லபபாய் படேலை நன்கு அறிந்தவர். அவரைப் போற்றியவர். குரியன் எழுதிய "எனக்கும் ஒரு கனவு இருந்தது" என்ற சுய வரலாற்று நூலில் படேலின் மகள் மணிபென் படேலைப் பற்றி அவர் எழுதிய குறிப்பைப் படித்தவர்களின் கண்கள் கலங்கும். அந்தக் குறிப்பினை, 14.11.2018 'தினமணி' நாளிதழில் மகளிர் மணி பகுதியில் திரு. சத்தீஷ் என்பவர் வெளியிட்டுள்ளார். வாசகர்கள் அதனைப் படித்துப் பாருங்கள்.

இந்திய அரசின் பால் நிறுவனம், திரு. குரியன் அவர்களின் பிறந்த நாளான நவம்பர் 26–ஆம் தேதியை, 'தேசியப் பால்வள நாளாக'ச் சென்ற 2014–ஆம் ஆண்டு முதல் கொண்டாடி வருகிறது. நமது இந்திய அரசு, அவருக்கு 'பத்மஸ்ரீ', 'பத்மவிபூஷண்' உள்ளிட்ட விருதுகளைத் தந்து சிறப்பித்துள்ளது.

**– ந.நி.**

*10–ம் பக்கத் தொடர்ச்சி*

பாராம். அந்தக்கல் பாறை, பக்தர்களின் பார்வைக்கு இப்போதும் வைக்கப்பட்டுள்ளது.

அந்த மசூதியை பாபா ‘துவாரக மைய’ என அழைத்திருக்கிறார். துவாரகை பீடம் சங்கராச்சாரியார் சொரூபானந்த சரஸ்வதிக்கு இது சம்மதமில்லை. அதேசமயம் மத்திய அமைச்சர் உமா பாரதி, பாபா மீதுள்ள பக்தியை பகிரங்கமாக அறிவித்தார். சங்கராச்சாரியார் பாபாவை வழிபட வேண்டாமென்றும், அவர் ஒரு முஸ்லீம் என்றும், இறைச்சி சாப்பிடுபவர் என்றும் கூறியிருந்தார்.

ஆனால், இந்து பக்தர்கள் இதற்குச் செவிசாய்க்கவில்லை. அவர் இந்துவா? முஸ்லீமா? என்பது யாருக்கும் தெரியாது. இரண்டு மதங்களின் சடங்குகளைப் பின்பற்றினார் எனக் கூறலாமே தவிர, ஒரு மதத்தைச் சார்ந்தவர் எனக் கூற முடியவில்லை.

ஒரு ஹிந்துப் பூசாரியிடம் பாபாவே தன்னை ஒரு ஹிந்துக் குடும்பத்தில் பிறந்தவரென்றும், ஆனால் ஒரு முஸ்லீம் குடும்பம் தன்னை வளர்த்ததாகவும் கூறியுள்ளதாகச் செய்தி உள்ளது. இன்னொரு செய்தி, தனது முஸ்லீம் பெற்றோர்கள் தன்னை ஒரு ஹிந்துக் குடும்பத்தாரிடம் விட்டு விட்டுப் போய்விட்டார்கள் என்று உள்ளது.

ஆனால், அவருடைய பிறப்பைப்போலக் கொள்கையில் இதுபோலக் குழப்பங்கள் எதுவுமே இல்லை. நம்பிக்கை, பொறுமை இவை இரண்டும் தான் அவருடைய கொள்கையின் முக்கிய அம்சங்கள். சீரடிக்குப் 16 வயதில் வந்தவர். பின்னர் 4 ஆண்டுகள் எங்கோ போய்விட்டார். மீண்டும் வந்தார். பகல் முழுவதும் வேப்ப மர நிழலில் அமர்ந்திருந்தார். அவருடைய சொத்துக்கள் ஒரு தகரக் குவளை, சிறு கைத்தடி, தனது தலை முடியைக் கட்டி வைத்த தலைத்துணி. ஒரு சாக்கு மீதுதான் அமர்ந்திருப்பாராம். கால்களுக்குச் செருப்பு இல்லை.

பிரதமர் மன்மோகன்சிங்கின் பிரதமச் செயலாளர் திரு. கே.எம். சந்திரசேகர், இவரைப் பற்றிக் கூறுகையில், பல முறை சீரடிக்கு வந்ததாகவும், “நான் இருக்க நீ ஏன் பயப்படுகிறாய்?” என்கிற இந்த வாசகங்கள், அவரைத் தெளிவு படுத்தியதாகவும் கூறியுள்ளது நினைவுகூரத் தக்கது.

பாபாவின் கொள்கை கடவுள் ஒருவரே என்பதும், ஜீவாத்மா, பரமாத்மா என இரண்டு இல்லை என்பதும், அத்வைதமே அது என்றும், அதுவே சூபிசம் எனப்படும் சித்தர் கொள்கை என்றும் சந்திரசேகர் உணர்ந்துள்ளதாகக் குறிப்பிட்டுள்ளார்.

பாபாவின் மதக் கோட்பாடு, சர்வமதக் கோட்பாடுதான். ஜாதி, சமூகம் அனைத்தும் அதில் சங்கமிப்பவைதான்.

ராம நவமியையும், பாபா கொண்டாடினார். இஸ்லாமிய ஈத் பண்டிகையையும் கொண்டாடினார்.

சீரடி சாயிபாபாவின் நம்பிக்கைக்கு உரிய அப்துல்லா பாபாவின் சமாதி, பாபா கோயிலுக்கு வெளியே உள்ளது. அவர் பாபாவைத் தனது தந்தையாகப் பாவித்தவர். பாபாவைக் குரானை ஓதச்செய்து கேட்பாராம். அல்லாதான் பாபாவை நமக்காக இங்கு அனுப்பியவர் என்பாராம்.

அப்துல்லா பாபாவின் பேரன் ஹமீத் பாபா, பக்தர்களைத் தனது தாத்தா சமாதிக்கும் வருமாறு அழைப்பு விடுக்கிறார். இவர்தான் பாபா சமாதியின் கண்காணிப்பாளராக உள்ளார்.

சமாதிக் கோயிலுக்குப் பக்கத்தில் உள்ள பாபா உருவாக்கிய பூங்கா ஒன்று உள்ளது. அதற்கான தண்ணீருக்காக பாபா ஒரு கிணறு தோண்டியுள்ளார். அந்தக் கிணற்றுத் தண்ணீருக்கு அனைத்து வியாதிகளையும் குணப்படுத்துகிற சக்தி இருப்பதாக நம்பப்படுகிறது.

அப்துல்லா பாபாவின் சமாதிக்குப் பக்கத்தில் சாய் அருங்காட்சியகம் உள்ளது. அதில் பாபா உபயோகப்படுத்திய பிச்சைப்பாத்திரம், தண்ணீர்ப் பானை, ஆட்டுக்கல் என்பவை உள்ளன.

பக்தியின் மூலம் கர்ம வினைகளை அரைத்துப் பொடியாக்கிவிடலாம் என்பதாக ஆட்டுக்கல்லுக்குத் தற்குறிப்பேற்ற அணி விளக்கம் கூறப்படுகிறது.

147 நாடுகளில் சாயி பக்தர்கள் உள்ளனர். அமெரிக்காவில் மட்டும் 80 சாய் மந்திர்கள் உள்ளன. மலேசியாவில் 22, ஆஸ்திரேலியாவில் 9, இங்கிலாந்தில் 6 உள்ளன.

சாய் மந்திருக்குச் சில கிலோமீட்டர் தூரத்தில் சாயிநாத் பொது இலவச மருத்துவமனை செயல்படுகிறது. ரூ. 10 செலுத்திச் சிகிச்சை பெறலாம். மருந்து இலவசம். அறுவைச் சிகிச்சையும் இலவசம். டாக்டர் மைதிலி இதனைக் கூறுகிறார்.

தினசரி 1000 புற நோயாளிகளுக்குச் சிகிச்சை தரப்படுகிறது. 300 படுக்கை வசதியுடன் இது உள்ளது. நோயாளிகளை அழைத்துவர பஸ் வசதி உள்ளது. இங்குள்ள மருத்துவர்கள் பாபாவை வழிபடுகிற பக்தர்கள்.

மூளைப் புற்று நோயால் பாதிக்கப்பட்ட 5 வயதுச் சிறுவனுக்கு அறுவைச் சிகிச்சை நடக்க உள்ளது என்று அவனுடைய தாய் சவிதா லண்டே நம்பிக்கையோடு பேசுகிறார். டாக்டர் ராம்நாயக்

தினசரி 30 அறுவைச் சிகிச்சைகள் செய்வதாகக் கூறுகிறார். காலை 8 மணி முதல் அதிகாலை 2 மணி வரை களைப்பில்லாமல் பணி செய்ய பாபாதான் காரணம் என்கிறார். 16 ஆண்டு களுக்கு முன்பு இங்கு பணியில் சேர்ந்தவர் அவர். தினசரி 18 மணி நேரம் பணி செய்தாலும் களைப்பில்லை என்கிறார்.

'பிரசாதாலயா' என்ற உணவுக்கூடத்தில் 70 ஆயிரம் பேருக்கு இலவச உணவு தினசரி வழங்கப்படுகிறது. 7.5 ஏக்கர் பரப்பில் அமைந் துள்ள இவ்வளாகத்தில், ஒரே சமயத்தில் 6 ஆயிரம் பேர் அமர்ந்து சாப்பிடலாம். 10 ஆண்டு களுக்கு முன்பு இது செயல்படத் தொடங்கியது. காலை 10 மணி முதல், இரவு 10 மணி வரை இடைவேளை இல்லாமல் இந்த அன்னதான ஆலயம் செயல்பட்டு வருகிறது. மணிக்கு 21 ஆயிரம் சப்பாத்திகள் இங்கு தயார் செய்யப் படுகின்றன. இதற்காக ஆண்டுக்கு ரூ. 15 கோடி செலவிடப்படுகிறது.

திருப்பதி லட்டு போல, சீரடி லட்டு பிரபல மானது. தனிச்சுவை கொண்டது. தினசரி 20 ஆயிரம் லட்டுகள் விற்பனையாகின்றன. இலவச மாக 50 ஆயிரம் பாக்கெட் பூந்தி பக்தர்களுக்குத் தரப்படுகிறது.

அங்கு 14 ஏக்கரில் உள்ள தங்கும் விடுதியில் 1500 அறைகள் உள்ளன. குளிர் சாதன அறை யின் வாடகை ரூ. 500. மற்ற அறைக்கு வாடகை ரூ. 200. இதற்கான டிரஸ்டைக் கட்டமைத்த சென்னைவாசி தொழிலதிபர் கே.வி. ரமணி, ரூ. 112 கோடி தானம் தந்துள்ளார். மாணவர்களுக்கு உதவித்தொகை தருகிறது இந்த டிரஸ்ட். 30 ஆயிரம் மாணவர்கள் பயன்பெறுகிறார்கள். 40 ஆயிரம் மருத்துவ மாணவர்களுக்கு ஆண்டு தோறும் இந்த டிரஸ்ட் உதவி செய்து வருகிறது.

சீரடியில் சர்வதேச விமான நிலையம் உருவாக்கப்பட்டுள்ளது. சந்தோஷ் காடே தமது 18 ஏக்கர் பூமியை இதற்காக வழங்கியுள்ளார். ரூ. 3 லட்சம் வீதம் நட்ட ஈடு இவருக்குத் தரப்பட்டதை மகிழ்ச்சியாகப் பெற்றுக்கொண்டார். பூமியை மலிவு விலைக்குத் தந்த சந்தோஷ், 1300 ஏக்கர் பரப்புள்ள இந்த விமான நிலையத்திற்கும், 15 கி.மீ. தூரத்தில் உள்ள சாயி மந்திருக்கும் பயணிகள் சிற்றுந்து நடத்துவதற்கு இவரே முன்வந்து ஓட்டுநராகவும் செயல்பட்டு வருகிறார். மராட்டிய அரசு இந்த விமான நிலையத்தை ரூ. 350 கோடி செலவில் உருவாக்கியுள்ளது.

நமது பாரத தேசத்தை இஸ்லாமிய தேசங் களான பாகிஸ்தான், பங்களாதேசம் போல, நாம் ஹிந்து மத தேசமாக நமது அரசியல் சாசனத்தில் அறிவிக்கவில்லை. நமது பாரதத்தை மதச்சார்பற்ற குடியரசாக அறிவித்துள்ளோம். அதுவும் சமூக நீதியைக் காக்கும் சமதர்மக் குடியரசாக அறிவித் துள்ளோம்.

மதச்சார்பற்ற குடியரசின் முக்கிய அம்சமே, நமது அரசும் ஆட்சியும் குறிப்பிட்ட ஒரு மதத் திற்குச் சார்பாகச் செயல்படாது என்பதுதான். அதனால்தான், நமது குடியரசுத் தலைவர்களான ராஜேந்திர பிரசாத், ஜாஹிர் உசேன், பக்ருதீன் அலி அகமத், ஜெயில்சிங், அப்துல் கலாம் ஆகி யோர் இருந்துள்ளனர். பாகிஸ்தானில் அதிபராக இஸ்லாமியரைத் தவிர, இன்ன பிற மதங்களின் தலைவர்கள் அப்பதவிக்கு வரமுடியாது.

இத்தகைய மதச்சார்பற்ற தேசத்தில் பஞ்சாப் சீக்கியப் பொற்கோயில் குருத்வாரா, திருப்பதி மலையப்பசாமி கோயில், டில்லி ஜும்மா மசூதி, தேவாலயம், பேலூர் ராமகிருஷ்ணா மடம் முதலிய வழிபாட்டுத் தலங்கள் அனைத்துமே அந்தந்தச் சமயத்தாரால் போற்றப்படுகின்றன.

இப்பின்னணியில் சீரடி சாயிநாதர் கோயில் மதச்சார்பற்ற நமது தேசத்திற்கு 100 சதப் பொருத் தத்தோடு அமைந்துள்ளது என்பதைக் காணத் தவறக் கூடாது. அதுவும், அது கோயில் அல்ல. புனிதர் ஒருவரின் சமாதிதான். கோயிலுக்குச் சமமாக எல்லாச் சமயத்தாராலும் வழிபடப்படு கிறது.

அதனுடைய வயது 100 ஆண்டுகள்தான். நமது அரசியல் சாசனத்தின் வயது 71. சமாதியில் வழிபாடு செய்யப்படுகிற மகான் ஏசுநாதரைப்போல ஏழைகளின் நோய்களைக் குணப்படுத்தி வந்த ஒரு பக்கிரி. நபிகள் நாயகத்தைப்போல எளிமை யிலும் எளிமையாக வாழ்ந்தவர். பகவான் ராம கிருஷ்ணரைப் போல ஆன்ம சக்தி பெற்றவர். பரமாத்மாவை அடைவதற்காக ஜீவாத்மாவைச் செலவிடாது, பரமாத்மாவேதான் ஜீவாத்மா என்கிற அத்வைதச் சித்தாந்தமே இவருடையது.

பக்தியைப் பெருக்குவதைவிட, பயத்தைப் போக்கிவிட்டாலே சகலமும் சரியாகிவிடும் என்ப தைக் காட்ட, 'நாமிருக்க பயமேன்' என்று தன் னைச் சார்ந்தவருக்கு நம்பிக்கை நட்சத்திரமாகப் பிரகாசித்தவர் பாபா.

அதனைப் பற்றிய புரிதலால்தான் நாள் தோறும் சாயி அன்பர்கள் பெருகி வருகிறார்கள். சீரடி கிராமமே சர்வதேச விமான நிலைய வசதி களோடு வளர்ந்துள்ளது. ஆன்மிகத்துக்கான சர்வதேசத் தலைநகரமாகவும் திகழ்கிறது.

**– ந.றி.**



# காம்ரேட் பாலன்

காம்ரேட் பாலதண்டாயுதம், அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் மாணவர். 1939-இல் நடந்த மாணவப் போராட்டத்திற்குத் தலைமை தாங்கியவர். அப்போது துணைவேந்தராக இருந்தவர் Right Honourable சீனிவாச சாஸ்திரி.

பாலன், துணைவேந்தரை வைத்துக்கொண்டு அப்போராட்டத்தைப் பற்றிப் பேசியபோது, “Mr. Srinivasa Sastri is neither right nor honourable” என்று பேசிக் கைதட்டல் வாங்கினார்.

காம்ரேட் பாலன் பொள்ளாச்சிக்காரர். அதுவும் அருட்செல்வர் வீட்டிற்கு அடுத்த வீதிக்காரர். அருட்செல்வ ரோடு மிக நெருங்கிய பழக்கமுடையவர். ஒரு வகையில் அன்றைக்கு இளைஞராக இருந்த அருட்செல்வர், தேசியவாதியாகவும் தெய்வ நம்பிக்கை உள்ளவராகவும் இருந்தார். அவரை, தோழர் பாலன், ஒரு கம்யூனிஸ்ட் டாகக் குணமாற்றம் செய்கிற போதனைகளைக் கூறிவந்தார். அருட்செல்வரோ, காந்தியத்தில் கரைந்துவிட்டவர். காம்ரேட் பாலன் மார்க்சியத்தால் நிறைந்துவிட்டவர்.

காம்ரேட் பாலன் ஆயுள் தண்டனைக் கைதியாக இருந்தபோது, தமிழில் புலவர் பட்டத்திற்குத் தேர்வு எழுத எம்.எல்.ஏ. பரிந்துரை தேவைப்பட்டது. அப்போது பொள்ளாச்சி எம்.எல்.ஏ.வாக இருந்த அருட்செல்வர்தான் அந்தப் பரிந்துரையை பாலனுக்குச் செய்து, புலவர் பட்டத் தேர்வெழுத உதவினார். அதுமட்டுமல்ல, தோழர் பாலன் இருந்த மத்தியச் சிறைச்சாலையில் அவருடைய சிறை அறையில் செய்தி கேட்பதற்காக அவருக்கு டிரான்சிஸ்டர் ஒன்றை அருட்செல்வர் வழங்கினார்.

அருட்செல்வரும், காம்ரேட் பாலனும் சகோதரர்களைப் போலப் பழகியவர்கள். விமான விபத்தில் அவரு டைய மரணம் சம்பவித்தபோது, அவருடைய பிரேதத்தைக் கண்டுபிடிப்பதற்காகச் சென்னையில் அருட்செல்வர், அவருடைய மனைவி துல்ஜாராணியை விமானத்தில் அனுப்பித் தேடிக் கண்டுபிடிக்க உதவினார்.

அவருடைய மரணத்தால் அருட்செல்வர் மனம் கலங்கினார். பொள்ளாச்சி ஒரு சிந்தனையாளரை இழந்துவிட்ட துயரத்தில் அஞ்சலி செலுத்தினார்.

காம்ரேட் பாலனைப் பற்றி எழுத்தாளர் ஜெயகாந்தன் ‘கண்ணதாசன்’ இதழில் 45 ஆண்டுகளுக்கு முன்பு 1973-இல் எழுதிய கட்டுரைகளை ‘ஓம் சக்தி’ வாசகர்களுக்கு வழங்க வேண்டுமென்று விரும்பி, ஜெயகாந்தனின் இளம் **நண்பர் தோழர் எழில்முத்துவை** அணுகியபோது, அவர் அனுப்பிவைத்த ஜெயகாந்தனின் நினைவுச் சித்திரத்தின் முதல் பகுதியை வெளியிடுவதில் ‘ஓம் சக்தி’ பெருமிதமடைகிறது.

– இ.ஆர்.

**அன்புள்ள காம்ரேட் பாலன்,**

இது நான் உங்களுக்கு எழுதும் கடிதம் அல்ல, உங்க ளோடு நான் மானசீகமாகப் பேசும் மொழிகளே இவை.



இந்த ஒன்றரை மாத காலமாய் நான் உங்களைப்பற்றி அடிக்கடி நினைக்கிறேன். இதற்கு முன் னாலும் நினைப்பதுண்டு. அது

ஜெயகாந்தன்

போலவே, ஆனால் சற்று அதிகமாகவே இப்போது நினைக்கிறேன். உங்களைப் பற்றிய எனது நினைவுகளில் துன்பத்தின் கறைகள் ஏதுமில்லை. சோகத்தின் கனம் இல்லை. எதையோ இழந்து விட்டதாக ஏக்கமில்லை. உங்களைப் பற்றி நினைக்கையில் என் சித்தத்தில் தோன்றுவதெல் லாம், ஒரு மரணத்தைப் பற்றிச் சொல்ல வருகிற பொழுதுகூட உங்கள் முகத்தில் மாறாது குடி கொண்டிருந்த மலர்ச்சியே. அந்த மலர்ச்சியுடன் உங்களை நினைக்கிறேன்...

உங்களோடு ஒருமணி நேரம் பழக வாய்ப்புக் கிடைத்த ஒரு மனிதன்கூட உங்களிடமிருந்து ஏதேனும் ஒரு தன்மையை கிரகித்துக் கொள் வான். உங்கள் பண்புகள் பிறரிடம் ஊடுருவத்தக்க வலிமையோடு உங்களை அறியாமலேயே உங் களிடமிருந்து வெளிப்படுவதை நான் கண்டிருக் கிறேன். அப்படிப்பட்ட பண்புகள் பலவற்றை என்னையறியாமலேயே உங்களிடமிருந்து நான் சுவீகரித்துக் கொண்டிருக்கிறேன்.

கற்றுத் தருகிற ஆசானாக நீங்கள் இல்லா மலும், கற்றுக் கொள்கிற சீடனாக நான் இல்லா மலும் தோழமையுடனும், சமத்துவத்துடனும் நீங்கள் எனக்குக் கற்றுத் தந்ததையும், நான் உங் களிடமிருந்து கற்றுக் கொண்டதையும் எப்போதும் காப்பாற்றிக் கொண்டிருக்கிறேன். காப்பாற்றி வரு கிறேன். ஏதேதோ காரணங்களுக்காக, நியாயங் களுக்காக, அரசியலுக்காக, கட்டுப்பாடுகளுக் காக, போர்த் தந்திர உபாயங்களுக்காக நீங்களே அவற்றை மறுத்தபோதிலும் உங்களோடு முரண் பட்டேனும் அந்தப் பண்புகளைப் பாதுகாப்பதுதான் உங்களுக்கு நான் காட்டுகிற நன்றியுணர்ச்சி யாகும் என்று நம்புகிறேன்.

காம்ரேட் பாலன், சென்ற மாதம் முப்பத்தி யோராம் தேதி காலை நீங்கள் இறந்து விட்டதாக எல்லாரும் எனக்குச் சொன்னார்கள். எல்லாரும் அப்படிச் சொன்னது எனக்கு வருத்தத்தைத் தந்தது. மனம் கலங்கிற்று. மரணம் என்கிற செய்தி யைக் கேட்ட மாத்திரத்தில் மனித உணர்ச்சிகள் மேற்கொள்கிற புறச்சடங்குகள் அவை. ஒவ்வொரு இனிய மனிதனைப் பற்றியும் ஏதோ ஓர் நாள் நாம் கேட்கப் போகிற விரும்பத் தகாத வதந்திகளில் ஒன்று மரணம்.

உங்களை ஏற்கனவே நான் பார்த்த மாதிரி யாக மறுபடியும் பார்க்க முடியாது என்று இவர்கள் சொல்லட்டும். உங்களை எவ்வளவோ காலம் நான் பார்க்காதிருந்திருக்கிறேன். பத்தாண்டுகள் நீங்கள் சிறையிலிருந்த பொழுது – கோயம் புத்தூரிலும், புதுக்கோட்டையிலும் நீங்கள் இருந்த காலத்தில் – நான் பல முறை அங்கு வந்தும் உங்களைப் பார்க்காமல் போயிருக்கிறேன். அதற் காக நீங்கள் குறை பட்டுக்கொண்டு எனக்குக் கடிதம் எழுதியிருக்கிறீர்கள்.

நாம் இருவரும் அரசியல் காரணங்களுக்காக மனஸ்தாபம்கொண்டு – அந்த மனஸ்தாபம் எவ் வளவு பெரிய பொய்யென்று நம்மிருவருக்கும் தெரியும் – சென்னையிலேயே இருந்து கொண்டு கடந்த மூன்றாண்டுகளில் ஒருவரைத் தேடி ஒருவர் போகாத ஊடலுடன், எங்கெங்கு சந்திக்க முடியுமோ அந்தப் பொது நிகழ்ச்சிகளிலெல்லாம் அன்போடு சந்தித்து உரையாடி, அடுத்த நாள் உங்களைத் தேடி நான் வருவதாகவோ அல்லது என்னைத் தேடி நீங்கள் வருவதாகவோ ஒப்பந்தும் செய்து கொண்டு, வேண்டுமென்றே அதை மீறிக் கொண்டு விலகியிருந்தோமே, அப்பொழுதெல் லாம் உங்களை நான் பார்க்காமலிருந்த தில்லையா? அது போல்தான் நான் இப்பொழுதும் பார்க்காமலிருப்பதாக நினைக்கிறேன்.

ஆனாலும், நீங்கள் மறைந்து விட்டீர்கள் என்பதை நான் நம்புகிறேன். மறைதல் வேறு, மரணத்தில் கரைதல் வேறு.

காம்ரேட் பாலன், தமிழ் மொழியே ஒரு தத்துவமாக இருக்கிறது பார்த்தீர்களா? தோற்றம் – மறைவு என்றே பிறப்பையும் இறப்பையும் இந்தப் பாஷையில் சொல்லுகிறார்கள். நீங்கள் பிறந்தீர்கள் இறந்தீர்கள் என்று சொல்லுவதைவிட, ஒரு நாள் காலை என் முன்னே நீங்கள் தோன்றினீர்கள் இப் போது மறைந்திருக்கிறீர்கள் என்று கொள்வதே எனக்குப் பொருத்தமாயிருக்கிறது. உங்களைப் பற்றி நானறிந்த உண்மை அவ்வளவுதான். அல் லது இந்தத் தோற்றம் – மறைவின் இடைப் பட்டதுதான்.

**உங்களுக்கு நினைவிருக்கும்** : நான் பிணங்களைப் பார்ப்பதில்லை என்கிற விஷயம் குறித்து உங்களோடு பேசியிருக்கிறேன். மாஸ் கோவில் காம்ரேட் லெனினுடைய உடலைப் பதனம் செய்து வைத்திருப்பது பற்றிக்கூட எனக் குள்ள மாறுபாடான கருத்துக்களை உங்களிடம் நான் பேசியிருக்கிறேன். எனது கருத்துக்களில்

உள்ள நியாயங்களை உங்களைப்போல் நிதானமாகவும் சரியாகவும் புரிந்து கொள்கிறவர்கள் எனது நண்பர்களில் மிகச் சிலரேயாவர். உங்களை ஒரு பிணமாக ஒரு போதும் நான் பார்க்க விரும்பியதில்லை. நீங்களும் அப்படி உங்களைக் காட்சி கொடுக்கவில்லை என்பதை எண்ணியெண்ணி இப்போது நான் ஆறுதலடைகிறேன்.

பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர்

அந்த விமானத்தின் இடிபாடுகளுக்கிடையே உங்களைத் தேடுவதாக எல்லாரும் சொன்னதுதான் என்னுள்ளத்தை உறுத்திற்று. காம்ரேட் பாலன்! நீங்கள் என்ன எப்போதும் தேடப்படுகிற ஒரு மனிதராகவே ஆகிவிட்டீர்கள்! ஆனால் நீங்கள் ஒரு பொழுதும் சிக்கியதில்லை; ஆறு ஆண்டுக் காலம் தலைமறைவாக வாழ்ந்த போது அந்தக் கொடுமையான அடக்குமுறைக் காலத்தில் கூட நீங்கள் தேடியவர்களிடம் சிக்கியதில்லை. நீங்களாகவே வந்து தோன்றினால் தவிர, உங்கள் எதிரிகள் உங்களைத் தேடிக் கொண்டிருந்த பொழுது நீங்கள் எங்களிடம் மறைந்திருந்தீர்கள். ஆனால், உங்கள் அன்பர்கள் தேடுகிற பொழுது நீங்கள் பிணக்குவியலிலா மறைந்திருப்பீர்கள்...? இல்லை, நீங்கள் அந்தப் பிணக்குவியலினிடையே இருக்க முடியாது.

உங்கள் இடது கை விரலில் அரிவாளும் சுத்தியலும் பொறித்த அந்தச் சிவப்பு வண்ண மோதிரம் எங்கே காட்டிக் கொடுத்து விடுமோ என்று நான் அஞ்சினேன். நீங்கள் இறந்தீர்கள் என்று சொல்வதற்கு இவர்கள் என்ன தடயம் வைத்திருக்கிறார்கள்? எப்படி நான் நம்புவது? காம்ரேட் பாலன், உங்கள் அஸ்தியைக் கொண்டு வந்தார்கள். நீங்கள் எப்போதும் ஒரு பிணமாக முடியாது. பாலன் என்பது பிணமோ, அஸ்தியோ அல்ல. அது ஒரு சக்தி. பாலன் மட்டுமல்ல; மனிதனே ஒரு ஸ்பிரிட்தான். கம்யூனிஸ்டுகள் எல்லாரையும் மாதிரி இதெல்லாம் செய்வது எனக்கு உடன்பாடில்லை. உடலுக்கு உரியவர்கள் உறவினர்கள் அவற்றைச் செய்வது எனக்குப் புரிகிறது.

காம்ரேட் பாலன், உங்களுக்கு நினைவிருக்கிறதா? புதுக்கோட்டைச் சிறையில் உங்களோடு இருந்த பசும்பொன் முத்து ராமலிங்கத் தேவரைப் பற்றிப் பல கதைகளை நகைச்சுவையோடு நீங்கள் எனக்குச் சொல்லியிருக்கிறீர்கள். அதிலொன்று என் நினைவுக்கு வருகிறது.

**தேவர் சொல்லுவார் :** "நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் பிரயாணம் செய்த விமானம் விபத்துக்குள்ளாகியது என்பது செய்தி. இதனை நான் மறுக்கவில்லை. நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் அந்த விமானத்தில் போயிருக்கலாம் என்பதை மறுக்க இடமிருக்கிறது. எனினும் நான் அதையும் மறுக்கவில்லை. விபத்தில் சிக்கியவர்களெல்லாம் இறக்க வேண்டுமென்பது விதியன்று. ஒரு வீரன் விமானத்தின் மூலமும் தப்பிச் செல்வான். அதற்கேற்படுகின்ற விபத்திலிருந்தும் தப்பிச் செல்வான். தென்னை மரத்திலிருந்து விழுந்து பிழைத்தவனும் உண்டு; புல் தடுக்கி விழுந்து இறந்தவனும் உண்டு. பாம்பு கடித்துப் பிழைத்தவனும் உண்டு; பாம்புத் தோலை மிதித்து இறந்தவனும் உண்டு. மரணம் என்பதோர் சிறிய மாயை."

தேவர் இப்படிச் சொன்னார் என்ற விஷயத்தை நீங்கள்தான் எனக்குச் சொன்னீர்கள். நான் அதை ரசித்துச் சிரித்தேன்.

'நான் சொல்றதனாலே உனக்குச் சிரிப்பு வருது. தேவர் சொல்லக் கேக்கணும். அவர் நிஜமாகவே நம்பறாரப்பா, போஸ் இருக்கார்னு. அந்த அளவுக்கு தேவருக்கு நேதாஜி கிட்ட ஒரு ஹீரோ ஒர்ஷிப் இருக்கு, அதை மாத்தவே முடியாது' – என்று நீங்கள் விளக்கிய மாதிரி அவ்வளவு ஆழமாக இல்லாவிட்டாலும் எனக்கும் உங்களிடம் ஒருவகை ஹீரோ ஒர்ஷிப் உண்டு. எனவேதான் எனக்கும் உங்களைப் பற்றி அப்படியொரு கற்பனை சுகம் தருகிறது.

உங்களைப் பற்றி ஒரு வாழ்க்கை வரலாறு எழுதும் உத்தேசம் எனக்கில்லை. உங்கள் வாழ்க்கை வரலாறாக எழுதப்படத் தக்கதுதான். அது உங்கள் கட்சியின் மேற்பார்வையோடுதான் எழுதப்படுவதை நீங்கள் விரும்புகிறீர்கள் என்பதால், அது அவ்விதமே எழுதப்பட வேண்டும்

என்று நானும் விரும்புகிறேன். அப்போது உங்களோடு எனக்குள்ள அனுபவங்களை அறிந்து கொள்ள அவர்கள் விரும்புவார்களாயின் நான் மகிழ்ச்சி கொள்வேன்.

நான் டைரி எழுதுகிற பழக்க முடையவனாக இருந்தால் நாம் ஒரு வரையொருவர் அறிந்து கொண்டு பழகிய இந்த இருபத்தைந்தாண்டுக் காலத்தில் ஏற்பட்ட எனது அனுபவங்களையெல் லாம் குறித்து வைத்திருந்தால் என்னென்ன சம்பவங்களை அந்த டைரி கூறுமோ, அவற்றையே தேதியும் குறிப்பும் இல்லாமல் என் மனத்தின் நினைவுப்படிமங்களினூடே நான் தேடித்தேடி ஒவ் வொன்றாய் எடுக்கிறேன்.


சுபாஷ் சந்திரபோஸ்

நம்மையறியாமலேயே ஏதோ நினைவில் மணலில் உட்கார்ந்து, பேசிக் கொண்டிருக்கையில் நமது விரல்கள் மணலிடையே துழாவி ஒரு கிளிஞ்சலையோ சோழியையோ எடுக்கிற மாதிரி நான் அடிக்கடி எவரிடமோ எதையோ பேசிக் கொண்டே உங்களைப்பற்றி ஏதோ ஒன்றைத் தொட்டுவிடுகிறேன். இது எனது இச்சையின்றி நிகழ்கிறது. இதுபோல் எனக்குப் பலரைப் பற்றிய அனுபவங்களும் தொடர்கின்றன. நான் சம்பந்தப் பட்ட எல்லாவற்றையும் எழுதி விடுமாறு எனக்கு லபித்திருக்கிறது. யாரைக் குறித்து, எதைக் குறித்து எனது அனுபவங்களை வெளியிடுவதன் மூலம் நான் மேன்மையுறுவேனோ, அவர்களுடன் மட்டுமே நான் உறவும் தொடர்பும் கொண்டிருந் தேன் என்பது எனக்கு மகிழ்ச்சி தருகிறது.

காம்ரேட் பாலன், அப்படிப்பட்ட மேன்மையான மனிதர்களுள் நீங்கள் ஒருவர். உங்களைப் பற்றிய நினைவுகளை நான் எழுதுகிற பொழுது அரசியல் சம்பந்தமான விஷயங்களை விலக்கி விடலாமா? என்று நான் முதலில் நினைத்தேன். ஆனால், அப் படிச் செய்வதே ஓர் அரசியல் நோக்கமுடையதென் பதாலும் நமக்குள் ஏற்பட்ட 'அபிப்ராய வித்தியா சங்கள்'கூட அரசியலை மட்டுமே, அதுவும் நடை முறை அரசியல் மட்டுமே அடிப்படையாய்க் கொண்டவை என்பதாலும் அவற்றை விலக்குவது எனது உணர்ச்சிகளை முழுமையாகவோ, சத்திய மாகவோ வெளிப்படுத்த உதவாது என்பதாலும் நான் அரசியலைத் தவிர்த்து உங்களைப் பற்றி எழுத இயலாது. எனினும் அவற்றிற்கு இங்கே முக்கியத்துவம் தரப்போவதில்லை.

காம்ரேட் பாலன், நீங்கள் வெறும் அரசியல்வாதி அல்ல. நீங்கள்தான் என்னிடம் சொன்னீர்கள், 'கம்யூ னிஸ்ட் என்பவன் வெறும் அரசியல் வாதி அல்ல'வென்று. எனவே ஒரு சிறந்த கம்யூனிஸ்ட்டாகிய உங்களை ஓர் அரசியல்வாதியாக மட்டும் என் னால் பார்க்க முடியவில்லை. அப்படிப் பார்ப்பது உங்களைப் பற்றிய முழுப் பார்வையாகாது.

நீங்கள் பிறந்த தேதி எனக்கு நினைவில்லை. என்னைவிட உங்களுக்குப் பதினைந்து வயது அதிகம் என்று எனக்குத் தெரியும். உங்களைச் சந்திப்பதற்கு முன்னாலேயே உங்களைப்பற்றி நான் நிறையக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் உங்களை நான் பார்க்க வேண்டுமென்று விரும் பியதில்லை. நான் அப்படியெல்லாம் விரும்புவதே இல்லை. ஒரு வேளை அந்த விருப்பம் வருவதற்கு முன்னாலேயே நான் உங்களைப் பார்த்து விட் டேனோ என்னவோ? ஒரு மனிதன் என்கிற முறை யில்தான் நீங்கள் என்னை முதலில் கவர்ந்தீர்கள். எனக்கு அதுதான் மிகவும் முக்கியம். நல்ல இதய மும் நேரிய பண்புகளும் இல்லாத மனிதனால் எந்த இயக்கத்துக்கு என்ன பலன் கிட்டும்? உங்களிடம் இருந்த அந்த மனிதக் கவர்ச்சி, மானுடப் பண்பு கள்தான் உங்கள் சிறப்புக்களின் அடிப்படை. அந்தக் கவர்ச்சியை நான் ஒரு பொழுதும் உங் களிடம் இழந்ததில்லை.

இந்தக் காலத்தில் யாரும் ஒரு கம்யூனிஸ்ட் டாகிவிட முடியும். அதற்கென்று பிரத்யேகமாக எந்தத் தகுதியும் வேண்டியதில்லை. எந்தக் கட்சி யிலும் ஒருவன் சேருவது போல உங்கள் கட்சி யிலும் ஒருவன் சேரமுடியும். நீங்கள் கம்யூனிஸ்ட் டான காலத்தில் நீங்கள் சந்தித்த பிரச்சனைகளை யெல்லாம் உங்கள் கட்சியைச் சேர்ந்த ஓர் இளம் கம்யூனிஸ்ட் கதை மாதிரிக் கேட்பான். நம்பக்கூட மாட்டான். ஏனெனில் அப்படிப்பட்ட பிரச்சனை களைச் சந்திக்கிற சூழ்நிலை இன்றைக்கில்லை. சொல்லப்போனால் உங்களுக்கிருந்த வீர சாகஸப் பண்புகளினாலேயே அக்காலத்தில் நீங்கள் ஒரு கம்யூனிஸ்ட்டானீர்கள். அடிப்படையில் நீங்களொரு வீரசாகஸப் பிரியர் (Adventurist). மகாத்மா காந்தி கூட ஓர் வீரசாகஸப் பிரியர்தான். உங்களு டைய வீர சாகஸப் பண்பு மேன்மையானதும் மெய்யானதுமென்பதால் அதனை நான் எப்போதும் வணங்கி வந்திருக்கிறேன்.

முதலில் என் மனதில் ஏற்கனவே ஒரு வீர சாகஸ மனிதனாக உருப்பதித்திருந்த நீங்கள் என் முன் வந்து தோன்றிய அந்த நிகழ்ச்சியை நினைவு கூர்கிறேன்.

(தொடரும்)

# எது வேண்டும்?

அன்பென்னும் கனியிருக்க
வம்பென்னும் காய் கவரும்
துன்பநிலை மாற வேண்டும்!

பிறர்குற்றம் ஆராயும்
பெருங்குற்றம் தனைநீக்கி
நம்குற்றம் களைய வேண்டும்!

நம்நாடு நமதென்னும்
நல்லெண்ணம் நம்நெஞ்சில்
வேரூன்றி வளர வேண்டும்!

நம் எண்ணம் சொல் செயல்கள்
இம்மூன்றும் இவ்வுலகில்
வாய்மைஉருக் கொள்ள வேண்டும்!

சாதிமதச் சண்டையெல்லாம்
சாக்கடையில் சாய்ந்துவிடச்
சமரசமே வாழ வேண்டும்!

உழைப்பொன்றே உயர்வுக்கு
உரமென்றே அதை நாமும்
உயிரென்றே எண்ண வேண்டும்!

நற்பண்பை நமதாக்கி
நன்மையெல்லாம் நமைநோக்கி
வருங்காலம் எதிர்நோக்க வேண்டும்!

வையத்துள் வளமுறும்
வழிகற்று வாழ்வில்நாம்
வானோக்கி உயர வேண்டும்!

– க. சிவமணி







# விவாதம்

# படேல் சிலை

அக்டோபர் 31 யாருடைய பிறந்த நாள்? அநேகமாக இந்திய மக்களுக்குத் தெரியாது என்றுதான் சொல்ல வேண்டும். அக்டோபர் 2 காந்திஜியின் பிறந்தநாள் என்பதையும், நவம்பர் 14 நேருஜியின் பிறந்தநாள் என்பதையும் தெரியாத இந்தியர்கள் இல்லை.

அக்டோபர் 2–ஆம் தேதியை 'உலக அகிம்சை தினமாக' உலக நாடுகள் கொண்டாடுகின்றன. நேருஜியின் பிறந்தநாள் 'குழந்தைகள் தினமாக' நாடு முழுவதும் கொண்டாடப்படுகிறது. ஆனால், அக்டோபர் 31–ஆம் தேதி யாருடைய பிறந்த நாள் என்று கேட்டால், அதிக விபரம் தெரிந்தவர்கள்கூட மறந்திருப்பார்கள்.

அக்டோபர் 31–ஆம் தேதி 75 ஆண்டுகள் வாழ்ந்து மறைந்த சர்தார் வல்லபபாய் படேலின் பிறந்த நாள். காந்திஜியின் அரசியல் வாரிசாக (Political heir) விளங்கியவர் நேருஜி என்றால், காந்திஜியின் பர்தோலி சத்தியாகிரக விவசாயப் போராட்டத்தைத் தலைமை தாங்கி நடத்தியவர் சர்தார் படேல்.



சர்தார் வல்லபபாய் படேல்

படேல் சர்தார் ஆனது சாதாரணமானது அல்ல. ராணுவ உடையோடு காட்சி தருகின்ற நேதாஜியைப் பார்த்திருக்கிறோம். இவரோ, கதர் உடையோடு இந்தியாவை ராணுவ உதவி எதுவும் இல்லாமல், 565 சமஸ்தானங்களை இந்திய மன்னர்களோடு பேசி இணைத்தவர்.

அதுமட்டுமல்ல. பாகிஸ்தானோடுதான் இணைவோம் என்று சொன்ன ஹைதராபாத் சமஸ்தானத்தையும், சுனாகர் சமஸ்தானத்தையும் இணைத்தவர். காஷ்மீர் சமஸ்தானத்தையும் இந்தியாவோடு இணைக்க நினைத்தவர்.

படேல் மட்டும் இல்லாமல் போயிருந்தால் இத்தனை பெரிய இந்தியா உருவாகியிருக்காது. அப்படிப்பட்ட இந்தியா கலவர பூமியாகத்தான் தொடர்ந்து இருந்திருக்கும். சமஸ்தானங்களுக்கிடையில் சண்டைகள் நடந்து கொண்டே இருந்திருக்கும். இவற்றையெல்லாம் தவிர்த்தவர் படேல் என்ற அந்த மாபெரும் அகிம்சைப் படைத்தளபதிதான்.

விவசாயக் குடும்பத்தில் பிறந்த படேல், லண்டனில் பாரிஸ்டருக்குப் படித்தவர். குஜராத்தில் அகமதாபாத்தில் மிகச்சிறந்த வக்கீலாகத் தொழில் செய்து வந்தவர். காந்திஜி, பர்தோலி விவசாயப் போராட்டத்தைப் படேல் தலைமை தாங்கி நடத்த வேண்டுமென்று விவசாயிகள் சார்பாக வேண்டினார். படேலைப் பார்ப்பதற்காக காந்திஜி அவருடைய வக்கீல் அலுவலகத்திற்குச் சென்று 2 மணி நேரம் காத்திருந்தார். சந்தித்த பிறகு, காந்திஜியின் வேண்டுகோளைப் படேல் நிராகரித்தார். காரணம், தனது தொழில் மூலம் ஏழைகளுக்குத்தான் தாம் சேவை செய்வதாகவும், அதனால் தலைமை ஏற்க முடியாது என்றும் மறுதலித்தார்.

ஏமாற்றத்தோடு திரும்பிய காந்திஜி அந்தப் போராட்டத்தைப் படேல் இல்லாமல் நடத்த முடியாது என்ற முடிவுக்கு வந்தார். அதனால், மீண்டும் படேலைச் சந்திக்கச் சென்றார். காந்திஜியின் அன்பு வேண்டுகோளைத் தட்ட முடியாமல் ஒத்துக் கொண்டார். இதன்மூலம், படேலை உருவாக்கியவர் காந்திஜி அல்ல என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

நேருஜியைத் தேசப் பிரதமராக மக்கள் ஒத்துக்கொள்ள வேண்டுமென்றால், அதற்குக் காந்திஜியின் பரிந்துரை அவசியப்பட்டது. அதனால்தான் காந்திஜி நேருவைத் தனது அரசியல் வாரிசு என்று அறிவிக்க வேண்டியிருந்தது.


காந்திஜி

காந்திஜி அப்படி அறிவிக்கவில்லையென்றால், அது உட்கட்சி மோதலாக மாறியிருக்கலாம். ஏனெனில், ராஜாஜியோடு காந்திஜிக்கு இருந்த நெருக்கத்தைப் பற்றிப் பலரும் கேட்டார்கள். நேருஜி அரசியல் வாரிசு என்றால், ராஜாஜியை என்ன சொல்வீர்கள்? என்றார்கள். 'அவர் எனது மனசாட்சியின் காவலர்' (Conscience keeper) என்றார். படேல்தான் காந்திஜி சுடப்படுவதற்குச் சில மணித்துளிகளுக்கு முன்பு பிர்லா மாளிகையில் கடைசியாகச் சந்தித்துப் பேசியவர். பிரார்த்தனைக்கு நேரமாகிவிட்டது என்று படேலிடமிருந்துதான் விடைபெற்றுப் பிரார்த்தனை மண்டபத்திற்குள் நுழைந்தார், பிரேதமானார்.

இவை மட்டுமல்ல, படேலின் சிறப்பை அறிந்த காங்கிரஸ்காரர்கள், படேலைச் சிறப்பிக்கும் வகையில் நேருஜிதான் பிரதமர் என்றால், படேலைத் துணைப் பிரதமர் என்று அறிவிக்க வைத்தார்கள். படேலின் கையில்தான் தேசத்திற்கு முக்கியமான உள்நாட்டுத்துறை இருந்தது.

இவ்வளவு சிறப்பிற்குரிய படேல், 1948 ஜனவரி 30–இல் காந்திஜி மறைந்த பிறகு 2 ஆண்டுகளில் இந்தியாவைக் கட்டமைத்தார். காஷ்மீர்ப் பிரச்சனையை நேருஜி கையாளாமல், படேல் கையாண்டிருந்தால் நிச்சயமாக முழுக் காஷ்மீரும் இந்தியாவின் ஒரு மாநிலமாக ஆகியிருக்கும்.

நேருஜிதான் காஷ்மீர்ப் பிரச்சனையை ஐ.நா. சபைக்குக் கிருஷ்ணமேனன் மூலமாகக் கொண்டு சென்று தேசியப் பிரச்சனையைச் சர்வதேசப் பிரச்சனையாக மாற்றிவிட்டார். அதனால்தான் இன்றைக்கும் அது நிலுவையிலேயே உள்ளது.

நமது துரதிருஷ்டம், படேல் 1950–இல் மரணமடைந்தார். குறுகிய காலம்தான் அவர் பதவியிலிருந்த காலம். இந்தியாவின் ஆன்மாவைப் புரிந்தவர். குஜராத்திலுள்ள சோமநாதர் ஆலயம் 1950–இல் திருப்பணி நிறைவு பெற்றுக் கும்பாபிஷேகம் நடத்தப்பட்டது. இந்திய ஜனாதிபதி ராஜேந்திரபிரசாத் அதில் கலந்து கொண்டு சிறப்பிக்க இருந்தார். பிரதமர் நேருவோ, அதைத் தடுத்தார். காரணம், அது ஹிந்துக் கோயில். காங்கிரஸ் கட்சிக்கு ஹிந்துக்களுக்கு ஆதரவான கட்சி என்ற கெட்ட பெயர் வந்துவிடும் என்று நேருஜி கருதினார்.

பிரதமர் நேருஜியின் தடையைத் தூக்கி எறிந்துவிட்டு, சோமநாதர் ஆலயத் திருப்பணியில் ஜனாதிபதி கலந்து கொண்டு சிறப்பித்தார். இதன்மூலம் ஒன்றை நாம் புரிந்துகொள்ள வேண்டும். பிரதமர் நேருஜி தமது பதவிக் காலத்திலேயே படேல் அரசியலில் பிரவேசிப்பதை விரும்பவில்லை. ஏற்கனவே நேதாஜி அகால மரணமடைந்துவிட்டார். அவரை நினைவு கூரும் சடங்கைக்கூட நேருஜியின் மத்திய அரசு கடைப்பிடிக்கவில்லை.

நேதாஜி யார்? மகாத்மா காந்திஜியால் அகில இந்திய காங்கிரஸ் கட்சித் தலைவர் பதவிக்குப் போட்டியிட பட்டாபி சீதாராமையா நிறுத்தப்பட்டார். காந்திஜியே போட்டியிடுவது போலத்தான் அது இருந்தது. அவரை எதிர்த்து நேதாஜி போட்டியிட்டார். வெற்றி பெற்றது யார் தெரியுமா? நேதாஜிதான்.

பட்டாபி சீதாராமையாவின் தோல்வி, தன்னுடைய தோல்வி என்று பகிரங்கமாக காந்திஜி ஒப்புக்கொண்டார். அத்தனை செல்வாக்குள்ள நேதாஜியின் புகழ், அநேகமாக இருட்டடிப்புச் செய்யப்பட்டுவிட்டது. அவர் வாரிசுகள் யாரும் இந்திய தேசிய அரசியலில் இல்லை. வங்காள மாநில அரசியலில்கூட இல்லை.

படேலின் வாரிசுகள் யாரும் தேசிய அரசியலிலும் இல்லை. குஜராத் மாநில அரசியலிலும் இல்லை. அவருடைய ஒரே மகள் மணிபென் படேல், காந்திஜியின் 'குஜராத் வித்யாபீடத்தில்', படித்துப் பட்டம் பெற்றவர். காந்திஜிக்காகவே தன்னை அர்ப்பணித்துக் கொண்டவர். திருமணம் செய்து கொள்ளாதவர். இரண்டு முறை எம்.பி.யாக இருந்தார். ஒருமுறை ராஜ்யசபா எம்.பி.யாக நியமிக்கப்பட்டார். இந்திரா காந்தியின் நெருக்கடி நிலையை எதிர்த்துக் காங்கிரசைக் கைவிட்டார்.

வறுமையில் வாடிய அவரைச் சந்திக்க எந்தக்

காங்கிரஸ் தலைவரும் வந்ததில்லை. நேருஜியே அவரை மகளாக சுவீகரித்துக் கொண்டிருக்க லாம். ஆனால், அவ்வாறு நடக்கவில்லை. இது போலப் பல செய்திகள் படேலைப் பற்றிப் புதை யுண்டு போய்க் கிடக்கின்றன. தோண்டி எடுப்பதற் கான தொன்மை சரித்திரமாக அது ஆகிவிட்டது.

இந்த ஆண்டுதான் படேலை பாரதமே திரும்பிப் பார்த்திருக்கிறது. பிரதமர் மோடியின் ஆட்சியில்தான் அவருக்குரிய பிரகாசம் அவர்மீது குவிக்கப்பட்டுள்ளது. மோடி முதலமைச்சராக இருந்தபோது தொடங்கிய படேல் சிலை அமைப்புத் திட்டம். ரூ. 3 ஆயிரம் கோடி செலவில் உருவாக்கப்பட்டு, அவர் இந்தியாவின் பிரதமராக இருக்கின்ற கடைசி வருடத்தில் அதுவும் நர்மதா நதிக்கரையில் திறப்புவிழாச் செய்யப்பட்டுள்ளது.

நர்மதா நதி அணைக்கட்டு காங்கிரஸ் ஆட்சி யில் தொடங்கப்பட்டு, 55 ஆண்டுகள் நிறைவு செய்யப்படாமல் இருந்தது. சென்ற ஆண்டுதான் சர்தார் சரோவர் அணைக்கட்டைப் பிரதமர் மோடி நாட்டிற்கு அர்ப்பணித்தார்.

இந்த இடத்தில் ஒன்றை நினைவுகூர வேண்டும். நமது தேசத்தில் நேருஜி, இந்திராஜி, ராஜீவ்காந்தி ஆகிய இம்மூவரின் பெயர்கள், இந்தியாவில் 450 திட்டங்களுக்கும் நிறுவனங் களுக்கும் சூட்டப்பட்டுள்ளன.

மத்திய அரசின் 12 திட்டங்களுக்கும் இவர் கள் பெயர்கள்தான் சூட்டப்பட்டுள்ளன. மாநிலங் களிலுள்ள 52 திட்டங்களுக்கும் அவ்வளவு ஏன்? 28 விளையாட்டுகளுக்கும் விருதுகளுக்கும், 19 விளையாட்டு அரங்குகளுக்கும், 5 விமான நிலை யங்களுக்கும் துறைமுகங்களுக்கும், 98 கல்வி நிறுவனங்களுக்கும், 51 தேசிய விருதுகளுக்கும் 15 உதவித்தொகை நிதிகளுக்கும், 16 தேசிய சரணாலயங்களுக்கும், 39 மருத்துவமனைகளுக்கும், 37 மருத்துவக் கல்வி நிலையங்களுக் கும், 74 நெடுஞ்சாலைகளுக்கும் சூட்டப்பட்டுள்ளன.

இவைதான் கடந்த 70 ஆண்டுகளில் இந்தியாவில் உரு வான திட்டங்கள், நிறுவனங்கள், கட்டடங்கள்.

இவற்றில் ஒன்றுக்குக்கூட நேதாஜியின் பெயரோ, படேலின் பெயரோ, வினோபாஜியின் பெயரோ, ஜே.சி. குமரப்பாவின் பெயரோ, இவர் களைப் போன்ற காந்தியவாதிகள் எவர் பெயரும் இல்லை. இந்தியா என்றால், நேருஜி, இந்திராஜி, ராஜீவ்ஜி என்பதாகச் சுருங்கிவிட்டது.


நேருஜி

படேல் சிலையைப்பற்றிய விமர்சனங்களில் முக்கியமானது காந்திஜியை விடவா படேல் உயர்ந் தவர்? அவருக்கா இந்தச் சிலை? என்று கேட்கப் படுகிறது. இங்கே நாம் நினைவுகூர வேண்டியது, படேல் சிலை காந்திக்கு எதிரானதல்ல. நேருஜி குடும்பத்திற்கு மாற்றானது. ஒரு குடும்பத்தை மட்டுமே குவிமையமாக்கி, தேசமே அவர்களைக் கூர்ந்து கவனிக்கச் செய்ததும், கும்பிட வைத் ததும் மற்ற தலைவர்களின் தியாகப் பங்களிப்பு களை மலினமாக்கியதாகும்.

இவ்வாறு மலினப்படுத்தப்படுவதைத் தடுக் கத்தான் இந்த மகத்தான உயர்ந்த சிலை உரு வாக்கப்பட்டுள்ளது.

இரண்டாவது விமர்சனம், இந்தியாவில் விவ சாயிகள் ஆயிரக்கணக்கில் தற்கொலை செய்து கொண்டிருக்கிற இந்தக்காலத்தில், ஏறக்குறைய ரூ. 3 ஆயிரம் கோடி செலவில் படேலுக்குச் சிலை அவசியமா, நியாயமா? என்பதுதான்.

இது அவசியமானது மட்டுமல்ல, நியாய மானதுமாகும். படேல் தனது 143–ஆவது பிறந்த தினத்தில்தான் இந்தியாவின் இமயம் போன்ற சிலையாக உருவாகியிருக்கிறார். 75 ஆண்டுகள் வாழ்ந்த படேல் அவர் மறைந்து அநேகமாக சுமார் 70 ஆண்டுக் காலமாக அவர் உயர்ந்தவராகக் காட்டப்படாவிட்டாலும் சகித்துக் கொள்ளலாம். ஆனால், அவர் புதையுண்டு போனதை எப்படிச் சகிப்பது? இப்போது அவர் தோண்டியெடுக்கப்பட் டுள்ளார். அவர் புகழைத் தோண்டியெடுத்தது, யாருடைய கண்களையே தோண்டி யெடுக்கப்பட்டது போல நினைக் கப்படுகிறது.

படேல் சிலையைப்போல காந்திஜிக்கும், நேருஜிக்கும் சிலை வைக்க வேண்டுமென்று இவர்கள் கோரிக்கை வைத்திருந்தால்கூட அது பரிசீலனைக்குரியதாக இருந் திருக்கும். ஆனால், இவர்கள் விமர்சனமோ படேலுக்கு இவ் வளவு உயரச் சிலையா? என்று அந்தச் சிலையைவிட அதிக உயரத்திற்குக் குதிக்கிறார்கள்.

நமது மத்திய அரசின்



பிரதமர் நரேந்திர மோடி

ஆண்டு வருமானம் ரூ. 24 லட்சம் கோடி. இதில் ரூ. 3 ஆயிரம் கோடி என்பது பல பூஜ்யங்களுக்குப் பிறகு ஒன்று என்று போட்டது போல்தான். அப்படிப் பட்ட அற்பத்தொகையை இதில் செலவிட்டதற்காக இவர்கள் ஆத்திரப்படுகிறார்கள். விரயமாகியதாக விமர்சனம் செய்கிறார்கள். படேலுக்குச் சிலை வைத்து மோடி தன்னை உயர்த்திக் கொண்டதாக அவரைத் தாக்குகிறார்கள்.

நேரு குடும்பத்தில் பிரியங்கா – வதேரா ஆகியோரின் பாதுகாப்புக்கு மட்டும் அரசு செய்துள்ள ரூ. 19 ஆயிரம் கோடிச் செலவை விடவா ரூ. 3 ஆயிரம் கோடி பெரியது?

இந்தச் சிலையை உருவாக்க 70 ஆயிரம் டன் சிமெண்ட், 20 ஆயிரம் டன் இரும்பு, 1700 டன் பித்தளை பயன்படுத்தப்பட்டுள்ளன. இதில் 7 ஆயிரம் டன் இரும்பை மக்களே தங்களுடைய பங்களிப்பாகத் தந்திருக்கிறார்கள்.

இன்னொரு விமர்சனம், இந்தச் சிலையினுடைய பித்தளைப்பகுதி, சீனாவில் தயாரிக்கப்பட்டு இணைக்கப்பட்டுள்ளது. சீனாவிலிருந்து வாங்கிப் படேலுக்குச் சிலை செய்யலாமா? என்கிறார்கள். சீனர்கள் நமது யோகாவைச் செய்கிறபோது, இதனை நாம் வாங்கியது தவறா?

அமெரிக்காவிலுள்ள சுதந்திரதேவி சிலை அமெரிக்காவில் தயாரிக்கப் பட்டதல்ல, பிரான்சில் தயாரிக்கப்பட்டது என்பதை மறந்துவிட்டார்கள்.

படேல் சிலையின் சிறப்பம்சங்கள் நம்மை வியக்க வைக்கின்றன. பீடத்தின் உயரம் மட்டும் 190 அடி. சிலையின் உயரம் 597 அடி. உலகத்திலேயே அதிக உயரமுள்ள சிலை என்ற பெயரை முதன்முதலாக இந்தியா பெற்றுள்ளது.

இந்தியாவிற்கு வரும் வெளிநாட்டினர் தாஜ் மகாலைப் பார்ப்பதற்கு ஆவல் கொள்வதைப்போல, சர்தார் சரோவர் அணைக்கட்டிலுள்ள படேல் சிலையைப் பார்ப்பதற்கு வராமல் இருக்க மாட்டார்கள். வந்து தங்கித்தான் போவார்கள்.

அப்படி அந்தச் சிலையில் என்ன இருக்கிறது என்றால், தொலைவிலிருந்து பார்த்தால், படேல் திருவுருவம் மட்டும்தான் தெரியும். அந்த இரும்பு மனிதருக்கு இரும்பால் செய்யப்பட்ட அந்தச் சிலை, அவருடைய அடைமொழிக்குப் பொருத்தமானது.

சிலைக்கு அருகில் வந்தால், அந்தப் பீடத்தில் ஒபராய் ஓட்டல், தாஜ் ஓட்டல் போல மூன்று நட்சத்திர உலகத்தர ஓட்டல் ஒன்று உருவாக்கப்பட்டுள்ளது.

பீடத்திலிருந்து படேலின் மார்புப் பகுதி வரை லிஃப்டின் மூலமாகச் சென்று 501 அடியில் நின்று பார்வையாளர்கள் அங்கிருந்து நர்மதா நதியின் வளமான வளாகம் முழுவதையும் கண்டு ரசிக்கலாம். ஒரே சமயத்தில் 200 பேர் மேலே செல்லலாம். ஒரு கண்காட்சி அரங்கமும் இடம்பெறுகிறது.

இந்தச் சிலையைப் பற்றி விளக்கிச் சொல்ல 100 வழிகாட்டிகள் நியமிக்கப்பட்டுள்ளனர். இந்த ஒரே மாதத்தில் தினசரி 30 ஆயிரம் சுற்றுலாப் பயணிகள் இந்தச் சிலையைப் பார்த்துப் பூரித்துக் கொண்டிருக்கிறார்கள். இது சிலை அல்ல, ஒற்றுமையின் கலை. இன்னுமொரு மலை. பூமிக்கு மேல் வீசுகின்ற புகழ் அலை.

இந்தச் சிலையின் மூலம் இந்தியா உலகத்தை வியக்க வைத்திருக்கிறது. சீன தேசம் தனது சாதனையாகப் பல நூறு கி.மீ. தொலைவுக்குக் கட்டப்பட்ட கடல் பாலத்தைக் காட்டுகிறது. இந்தியா தனது பழைய தாஜ்மகாலையும், குதுப் மினாரையும், செங்கோட்டையையும் மட்டும் காட்டினால் போதுமா? இந்த 70 ஆண்டுகளில் இந்தியா எதுவும் சாதிக்கவில்லையா? இதோ இந்தப் படேல் சிலை ஒன்று போதாதா? இதை மீறி இன்னொரு சிலை இனிமேல்தான் தோன்ற முடியும்.

படேலைப் போன்ற சிலையை வேறு தேசம் உருவாக்க வேண்டுமானால், அந்த வீர நாயகன் தனது அனைத்தையும் அத்தேசத்திற்கு அர்ப்பணித்தவராக இருக்க வேண்டும். அப்போதுதான் அந்தச் சிலைக்கு அழகு வரும், அர்த்தம் வரும், அனைவரையும் ஆச்சரியப்படுத்தும். அமெரிக்காவில் சுதந்திரம் என்பது சிலை மட்டும்தான்.

படேல் சிலை விரயமா, நியாயமா? என்பதைப் பற்றி வாசகர்களாகிய நீங்கள் என்ன எண்ணுகிறீர்களோ, அதை எழுதுங்கள் டிசம்பர் 12–க்குள்.

– பி.சி.

# வாசகர் கடிதம்

**2018** நவம்பர் 'ஓம் சக்தி' தீபாவளி மலர் உண்மையிலேயே ஒரு வனம்தான். வனம் வளமாகவும், சிந் தனைத் தாமரைகள் பூத்த குளமா கவும் இருந்தது.

– மு. பழனி இராகுலதாசன், தேவகோட்டை.

**இ**வ்வாண்டின் 'ஓம் சக்தி' தீபாவளி மலர் இலக்கிய ஆர்வலர் களுக்கு நல்ல 'தீனி' போடும் வகையில் அமைந்துள்ளது. குறிப்பாக, நாடகத் துறையைச் சார்ந்த 'மாலி'யுடனான நேர்காணல் மூலம் பல அறியாத செய்தி களை அறிந்துகொள்ள முடிந்தது.

– வெ. பாண்டுரங்கன், திருநின்றவூர்.

'இன்றைய இளைஞர்களுக்கான அறிவியல்' – நெல்லை சு. முத்துவின் தீபாவளி மலர்க் கட்டுரையைப் படித்து மகிழ்ந்தேன். ஆசிரியர்கள், மாணவர்களுக்கு நற்சிந்தனைகளைப் போதிக்க வேண்டும் என்பது நல்ல சிந்தனை!

– கே.ஆர். கிருஷ்ணமாச்சாரி, மதுரை.

**'ஓ**ம் சக்தி' தீபாவளி மலர் சிறப் பாக இருந்தது. 'மழையும் நின்றதாம் மலையாளம் பிழைத்ததாம்' என்ற சாரமான வரிகளுடன் முடித்த 'தண் ணீர்ச் சமாதி' எழுதிய கவிஞர் சிற்பி கற்பிக்கும் கவிதை அருமை! அதோடு பெருந்தலைவர் காமராசருடன் கும்பகோணம் வெ. ரெங்கராசனின் நிழல் தொகுப்பு – அப்பப்பா...! மெய் சிலிர்க்க வைத்தது!

– தெ. முருகசாமி, புதுச்சேரி.

**வ**ள்ளல் பாண்டித்துரைத் தேவர், உ.வே.சா. அவர்களுக்கு எழுதிய கடிதங்கள் பற்றி முனைவர் இ. சுந்தர மூர்த்தி எழுதியுள்ள கட்டுரை ஞானப் பொக்கிஷம் என்றுதான் கூற வேண்டும்.

– ஜெயா ராஜாமணி, மதுரை.

**க**தைகளில் ஜெயமோகனின் 'பிரதமன்' அவர் விவரிக்கிற பாங்கிலே நாவில் எச்சிலூற வைத்துவிட்டார். அச்சிறுகதை தொடரும் என்றுள்ள தால், அடுத்த இதழுக்கு ஆவலாக உள்ளேன்.

– பா. இசக்கிமுத்து, வெள்ளானைக்கோட்டை.

**380** பக்கங்கள் கொண்ட 'ஓம் சக்தி' தீபாவளி மலர் என்ற வண்ணப் பொக்கிஷப் புதையலில் இருக்கும் அற் புதங்களைப் படித்துப் படித்து வியந்து போகிறேன். எப்போதுமே ஓம் சக்தி யின் தீபாவளி, இலக்கிய தீபாவளி தான்!

– சின்னஞ்சிறுகோபு, சேலையூர்.

**இ**வ்வாண்டு 'ஓம் சக்தி' தீபாவளி மலரில்தான் எத்துணை விசயங்கள். அனைத்தும் அற்புதம். சுத்தானந்த பாரதியார் பற்றி சகோதரி மீனாட்சி யின் கட்டுரை பழைய நினைவுகளைக் கொண்டு வந்தது.

– டாக்டர் பிரேமா நந்தகுமார், ஸ்ரீரங்கம்.

**'ஓ**ம் சக்தி' தீபாவளி மலரில் வெளியாகியிருந்த டாக்டர் ம. மாணிக்கம் அவர்களின் 'பாரதப் பாரம்பரியம்' கட்டுரையில் ஆங்கிலே யர்களின் ஆட்சிக் காலத்தில் நம் நாடும், பண்பாடும் எவ்வாறெல்லாம் திட்டமிட்டு அடிமைப்படுத்தப்பட் டன என்பதை பல உதாரணங்களின் துணையோடு கட்டுரையாசிரியர் எடுத்துக் காட்டியிருந்தார்.

– ஏ.எம். சாலன், கொச்சி.

**'பெ**ட்ரோல் விலைக் குறைப் புக்கு எத்தனால' என்று அப் பொழுதே எழுதிய அருட்செல்வர் தொலைநோக்குப் பார்வை உள்ளவர். ஆட்சியாளர்கள் எதனால் "எத்த னால்" பயன்படுத்துவதை அதிகரிக் கத் தயங்குகிறார்கள் என்பது புரியவில்லை.

– என்.ஆர். ஜெயசந்திரன், காவேரிப்பட்டணம்.

# புத்தக மதிப்பீடு








## சித்தர் பாடல்கள் (5 தொகுதிகள்)

ஆசிரியர் : புலவர் அடியன் மணிவாசகன், வெளியீடு : சங்கர் பதிப்பகம், 15/21, டீச்சர்ஸ் கில்டு காலனி, ராஜாஜி நகர் விரிவு, வில்லிவாக்கம், சென்னை – 49, போன் : 044 – 26502086, பக். : 1542 (5 தொகுதிகள்), விலை ரூ. 1330/–.

'சித்தர் பாடல்கள்' எனும் இந்த ஐந்து தொகுப்பு நூல்களில் சித்தர்கள் முப்பத்து நால்வரின் மூவாயிரத்திற்கு மேற்பட்ட பாடல்களும் அவற்றிற்கான உரை விளக்கங்களும் இடம்பெற்றுள்ளன. தொகுதி 1–இல் புரட்சிச் சித்தர் சிவவாக்கியர் பாடல்களும் உரை விளக்கமும், தொகுதி 2–இல் பட்டினத்தார் பைந்தமிழ்ப் பாடல்களும் உரை விளக்கமும்; தொகுதி 3–இல் பாம்பாட்டி சித்தர் – இடைக்காட்டுச் சித்தர் – அகப்பேய்ச் சித்தர் – குதம்பைச் சித்தர் முதலியோரின் பாடல்களும் உரைவிளக்கமும்; தொகுதி 4–இல் கடுவெளிச்சித்தர், அழுகணிச் சித்தர், பத்திரகிரியார், கொங்கணச் சித்தர், சட்டைமுனிச் சித்தர் பாடல்களும் உரை விளக்கமும்; தொகுதி 5–இல் காகபுசுண்டர் முதல் காயக்கற்பச் சித்தர் வரை பதினாறு சித்தர் பாடல்களும் உரைவிளக்கமும் இடம்பெற்றுள்ளன.

இந்த ஐந்து தொகுதிகளிலும் உள்ள சித்தர்களின் பாடல்களுக்குப் பொருத்தமான, எளிமையான, தெளிவான விளக்கவுரையை வழங்கியிருப்பவர் – பற்பல நூல்களைப் படைத்தவரும், பல பாடல்களின் நூல்களுக்கு நல்லுரை கண்டவருமான தமிழிலக்கியப் புலமைசார் புலவர் அடியன் மணிவாசகன். இப்புலவரின் சீர்த்த உரைச் சித்தர்களின் பாடல்கள் நம் மனத்தில் ஆழப் பதியுமாறு துணை செய்கின்றது. தமிழ்கூறும் நல்லுலக மக்கள் அனைவர் வீட்டிலும் கட்டாயம் இருக்க வேண்டிய நூல்கள் இவை.

## திருக்குறள் (தெளிவுரை)

ஆசிரியர் : முனைவர் ப. சுப்பிரமணியன், வெளியீடு : இசையரசி பதிப்பகம், 45/25, பெரியார் நகர், திருவானைக்கா, திருச்சி–5, பக். : 296, விலை ரூ. 100/–, செல் : 94421 31035.

பிறவியில் மானிடப் பிறவி அரிதானது. அரிதான மானிடப் பிறவியில், மாந்தர் எவ்வகை வாழ்க்கை முறையைக் கைக் கொண்டு தம் வாழ்வைச் சிறப்பாக அமைத்துக்கொள்ள வேண்டும் என்பதை முக்காலம் உணர்ந்த ஞானி திருவள்ளுவர் தம் குறட்பாக்கள் வழி கூறிச் சென்றுள்ளார். உலகப் பொதுமறையாகப் போற்றப்படும் அக்குறட்பாக்களுக்குப் பலர் உரை கண்டுள்ளனர். அவ்வரிசையில், மேனாள் தமிழ்ப் பேராசிரியரும் மேற்பட்ட விருதுகள் பெற்றவருமாகிய முனைவர் ப.சுப்பிரமணியனும் ஒருவர். ஒவ்வொரு குறளுக்குமான இவருடைய உரை விளக்கம் மூன்று வரிகளுக்கு மிகாமல், ரத்தினச் சுருக்கமாக, எளிய தமிழில் தெளிவாகப் புரிந்துகொள்ளக் கூடிய வகையில் அமைந்துள்ளது. கையடக்கமான நூல் வடிவம். எளிதாக எங்கும் எடுத்துச் செல்லலாம். இத்திருக்குறள் தெளிவுரை நூலை அனைவரும்

படித்துப் பயன் பெறலாம். பரிசளிக்கலாம்.

## தமிழ் உலா

ஆசிரியர் : பேரா. இரா. மோகன், வெளியீடு : வானதி பதிப்பகம், 23, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை – 17. பக். : 242, விலை ரூ. 160/–, போன் : 044–24342810.

**க**விதைத் துறைமுகம், செவ்விலக்கியப் பேழை, சான்றோர் அலைவரிசை, தன்னம்பிக்கை முனை எனும் நான்கு பிரிவுகளில் அமைந்த 36 கட்டுரைகளின் தொகுப்பே 'தமிழ் உலா' எனும் இந்நூல். தொல்காப்பியம் தொடங்கி சங்க கால இலக்கியங்கள் மற்றும் இன்றைய ஹைக்கூ வரையிலான இலக்கிய நயம் வாய்ந்த நூல்கள் பலவற்றையும் ஆய்ந்து இலக்கிய ரசனையாக்கியிருக்கிறார் இரா. மோகன். கபிலரின் காதல் சித்தரிப்பு, குறுந்தொகையில் உளவியல் நலம், நற்றிணையில் தலைவனின் பண்பட்ட உள்ளம், அகநானூறு காட்டும் பரத்தையின் பண்பு நலம், புறநானூறு காட்டும் உயிர் நட்பு, வள்ளுவரின் அரசியல் சிந்தனைகள், அப்பரின் ஆளுமை, கன்பூசியஸ் சிந்தனைகள், பாரதி போற்றும் தெய்வ வாழ்வு, மு.வ.–வின் மொழி ஆளுமை இவற்றோடு சமகாலப் படைப்பாளிகளின் கவி ஆளுமைகளையும் கவிதை நயங்களையும் சுவைபட எடுத்துச் சொல்லியுள்ள பாங்கு இலக்கிய ரசனையின் உச்சம் என்றே சொல்லலாம்.

– எம்.எஸ்.

## கலைமகள் தீபாவளி மலர் 2018

**த**மிழ் இதழ்களில் தனக்கென ஒரு சிறப்பிடம் கொண்ட இதழான 'கலைமகள்' இதழின் இவ்வாண்டு தீபாவளி மலர், ஓவியர் வேதாவின் கைவண்ணத்தில் அன்ன பூரணித்தாயின் முகப்போவியத்துடன் அழகுறத் தொடங்குகிறது.

சிருங்கேரி பாரதி தீர்த்த சுவாமிகளின் அருளுரையுடன் தொடங்கும் மலரில், அடுத்தடுத்து, பாரதக் குடியரசின் முன்னாள் தலைவர் பிரணாப் முகர்ஜி, துணைக் குடியரசுத் தலைவர் வெங்கய்யா நாயுடு, பிரதமர் நரேந்திரமோடி ஆகியோரின் கட்டுரைகளுடன் மேலே செல்கிறது.

இவ்வாண்டின் தீபாவளி மலர்களில் அதிகமான சிறுகதைகளைக் கொண்டிருப்பது 'கலைமகள் தீபாவளி' மலர் என்று சொல்லத்தக்க வகையில் நிறையச் சிறுகதைகள் சிந்தையைக் கவர்கின்றன.

அருட்செல்வரின் தனிச்செயலர் சி. இரவீந்திரன் எழுதியுள்ள நிர்வாகம் பற்றிய கட்டுரை, நிர்வாகத்தைத் தத்துவ ரீதியாகத் தரிசனம் செய்ய வைக்கிறது.

தமிழ்க் கடவுளாகிய முருகனைப் பற்றிய காஞ்சிப் பெரியவரின் "முருகன் என்றால் அழகு" என்ற கட்டுரை மிகச் சிறப்பானது. புதுவை வயி. நாராயணசாமியின் 'சைவ சமய வரலாறு' கட்டுரை, விரிவாகப் பல தகவல்களைத் தருகிறது.

நல்லி குப்புசாமி செட்டியார், கி.வா.ஜ., அ.ச.ஞானசம்பந்தன் ஆகியோரின் கட்டுரைகள் குறிப்பிடத்தகுந்தவை. ஈழத்து எழுத்தாளர்கள், புலம் பெயர்ந்த எழுத்தாளர்கள் என செங்கை ஆழியான், மாத்தளை சோமு, எம்.எம். ஜெயசீலன், இராசையா மகேஸ்வரன், வெ. புருசோத்தமன் உள்ளிட்ட பல எழுத்தாளர்களின் படைப்புகள் மலரைச் சிறப்பிக்கின்றன.

பூசை ச. ஆட்சிலிங்கத்தின் 'திருவெம்பாவை ஓவியங்கள்' பற்றிய கட்டுரையுடன் திருவெம்பாவை 20 பாடல்களுக்கான 20 வண்ண ஓவியங்கள் கண்களைக் கவர்கின்றன. முன்னாள் முதல்வர் எம்.ஜி.ஆர். பற்றிய 2 கட்டுரைகள் அருமை.

சிறுகதைகளுக்கான ஜமால், தமிழ் ஆகியோரின் ஓவியங்களுடன் பல கவிதைகள், நேர்காணல்கள், சுற்றுலாக் கட்டுரைகளுடன் 'கலைமகள்' தீபாவளி மலர் 2018 அற்புத மலராகத் திகழ்கிறது.

**கலைமகள் தீபாவளி மலர் 2018**
பக். : 270 விலை ரூ. 150/–
முகவரி : கலைமகள் பப்ளிகேஷன்ஸ்,
34/2, வீரபத்திரன் தெரு, மயிலாப்பூர், சென்னை – 600 004.
தொலைபேசி : 044-2498 1699.

– ஆர்.வி.

கட்டுரை

# தென்னர் கற்ப – ஒரு மீள்பார்வை

திருஞானசம்பந்தர் காலத்தில் பாண்டிநாடு சமணர்கள் பிடியில் இருந்தது. சமண முனிவர்களே ஆட்சியை நடத்தினர். அரசனின் ஆட்சி இல்லாமல், ஆண்டிகள் ஆட்சி நடைபெறுவதை முதலமைச்சர் குலச்சிறையும், பாண்டியன் மனைவி மானியும் வெறுத்தனர். ஆனால், 'அரசன் எவ்வழி, அவ்வழிக் குடிகள்' என்ற கோட்பாட்டில் செய்வது அறியாதிருந்தனர்.

சாக்கியர் (பௌத்தர்), சமணர் (ஜைனர்) கொள்கைகள் மக்கட்குத் தீங்கு பயப்பனவாதலால், அவர்தம் கொள்கைகள் அழிக்கப்பட வேண்டும் என்ற நோக்கில் திருஞானசம்பந்தர் அவதாரம் இருந்தது.



ஞானசம்பந்தர்

ஞானசம்பந்தர், பாண்டியன் பட்டத்தரசியின் அழைப்பின் பேரில் பாண்டி நாட்டிற்குச் செல்கிறார். முதலமைச்சர் குலச்சிறை எல்லா வகையிலும் உதவி செய்கிறார். திருஞானசம்பந்தர் பாண்டிநாடு சென்றது சமணர் தத்துவங்கள், அவர்கள் கொள்கைகள் மக்கட்குப் பயன்படாதன என்பதை எடுத்துச் சொல்லித் தம் கொள்கைகளை நிலைநிறுத்தவே என்பதை மறந்துவிடக் கூடாது.

சமண முனிவர்களை வெல்ல ஞானசம்பந்தர் படை எடுப்பா நடத்தினார்?

## சாமி. தியாகராசன்

திருஞானசம்பந்தர் வரலாறு, சமணர்களின் வீழ்ச்சி முதலானவை பார்ப்பனர்களின் சூழ்ச்சி என எந்தவித ஆதாரமும் இல்லாமல் மட்டை அடியாக வாதிடுபவரிடமும், பெரியபுராணம் சொல்லும் செய்திகளில் நம்பிக்கை இல்லை என்பவரிடமும் பேசிப் பயனில்லை. அது கிடக்க,

தேவாரம், பெரியபுராணம் முதலான நூல்களில் காணப்படும் செய்திகள் அக்கால நிகழ்ச்சிகளை ஒட்டியே பதிவு செய்யப்பட்டுள்ளன. தமிழகத்தின் குறிப்பிட்ட கால வரலாறு அந்த நூல்களால் அறியப்படுகிறது என்பாருக்கே இக்கட்டுரைச் செய்திகள் பயன் தரும்.

இல்லை. தனி ஒருவராகத் தம் சமயம் சார்ந்த அடியார்களுடன் சென்றார். அவர்களை வெல்ல வேண்டுமெனில், அவர்களோடு அமர்ந்து வாதம் (தர்க்கம்) செய்ய வேண்டும். தம் கோள் நிறீஇ அவர் கோள் இல்லாதவாறு செய்ய வேண்டும். இதுவே அவரது நோக்கம்.

சமண முனிவர்கள் கல்வி, கேள்வி, தத்துவ ஞானங்களில் கரை கடந்தவர்கள். ஒன்றன்மேல் ஒன்றடக்கி வாதம் செய்வதில் வல்லவர்கள். மந்திரங்களை

நன்கறிந்தவர்கள். இவற்றால் அன்றோ பாண்டியனை அவர்கள் தங்கள் கட்டுக்குள் வைத்திருந்தனர்! இத்தகைய சமண முனிவர்களின் ஆற்றலை நன்கறிந்தே பாலனாகிய சம்பந்தர் பாண்டி நாடு செல்கிறார்.

சம்பந்தர் பாண்டி நாடு சென்ற போது அவர் குழந்தையும் அல்லர், குமரனும் அல்லர். 9 அல்லது 10 வயதுடைய பாலர். "பானல் வாயொரு பாலனீங்கிவ னென்று நீபரி வெய்திடேல்" எனப் பாண்டியன் மனைவியை நோக்கிக் கூறிய சம்பந்தர் வாக்கு அதனை உறுதி செயும்.

சமணர்கள் பக்கம் அவர்கள் கற்ற கல்வியும், வாதிடும் திறனும் பக்க பலமாக நின்றன. நமது சம்பந்தர் பக்கம் அவர் கற்ற கல்வியுடன் கடவுளின் துணை அணைபோலப் பக்கபலமாக நின்றது. ஆலவாய் அரன் துணை தம்மிடம் பூரணமாக இருக்கும்போது இந்த ஈனர்களால் தம்மை ஒன்றும் செய்ய முடியாது என உறுதிபடக் கூறுகிறார். "ஈனர்கட்கெளி யேனலேன் திருவால வாயர னிற்கவே" என்பது சம்பந்தர் வாக்கு.




சமணர்களிடம் இல்லாத துணை சம்பந்தரிடம் உள்ளது. அந்தத் துணை எது? கடவுள் துணை. ஈசனாகிய பெருமான் துணை. சமணர்கட்குக் கடவுள் நம்பிக்கை கிடையாது. தாம் கற்று அறிந்த கல்வியின்மீது அவர்கட்கு நிரம்பிய நம்பிக்கை இருந்தது.

கல்வி கற்றதனால் ஆகின்ற பயன் தூய அறிவுடைய இறைவனின் நல்ல திருவடிகளைத் தொழுதலே என்கிறார் திருவள்ளுவர். தமது நூலின் முதற் பாடலில் இறைவனின் இருப்பை ஓர் எடுத்துக்காட்டுடன் நிறுவியவர். அடுத்த பாடலில் (இரண்டாம் குறளில்) கடவுளைத் தொழுதலே கல்வியின் பயன் என்கிறார். அன்றும் சரி! இன்றும் சரி! கடவுளின் இருப்பைப் பற்றி வாதிட்டுக் கொண்டிருப்பவர்கள் கல்வியாளர்களே என்பதை நாம் மறந்துவிடக் கூடாது.

கல்வியின் பயன் கடவுளைத் தொழுதல் என்னும் நமது ஆசான் வள்ளுவர் கருத்தினை ஏற்காதவர்கள் சமணர்கள். இதனைத்தான் நமது ஞானக்கன்று "ஆரியத்தோடு செந்தமிழ்ப் பயன் அறிகிலார்" என்று குறிப்பிடுகின்றார்.

ஆரியம், தமிழ் ஆகிய இரு மொழிகளிலும் ஆக்கப்பெற்ற எண்ணற்ற நூல்களை (குறிப்பாகத் தர்க்க நூல்) முற்றக் கற்றிருப்பினும், கல்வியின் பயனாகிய கடவுளைத் தொழுதலை அவர்கள் அறியாதவர்கள் என்பது சம்பந்தர் வாக்கின் பொருளாகும்.

கடவுளைத் தொழாத சமணர்களின் இந்தப் போக்கைத்தான் 'சமண இருள்' என்கிறார் வடலூர் வள்ளற் பெருமான்.

கல்விகள் அனைத்திற்கும் முடிந்த பயனாகிய கடவுள் இருப்பை நிலை நாட்டிச் சமணர்களைத் தெளியச் செய்வதும்; மன்னனை மடைமாற்றம் செய்வதுமே திருஞானசம்பந்தரின் நோக்கமாக இருந்தது. இந்த நோக்கம் நிறைவேறச் சமணர்களுடன் வாதிட வேண்டும். அவ்வாறு வாது போர் தொடங்குவதற்கு முன்பு தாம் வழிபடும் ஈசனின் அருளும், ஆசியும் வேண்டும். அதன்

பொருட்டுத் திருக்கோயிலுக்குச் சென்று வேண்டுகிறார்.

'காட்டு மாவதுரித்து' எனத் தொடங்கும் பதிகம்; 'வேத வேள்வியை' எனத் தொடங்கும் பதிகம் என்னும் இரண்டு பதிகங்களில் ஆலவாய் ஆண்டவனிடம் அனுமதியும் ஆசியும் வேண்டுகிறார்.


வள்ளலார்

வனிடம் ஆசி வேண்டினார் எனப் பாடலுக்குத் தொடர்பில்லாத, பொருந்தாத பொருளை அடாது கூறுவர்.

இவர்களின் கீழ்த்தரமான ஆய்விற்குள்ளாகும் பாடலை முழுவது மாகத் தருகிறேன்.

பதிகம் – பத்துப் பாடல்களையுடையது. ஞானசம்பந்தர் பதிகத்தில் பதினோராவதாக ஒரு பாடல் இருக்கும். அதனைத் 'திருக்கடைக்காப்பு' என்பர்.

'காட்டு மாவதுரித்து' எனத் தொடங்கும் பதிகத்தில் 'ஓட்டி வாது செய'; 'வாதில் வென்றழிக்க'; 'பைய வாது செய'; சீறி வாதுசெய'; 'வாதினில் செண்டடித்து'; 'கரக்க வாதுசெய'; 'சால வாது செய' என ஏழு இடங்களில் வாது செய்தலே தமது நோக்கம் என்பதைப் பதிவு செய்கிறார்.

'வேத வேள்வியை' எனத் தொடங்கும் பதிகத்தில் வாதில் வென்றழிக்க; எய்தி வாது செய; முறிய வாது செய; செறுத்து வாதுசெய; சிந்த வாதுசெய; ஓட்டி வாதுசெய; கழய வாதுசெய; தேற்றி வாதுசெய; சீலம் வாதுசெய; தென்ற வாதுசெய எனப் பத்துப் பாடல்களிலும் வாது செய்வதைப் பதிவிடுகிறார்.

இந்தப் பதிகத்தின் திருக்கடைக் காப்புப் பாடலில் காணப்படும் 'விடைகொண்டு' என்னும் சொல், வாதில் வெல்ல உத்தரவு பெற்றுக்கொண்டு என்ற பொருளைத் தந்து நிற்கிறது.

இப்படியாக இரண்டு பதிகங்களில் 17 இடங்களில் 'வாதுசெய' என வரும் சொல்லில் கருத்துச் செலுத்தாமல் சிலர் 'காட்டு மாவதுரித்து' எனத் தொடங்கும் பதிகத்தின் 3–ஆம் பாடலில் காணப்படும் 'தெண்ணர் கற்பழிக்கத் திருவுளமே' என்னும் அடியை எடுத்து வைத்துக்கொண்டு திருஞானசம்பந்தர் சமணப் பெண்களின் கற்பழிக்க ஆண்ட

"மண்ண கத்திலும்
வானிலும் எங்குமாம்
திண்ண கத்திரு
வாலவா யாயருள்
பெண்ண கத்தெழிற் சாக்கியப் பேயமண்
தெண்ணர் கற்பழிக் கத்திரு வுளமே"

என்பதுதான் அந்தப் பாடல்.

இந்தப் பாடல்தான் திருஞானசம்பந்தரின் ஆத்மாவை வெளிப்படுத்தும் பாடல் என நான் கருதுகிறேன். எதிர்க்களத்தில் நிற்பவர்களுடைய ஆற்றலை உயர்த்திப் பிடிக்கும் சம்பந்தரின் பண்பாடு இப்பாடலில் வெளிப்பட்டு நிற்கிறது.

சாக்கியர்களையும், சமணர்களையும் முண்டர் என்றும், குண்டர் என்றும், பேயர் என்றும் அவர்களுடைய நடை, உடை, குணப்போக்குகளைக் கொண்டு விமர்சிப்பது சம்பந்தர் பாணி. அத்துடன் அவர்களுடைய கல்வித்திறத்தைப் பாராட்டுவதும் அவருடைய சிறந்த குணம்.

இந்தப்பாடலில் சொல்லப்படும் "பெண்ணகத் தெழில் சாக்கியப் பேயமண் தெண்ணர்" என்னும் அடியின் பொருள் என்ன தெரியுமா? ஒரு பெண்ணின் உள்ளத்து உறுதிப்பாட்டைப் போன்று அதாவது கற்பொழுக்கத்தின் திண்மையைப் போன்று, தாம் கற்ற கல்வியில் திண்மையானவர் (வன்மையானவர், வலிமையானவர்) சாக்கியரோடு கூடியுள்ள சமணர் என்பது மேலே காணும் அடிக்கான பொருளாகும். இது எடுத்துக்காட்டு உவமை.

சமணர்களுடைய கல்வி வன்மையைப் பெண்ணின் மன உறுதியோடு ஒப்ப வைத்துள்ள சம்பந்தரை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

ஒரு சொல்லுக்கு இரண்டு பொருள்

களும், அதற்கு மேலும் இருப்பது மொழியின் சிறப்பு. அந்த வகையில் 'கற்பு' என்னும் சொல்லுக்கு மகளிரது ஒழுக்கம், கல்வி என இரண்டு பொருள்கள் உள்ளன.

சம்பந்தரின் இந்தப் பாடலில் அவ்விரண்டு பொருள்களைக் குறிக்க 'எழில்' என்ற சொல்லும், 'கற்பு' என்ற சொல்லும் சம்பந்தரால் பயன்படுத்தப்படுகின்றன.

'எழில்' – மகளிரின் கற்பொழுக்கமாகிய அழகு. 'கற்பு' – சமணர்களின் கல்வி வன்மை.

இந்தப் பாடலில் இருக்கும் 'தெண்ணர்' என்ற சொல் சிலரை மயங்கச் செய்யும். இந்தச் சொல் 'திண்ணர்' என்பதன் மரூஉ. திண்ணர் என நேரே சொல்லாமல் அதனை மருவி வழங்குவது ஏன்? என்ற கேள்வி எழலாம். பாடலின் இரண்டாம் அடியின் முதல் சீர் 'திண்ணகம்' என இருப்பதால், பாடலின் நான்காம் அடியின் முதற்சீரையும் அதே சொல் கொண்டு அமைக்க வேண்டாம் என்ற கருத்தில் 'தெண்ணர்' என்ற சொல் ஆளப்பட்டிருக்கலாம்.

மேலும் 'எனதுரை – தனதுரை' என்று சொல்லும் சம்பந்தர் போன்ற அருளாளர்களின் வாக்கை என்ன காரணத்தினால் அது ஆளப்பட்டுள்ளது என அளந்து பார்க்க இயலாது. இருக்கின்ற சொல்லுக்குப் பொருள் கூறுவதோடு நமது பணி நிறைவடைகிறது. அவ்வளவே!

தெண்ணர் – திண்ணர். திண் – வலிமை. எதில் வலிமை? கற்பில் (கல்வியில்) வலிமை. சமணர்களின் கல்வி வன்மையை அழிக்கத் திருவுளமே – ஏகாரம் வினாப் பொருளில் வருகிறது.

பிறந்த குழந்தையாக இருந்த கண்ணப்பரை அவர் தகப்பன் நாகன் தூக்கிக் கையில் தாங்கினான். குழந்தை மிகவும் கனமாக இருந்தது. கனமாக இருக்கும் இக்குழந்தையைத் 'திண்ணன்' என அழைப்போம் என்றானாம் நாகன்.

உலகில் உள்ள புண்ணியங்களெல்லாம் ஒப்பற்ற ஓர் உருவாகச் சேர்ந்ததால் வந்த வலிமை என்கிறார் சேக்கிழார். புண்ணியங்கள் சேர்ந்து வலிமை பெற்றது போலக் கல்விகள்பல சேர்ந்து சமணர்களுக்கு வலிமை சேர்த்தது என்க.

சமண முனிவர்கள் கல்வியிலும், வாதம் செய்வதிலும் மிகவும் வலிமையானவர்கள் என்பதைத் தெய்வச் சேக்கிழார் "தேற்றமில் சமண் சாக்கியத் திண்ணர்" (திருஞானசம்பந்தர் புராணம், பாடல் 1090) எனக் குறிப்பிடுவது கொண்டு அறியலாம்.

'திண்ணர்' என்ற சொல்லைச் சேக்கிழார் பயன்படுத்தும் பாங்கினை உணரவேண்டும். திண்ணர் என்ற சொல்லின் மரூஉதான் தெண்ணர் என்ற சொல் என்பதைச் சேக்கிழார் வாக்குக் கொண்டு உறுதி செய்யலாம்.

ஆக, இதிலிருந்து என்ன தெரிகிறது? சமணர்கள் கல்வி கேள்விகளில் மிகவும் வலிமையானவர்கள் என்பதும், 'தெண்ணர் கற்பழிக்க' என்னும் தொடர் **அவர்களின் கல்வி வன்மையை அழிக்க என்னும் பொருளைத் தந்து நிற்கிறது** என்பதும் தெரிகிறது.

சமணர்களின் கல்வி வன்மையை அழிப்பதுதான் சம்பந்தரின் நோக்கமே தவிர, அவர்களை அழிப்பதோ, சமணப் பெண்டிரின் கற்பை அழிப்பதோ (ஒழுக்கத்தைக் குலைப்பதோ) அவர் நோக்கமன்று. அப்படி அவரிடம் ஒரு நோக்கமிருந்தால் 'ஆழ்க தீயரெலாம்' என ஆண்டவனிடம் வேண்டியிருப்பார். மாறாக, அவர் இறைவனிடம் வேண்டுவது "ஆழ்க தீயதெலாம்" என்பதே தவிர, வேறில்லை.

தீயது – குணம்; தீயர் – குணி (குணத்தைக் கொண்டிருப்பவர்)

'கற்பழிக்க' என்ற சொல்லிற்குப் பொருள் காணும்போது, அச்சொல் ஆளப்படும் காலம், இடம், சந்தர்ப்பம் ஆகியவற்றை எண்ணியே பொருள் சொல்ல வேண்டும். சமயக் காழ்ப்புக் கொண்டோ, தற்சார்பு கொண்டோ பொருள் சொல்லக்கூடாது. தமிழ்ச் செம்மல் கூறியுள்ள வழியில் சென்று பொருள் காணவேண்டும்.

"பொழிந்தினிது நாறினும் பூமிசைதல் செல்லாது
இழிந்தவை காமுறூஉம் ஈப்போல் – இழிந்தவை
தாம்கலந்த நெஞ்சினார்க்கு என்னாகும்
தக்கார்வாய்த்
தேம்கலந்த தேற்றச்சொல் தேர்வு"

– நாலடியார்

●

## விஜய பாரதம் தீபாவளி இதழ் – 2018

இந்த ஆண்டு 'விஜய பாரதம் தீபாவளி இதழ் – 2018' வழக்கம்போல் இரு புத்தகங்களாக வெளிவந்துள்ளது. ஒன்று பல வண்ண இதழாகவும், மற்றொன்று இரு வண்ண இதழாகவும் சிறப்பாகக் காணலாகின்றது.




ஓவியர்கள் மணியம் செல்வன், மாருதி இருவரின் கைவண்ணங்களில் இரண்டு இதழ்களின் முகப்போவியங்கள் கண்களைக் கவர்கின்றன.

நாட்டுப் பற்று, பண்டைய பண்பாடு, நாட்டின் சிறப்புகள், வளங்கள் ஆகியவற்றைப் போற்றிப் பாதுகாப்பதைத் தனது குறிக்கோளாகக் கொண்டு செயல்பட்டு வரும் 'விஜய பாரதம்', இந்தத் தீபாவளி இதழ்களையும் அந்தக் குறிக்கோளின்படியே வெளியிட்டிருப்பதைக் காணலாகின்றது.

முதல் இதழ் ஆறுகள் பற்றிய சிறப்பு மலராக வெளிவந்துள்ளது. அகத்திய முனிவர் காவிரியைத் தன் கமண்டலத்தில் அடைத்து வைத்திருக்க, அதனை விநாயகப் பெருமான் கவிழ்த்துவிட்டுக் காவிரி பெருகி வரும் முகப்போவியத்துடன் அழகாக உள்ளது.

நம் நாட்டின் பல ஆறுகள் பற்றிய சிறப்புச் செய்திகள் நிறைய வண்ணப்படங்களுடன் இதில் வெளியாகியுள்ளன. ஆறுகள் பற்றிய புராணச் செய்திகள், கதைகள், விழாக்கள், நீராடலின் புண்ணியப் பயன்கள் எனப் பல்வேறு தகவல்கள் விரிவாகத் தரப்பட்டுள்ளன.

இரண்டாவது இதழ், வழக்கமான கதை, கட்டுரை, கவிதை எனப் பல்சுவை மலராக வந்துள்ளது. இதிலும் ஆறுகள் பற்றிய கட்டுரைகளும், சிறுகதைகளும் உள்ளன. தேவிபாலா, படுதலம் சுகுமாரன், சுபா முதலிய புகழ்பெற்ற எழுத்தாளர்களின் சிறுகதைகள், ராஜேஷ் குமார், சி. கோபாலன், திருநின்றவூர் ரவிக்குமார், குடவாயில் பாலசுப்பிரமணியன் முதலியோரின் கட்டுரைகளும் இந்த இதழுக்குப் பெருமை சேர்க்கின்றன.

தீபாவளி பற்றிய கவிஞர் அழகுதாசனின் கவிதையுடன் தொடங்கும் இவ்விதழில், முருக சரணன், எஸ்.ஆர்.எஸ். ரெங்கராஜன், முத்துவிஜயன், கலா லோகநாதன் உள்ளிட்டோரின் கவிதைகள் இடம்பெற்றுள்ளன. இவையன்றி, மூன்று நேர்காணல்களும் உள்ளன. மொத்தத்தில் 'விஜயபாரதம் தீபாவளி இதழ் 2018' கண்களுக்கும், கருத்துக்கும் விருந்தாக அமைந்துள்ளது.

**விஜயபாரதம் தீபாவளி மலர் – 2018**

பக். : 424, விலை : ரூ. 100/–

முகவரி : பாரதிய கலாச்சார சமிதி, 79, முதல் தளம்,

டாக்டர் அழகப்பா சாலை, புரசைவாக்கம்,

சென்னை – 600 084. போன் : 044 – 26421271.

## அமுதசுரபி தீபாவளிச் சிறப்பிதழ் 2018

'அமுதசுரபி' தீபாவளிச் சிறப்பிதழ் 2018 பல் துறைச் சிறப்பிதழாக வெளிவந்துள்ளது.




பழைய இலக்கியம், தற்கால இலக்கியம், பயண இலக்கியம் என இலக்கியத் துறைகளுடன், ஆன்மிகம், சிறுகதை, கவிதை, கலை, பொது என எட்டுத் துறைகளில் சிறப்பிதழ் அழகுடன் திகழ்கிறது.

பழைய இலக்கியங்களில் கம்பராமாயணம் பற்றிய கட்டுரைகளும், திருக்குறள் பற்றிய கட்டுரையும் அருமை. சோதிடச் சக்கரவர்த்தி எனப் போற்றப்படும் ஏ.எம். ராஜகோபாலன் அவர்களுடனான நேர்காணல், சோதிடம் அறிவியல் பூர்வமானது என்று எடுத்துரைக்கிறது.

நல்லி குப்புசாமி செட்டியாரின் 'அதிகம் அறியப்படாத கீதை', சுவாமி ஓங்காராநந்தரின் 'திருக்குறள் கடவுள் வாழ்த்து', ஊரன் அடிகளின் 'வள்ளலார் அன்னதானத்துக்கு முக்கியத்துவம் அளித்தது ஏன்?' முதலிய ஆன்மிகக் கட்டுரைகள் இதழுக்குச் சிறப்புச் சேர்க்கின்றன.

லா.ச.ரா. சப்தரிஷி, சாந்தகுமாரி சிவகடாட்சம், ரமாமணி சுந்தர், சுதேவன் ஆகியோரின் பயணக் கட்டுரைகள் அருமை. கவிஞர்கள் சிற்பி, இசைக்கவி ரமணன், வ.வே.சு., வைகைச்செல்வி, ஏர்வாடி இராதாகிருஷ்ணன் உள்ளிட்ட பலரது கவிதைகள் இதழை அழகுபடுத்துகின்றன.

நாடகம், திரைத்துறை, நடனம், இசை, திரையிசை எனக் கலைத்துறை பற்றிய படைப்புகள் மனதைக் கவர்கின்றன. பொதுப் பிரிவில் சுற்றுச்சூழல் பற்றிய மருத்துவர் ராமதாசுவின் கட்டுரை, ப.க. பொன்னுசாமியின் 'அறிவியலும் கலைகளும்' எனும் கட்டுரை, நீதியரசர் வள்ளிநாயகத்தின் 'தமிழா உன்னை அறிவாய்' கட்டுரை முதலியன கருத்துக் கருவூலங்களாக விளங்குகின்றன.

அமுதசுரபி தீபாவளிச் சிறப்பிதழ் 2018, படிக்கப் படிக்கச் சுவை தருவதாகத் திகழ்கிறது.

**அமுதசுரபி தீபாவளிச் சிறப்பிதழ் 2018**

பக் : 300, விலை : ரூ. 175/–

முகவரி : ஆர் 5 – ஏ/2 தரைத்தளம்,

இமயம் காலனி இரண்டாவது தெரு,

அண்ணா நகர் மேற்கு விரிவு, சென்னை – 600 101.

தொலைபேசி : 044 – 43538245.

**– ஆர்.வி.**

# ஓம் சக்தி

ஆருயிர்களுக்கு எல்லாம் – நான்
அன்புசெயல் வேண்டும்.
– வள்ளலார்

மலர் : 36 டிசம்பர் 2018 இதழ் : 11

நிறுவனர் : **நா. மகாலிங்கம்**

ஆசிரியர் & வெளியிடுபவர் : **ம. மாணிக்கம்**

*Editor & Publisher* : **M. MANICKAM**

அச்சிடுபவர் : **து. ராஜ்குமார்**

*Printer* : **T. RAJKUMAR,**

**Rukmani Offset Press**

ருக்மணி ஆப்செட் பிரஸ்,
E-32, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்,
கோவை – 641 021.

இணையாசிரியர் : **பெ. சிதம்பரநாதன்**

கதை, கவிதைகளில் வரும் பெயர்களும்,
சம்பவங்களும் கற்பனையே.

படைப்புகளைச் சுருக்கவோ, திருத்தி அமைக்கவோ
ஆசிரியருக்கு உரிமை உண்டு.

'ஓம் சக்தி'யில் பிரசுரமாகும் படைப்புகளின் கருத்துகள்
அவற்றின் எழுத்தாளர்களுக்கு உரியவையே தவிர,
பத்திரிகை அவற்றிற்குப் பொறுப்பேற்காது.

**தனிப் பிரதி ரூ.15/-**
**ஆண்டு சந்தா ரூ. 265/-**
**(தீபாவளி மலர் உட்பட)**
**ஆயுள் சந்தா ரூ. 2000/-**
(10 ஆண்டுகள்)

சந்தா தொகையை "SAKTHI SUGARS LTD. A/c OMSAKTHI" என்ற பெயரில் D.D.–யாகவோ அல்லது மணியார்டர் மூலமாகவோ அனுப்ப வேண்டிய முகவரி :

**ஆசிரியர், ஓம் சக்தி**
**69–ஏ, ஆரோக்கியசாமி சாலை (மேற்கு),**
**ஆர்.எஸ்.புரம், கோவை – 641 002**
**போன் : 0422–4322471, 0422–4322423**
வெளியிட்டோர் : **சக்தி சுகர்ஸ் லிமிடெட்.**

E-mail : omsakthieditorial@gmail.com




சமையல்

## சோயா பனீர் மசாலா

**தேவையானவை :** சோயா பயறு : 200 கிராம், பனீர் : 100 கிராம், தக்காளி : 4, வெங்காயம் : 2, பச்சை மிளகாய் : 3, இஞ்சி விழுது : 1/2 தேக்கரண்டி, வெள்ளைப்பூண்டு விழுது : 1/2 தேக்கரண்டி, தனியாதூள் : 3 தேக்கரண்டி, கரம் மசாலா : 1 தேக்கரண்டி, உப்பு, எண்ணெய் தேவைக்கு, கடுகு, கறிவேப்பிலை தாளிக்க, கொத்துமல்லிக் கீரை சிறிதளவு.

**செய்முறை :**

1. சோயா பயறைக் குக்கரிலிட்டு நன்கு அவித்துக் கொள்ளவும்.
2. பனீரைச் சிறுசிறு துண்டுகளாக நறுக்கி வைக்கவும்.
3. தக்காளி, வெங்காயம், பச்சை மிளகாய் இவற்றை நீளவாக்கில் நறுக்கி எடுக்கவும்.
4. வாணலியில் அவித்த சோயா பயறு, நறுக்கிய பனீர் துண்டுகள், தக்காளி, வெங்காயம், பச்சை மிளகாய், வெள்ளைப்பூண்டு, இஞ்சி விழுது, கரம் மசாலா, தனியாதூள், இரண்டு டம்ளர் நீர், உப்பு இவற்றை இட்டு நன்கு கலந்து வேக வைக்கவும்.
5. தண்ணீர் முழுதும் வற்றி கலவை நன்கு சுருண்டு, கமகம வாசனை வந்ததும், கடுகு, கறிவேப்பிலை தாளித்திட்டு இறக்கவும்.
6. இதில் கொத்துமல்லிக் கீரையை மேலாகத் தூவவும்.

சுவையான 'சோயா பனீர் மசாலா' தயார். எல்லாவிதச் சாதங்களுடனும் வைத்துச் சாப்பிட மிகவும் சுவையாக இருக்கும்.

– ராதிகா அழகப்பன், விக்கிரமசிங்கபுரம்.

நல்வாழ்த்துக்களுடன்!



ஜோதி ஜோதி ஜோதி சுயஞ்
ஜோதி ஜோதி ஜோதி பரஞ்
ஜோதி ஜோதி ஜோதி அருள்
ஜோதி ஜோதி ஜோதி சிவம்

# ஏ.பி.டி. இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்

சக்தி பைனான்ஸ் பில்டிங், டாக்டர் நஞ்சப்பா ரோடு,
கோயமுத்தூர் - 641 018 போன் : 0422-2233982, 2233983

கட்டுரை

# வளமான வள்ளல் திருவள்ளுவர்



சூர்யகாந்தன்

கருத்துலகிலே, பறந்து திரிந்து மகிழும் குயிலைப் போன்றவன் கவிஞன்! குயில்கள் "ஒன்று கூவுவதைக் கேட்டு, இன்னொன்று கூவுவதில்லை." எல்லாக் குயில்களுமே... ஒன்றுபோலவேதான் கூவுகின்றன! இதைப் போலவே கவிஞர்களும் எனச் சொல்லலாம்!

கம்பன் கவியுலகில் தன்னிகரற்றவன் என்பதில் ஐயமில்லை. அவனுடைய அரிய கருத்துக்கள் பலவும், காளிதாசனிடத்தில் காணப்படுகின்றன. வால்மீகி, ராமாயணத்தை மொழிபெயர்த்துச் சொல்ல, கம்பன் அதனை உள்வாங்கிக் கொண்டு, கற்பனைத் தேனைக் கலந்து, கவியமுதமாக ஆக்கினான் என்பதை வரலாறு காட்டுகிறது! கதையானது மொழிபெயர்ப்பாக, கற்பனையானது சொந்தமானதாக இருந்துள்ளது. கற்பனையில் கம்பன், காளிதாசனைப் பின்பற்றினான் என்றும் குறிப்பிட முடியாது!

கடல்கோளுக்கும், பற்பல படையெடுப்புகளுக்கும் தப்பித்து இன்றளவிலும் பழமையைப் பாதுகாத்துத் தொல்காப்பியமும், திருக்குறளும் நிற்கின்றன அல்லவா...!

தொல்காப்பியமும், மொழியமைதியை முன்னதாகக் கூறி, பிறகு அந்த மொழியைப் பேசும் மக்களின் அகவாழ்க்கை, புறவாழ்க்கையின் இயல்புகளை எடுத்துரைக்கிறது! அதனையடுத்துப் பாடல்களில் உள்ள அழகுகள், அவற்றால் மனிதன் அனுபவிக்கின்ற சுவைகள், அதை உணரும்போது ஏற்படும் உடல்நிலைகள் முதலிய சிறந்த கவிதைப் பண்புகளைக் காட்டுகிறது. வாழ்க்கையை உணர்த்தும் இலக்கியங்கள் எந்தெந்தப் பாடல்களால் இயற்றப்பட்டிருந்தன? அவற்றின் தன்மைகள் எப்படிப்பட்டவை? என்பதையெல்லாம் விளக்குகிறது! சொல்லாட்சி பற்றியும், நூல்களின் பொது இயல்பு பற்றியும் அமைந்திருக்கும் மரபுகளையும் அறிவிக்கிறது! இதனால் தொல்காப்பியம் என்பது 'இலக்கணமாக' அமைந்துவிடுகிறது. பேரிலக்கணம் என ஆகிவிடுகிறது.




திருக்குறள், மக்களின் வாழ்க்கை இயல்புகளை மட்டும் கச்சிதமாக எடுத்துரைக்கிறது. அதனால் 'இலக்கியமாக' ஆகிவிடுகிறது. வாழ்க்கையின் இலக்கணங்களைக் குறிக்கோளுடன் அறிவிப்பதனால் இதனை 'இலக்கிய இலக்கணம்' என்றும் உறுதிப்படுத்தலாம்! 'பேரிலக்கியம்'

என்றும் அறுதியிடலாம்.

அகன்று, பரந்து வியாபித் திருக்கும் உலகம் ஒரு மாபெரும் மலரைப் போன்றது. அதில் ஊறித் ததும்பும் தேனாகத் திருக் குறள் உள்ளது. எல்லா மணமும், எல்லாக் குணமும் இதிலே இயல் பாக இருப்பதை, வாசிக்கும் போதே உணர முடிகின்றது.

உலகப் பொதுமறையான இந்தக் குறளின் பாக்களிலே எத்தனையோ மலர்களும், மரங்களும் இடம்பெற்றுள்ளன. தாமரை, குவளை, அனிச்சம் முதலிய மலர்களும், மூங்கில், வற்றல், முள்மரம், நச்சுமரம், மருந்து மரம், பழமரம் முதலிய மரங்களும் நெருஞ்சி, பசும்புல் முதலிய படர்செடிகளும், குன்றி யாகிய கொடி வகையும் செழிப் பாக வாழ்கின்றன.

**அ**னிச்சத்தின் தன்மையை 'மோப்பக்குழையும்' என்கிறார் வள்ளுவர். முகர்ந்து பார்த்த வுடனே வாடிவிடும் என்றால், மூச்சுக் காற்றின் இளஞ் சூடானது அதைப் பாதிப்பது இதனால் தெரிய வருகின்றது.

'காம்பு கிள்ளாமல் அனிச்சம் பூவைச் சூடியதால், தலைவியின் இடை ஒடிந்தது' என்று கூறுகையில், பூவின் மென்மை மூலமாகவே இடை யின் மென்மையும் உணர்த்தப்படு கிறது! சரி, இந்தப் பூவானது கோட்டுப் பூ வகையைச் சேர்ந் ததா? நீர்ப் பூ வகையைச் சேர்ந்ததா? என்கிற சந்தேகம் பலருக்கு ஏற்படுவதுண்டு!

இதன் இலை, கிளை முதலியவற்றின் அமைப் பைக் கொண்டு இது செண்பகப் பூப் போலக் காட்சி தருகின்றது. மாசி, பங்குனி மாதங்களில் பூத்து நிற்கிறது. மாலை வேளையில் மலர்ந்து, விடியலிலே உதிர்ந்து விடுகிறது.


தொல்காப்பியர்


கம்பர்




குவளை மலர்கள் மேல் நோக்கி மலர்வதையும், ''வெள் ளத்தனைய மலர்நீட்டம்; மாந்தர் தம் உள்ளத்தனைய துயர்வு'' என்கிற கருத்தையும் கவனித் தால், நீர்ப் பூக்கள் எல்லாமே நீரின் அளவுக்கேற்ப வளர்ந்து, மலர்வதை அறிந்துகொள்ள முடி கிறது.

**மூ**ங்கில் மரமானது இலக்கிய உலகில் பரவலாகப் பயன்படுத்தப்பட்டுள்ள மரம்! மாதர்களின் தோளுக்கு உவமை யாக எடுத்துக்காட்டப் பெற்றுள் ளது. அமையார் தோள், வேய்த் தோள் என்றெல்லாம் கையாளப் பட்டுள்ளன. 'அமை' என்பது மூங்கிலின் மறுபெயர் எனினும், அது ஓர் இனம் எனக் குறிப் பிடும். பழமொழி நானூற்றில் 'அமையோடு வேய்கலாம் வெற்ப' என்று காணப் பெறு கிறது. அமை என்பது 'முள் ளில்லா மூங்கில்' எனத் தெளிவு கூறுவர்!

முள் உள்ள மரங்கள் எல்லா வற்றையுமே ''முள்மரங்கள்'' என்றே சுட்டுவது இயல்பு. பகையை, முளையிலேயே களைய வேண்டும் என்பதற்கு 'இளைதாக முள்மரம் கொல்க' எனக் குறிப்பிடுவதையும் காண முடியும்! முற்றின வைரங் கொண்டு கீறியும், குத்தியும் கையை வருத்தும் என்று அதன் இயல்புத் தன்மையும், இயற்கைத் தன்மையும் இனங்காட்டப்படுதல் உண்டு.

இவ்விதமே மருந்து மரங்கள், கனி மரங்கள், நஞ்சு மரங்கள் வகைப்படுத்தப்பட்டுள்ளன. மருந்து மரத்தின் இலை, தளிர், பட்டை, வேர் என்று அனைத்துமே மருந்தாக மிளிர்வதைத் 'தப்பா மரம்' என்று கூறுகிறார் வள்ளுவர்.

கனி மரங்கள் ஊரின் மத்தியில்

இருந்துவிட்டால் எல்லோருக்கும் பயன்படுவதையும்; காய்த்த மரம்தான் கல்லடி படுமென்பதையும் நன்கு அடையாளப்படுத்துகிறார். இவ்விதமே யாருக்கும் பயன்படாமல் செல்வத்தைச் சேகரித்து வைத்திருப்பவன் செயலை, “நடுவூருள் நச்சுமரம் பழுத்தது போலவே” என்பது கவனிக்கத் தக்கது.


அனிச்சம் மலர்

மரத்தின் கிளைகள், மலர்கள், காய்கள், விதைகள், தளிர்கள் என்பவையும் கையாளப்பட்டுள்ளன.

**வி**லங்குகளிலே யானை, குதிரை, பசு மாடு, காளை, ஆடு, நரி, புலி முதலியவையும் அணிவகுக்கின்றன. இதிலே அதிக இடங்களில் தனது பெரும் உடலைப் போன்று யானை ‘உலா’ வந்துள்ளது. யானையைக் குழியில் விழவைத்து, பிறகு யானையைக் கொண்டு வந்து அதை மேலே இழுப்பது என்பது வழக்கம். இதனை “யானையால் யானையாத்தற்று” என்று திருக்குறள் சொல்கிறது.

யானை வலியுமையுள்ள மிருகமே எனினும்; அது சேற்றில் அகப்பட்டுக் கொள்ளும் இக்கட்டான தருணத்தில், நரியானது அதனைக் கடித்துத் துன்புறுத்தும், தசையை இரையாக்கும்! புலி பாய்ந்து தாக்கும்போது, யானை பயப்படும்!

வேட்டைக்காரர்கள் அம்புகளாலும், வேல்கள், ஈட்டிகளாலும் யானையைத் தாக்குவர்! அம்பு, தைத்தாலும் யானை சோர்வடையாமல், தனது கடமையில் தவறாமல், தான் யார் என்பதைப் பெருமிதமாய்த் தெரியப்படுத்தும்.

குதிரைகளின் இயல்பு பற்றியும் குறிப்பிடும் குறட்பாக்கள் உண்டு. நன்கு பழக்கப்பட்ட குதிரை போரில் சலிப்புக் கொள்ளாது என்றும் பழக்கப்படாத குதிரையானது போரின்போது தலைவனைத் தள்ளிவிட்டு, தான் பிழைத்தால் போதுமென ஓடிவிடும் என்றும் காட்டப் பெறுகிறது.


கவரிமா

மா இனத்தில் ஒன்றாகிய கவரிமா, தனது உடலில் மயிர்கள் நிறையக் கொண்டிருக்கும்! அம்மயிர்கள் நீங்கினால் அந்தக் கவரிமா உயிர் வாழாதாம். இதனை மானம் நிறைந்த மாந்தர், செய்கைக்குக் கையாண்டுள்ளது கவனத்தில் கொள்ளத் தக்கதாயுள்ளது.

பசு, வீட்டில் விரும்பி வளர்க்கப்படும் விலங்கு! இதற்குத் தவறாமல் தீவனமும், தண்ணீரும் தரப்பட வேண்டும்! காளையும் இவ்விதமே! இவை தானிய மணிகள், உழவனின் வீட்டில் குவிய வழி செய்வன! எனினும், கழிக்கப்படும் வைக்கோலையேதான் தனது உணவாகக் கொள்கின்றன! கன்றுக்குட்டிக்கு, குறைந்த அளவிலும், உரிமையாளருக்கு நிறைந்த பாலையும் வழங்கும் உயர்ந்த குணத்தைக் கொண்டுள்ளன.

கொடிய விஷம் கொண்டதெனப் ‘பாம்பை’க் கண்டால் பயம் உண்டாகிறது. அதற்குப் பாலை ஊற்றினாலும் பாதகம் செய்வதிலிருந்து மாறாமலே உள்ளது. எலும்பில்லாத உயிராகிய புழுவானது, வெயிலில் வாடி வதங்கிப் படும் சிரமத்தை உன்னிப்பாய்ப் பதிவு செய்துள்ள பாங்கும் முக்கியமானது.

நீர்வாழ் உயிரிகளிலே மீன்கள், முதலைகள், ஆமைகள் முதலியவையும் வரிசைப்படுத்தப்பட்டுள்ளன. தனக்குத் துன்பம் நேருமெனில் கால்களையும், தலையையும் ஓட்டுக்குள் அடக்கிக் கொண்டு, தன்னைக் காப்பாற்றிக் கொள்ளும் குணம்கொண்ட ஆமையும், உணவு கொள்ளும் விருப்பத்தால், தூண்டிலின் புழுவை விழுங்கி, தானே அகப்பட்டு உயிரை விடும் மீனும் உதாரணங்களாகி உள்ளன.

**ப**றவைகளில் ஆந்தை, காகம்,



கொக்கு எனக் குறள்களில் வருகின்றன. ஆந்தைக்கும், காகத்திற்கும் எப்போதும் பகை! பகலில் கண் தெரியாத ஆந்தை, காகத்திடம் தோற்றுவிடுவதும், இரவில் அதே ஆந்தை, காகத்தை வென்று விடுவதும் குறிப்பிடப்பட்டுள்ளது.

காகத்திடம் உள்ள நற்குணங்களில் பகுத்துண்ணும் சிறப்பு பாராட்டுதலுக்கு உள்ளாகிறது. மிகச் சிறிய அளவில் உணவு அகப்பட்டாலும், அதைத் தனது இனத்தாருக்குத் தெரிவித்து, பகிர்ந்து உட்கொள்ளும் முறையானது இதைப் பின்பற்றி நடக்கும்படி பகர்கிறது.

கொக்கு நல்ல வாய்ப்பான உணவு வரும் வரை (அது மீனாக எண்ணிக் கொள்ளலாம்) ஒற்றைக் காலில் நின்று தவம் செய்யும் விதத்தை, உணவு தென்பட்டவுடனே அதைத் துரிதமாகத் தனக்குரியதாக்கிக் கொள்ளும் வேகமும் காட்டப்படுகிறது. கூட்டில் தாய்ப் பறவையின் அரவணைப்பிலும், இரையூட்டலிலும் பாதுகாப்பாய் இருந்து, இறகு முளைத்தாலும், குஞ்சுகள் சொல்லிக் கொள்ளாமல் பறந்து விடுவதும் பிறவிக் குணம் போல் வரையப்பட்டுள்ளது.

மயிலிறகும், அன்னத்தின் சிறகும் மென்மைக்குச் சரியான எடுத்துக்காட்டுகளாகி உண்மை சொல்கின்றன.

**பி**றந்த நேரக் குறிப்பைச் சரிவரக் கணித்து, அந்த மனிதனின் வாழ்க்கைச் சரிதத்தைத் துல்லியமாக ஓலைச்சுவடிகளில் எழுதுவதில் ‘வள்ளுவர்’ எனும் இனத்தார் அரை நூற்றாண்டுக்கு முன்பு வரையில்கூட அயர்வின்றிச் செயல்பட்டு வந்தனர்! அது அவர்களின் ‘குலத்தொழில்’ என்றும் கூறுவர். இந்த வள்ளுவனோ உலக மனித குலத்தை முன்னிறுத்தி அவர்களின் வாழ்க்கை ஜாதகத்தைக் கணித்துக் குறட்பாக்களாக எழுத்தாணி கொண்டு பதிவு செய்த பெருந்தகையாளன் என்றேதான் கூற வேண்டும்!

திருவள்ளுவர் சங்க காலத்துக்கு முற்பட்டவர் என்பார். அதற்குத் திருக்குறளில் உள்ள சொல்லும், பொருளும் சங்க நூல்களில் உள்ளவையோடு ஒத்துள்ளதைச் சான்று காட்டுகின்றனர்!

தொல்காப்பியத்தில் வருகின்ற

“நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த

மறைமொழிதானே மந்திரம் என்ப...”

எனும் சூத்திரமும்,

“நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து

மறைமொழி காட்டிவிடும்”

எனும் குறட்பாவும் சொல்லால் பொருளால் மிகவும் ஒத்து இருப்பதை வைத்து, திருவள்ளுவர் தொல்காப்பியருக்கும் முந்தின காலத்தவர் என்றும் கூறிவிட இயலாது.

இளங்கோவடிகளும், சீத்தலைச் சாத்தனாரும் திருக்குறளில் மனம் தோய்ந்து திளைத்துள்ளதை வைத்துக் காப்பிய காலத்துக்கு முற்பட்டவர் வள்ளுவர் என்று வரையறுக்க வாய்ப்புள்ளது.

இவர் தமது காலத்தில் இருந்த தமிழ் நூல்களையும், பிற மொழிகளையும் நன்கு ஆராய்ந்துள்ளார். பல பேறறிவாளர்களுடனும், அரசர், அமைச்சர் முதலியோருடனும் பழகி அரசியல் அறிவை அறிந்து, தமது அனுபவத் திறத்தால், பலவற்றைத் தெரிந்து கொண்டு அறிவுக் கருவூலத்தை உண்டாக்கியுள்ளார்!

அதை மூலதனமாகக் கொண்டு பல வருடங்கள் ஆழ்ந்து சிந்தித்து, கருத்துக்களை வகை செய்துள்ளார். சுருக்கமான சொற்களில், மிகச் செறிவானதையெடுத்துக் குறட்பாக்களாக வடித்துள்ளார்.

இத்தகு வளமை நிறைந்த வள்ளலைத் தமிழகம் பெற்றுத் தந்துள்ளதும், அதை உலகினர் பெற்றுச் சிறப்படைந்துள்ளனர் என்பதும் பெருமைக்குரியது.

●

கட்டுரை

டாக்டர் க. பழனித்துரை



கல்வியாண்டின் தொடக்கத்தில் தினசரி பத்திரிகைகளைத் திறந்தால் முதலில் நாம் பார்க்கும் விளம்பரம் கல்வி விளம்பரம்தான். அதேபோல் காட்சி ஊடகங்களைத் திறந்தால் நாம் அதிகம் காண்பது கல்வி விளம்பரங்கள்தான். ஒன்று நீங்கள் டாக்டராக வேண்டுமா? பொறி யியல் பட்டத்தை ஐ.ஐ.டி.–

# நமக்குத் தேவை அடிப்படைப் புரிதல்



யில் படிக்க வேண்டுமா? என்ற கேள்வியுடன் ஆரம்பித்து நாங்கள் உங்களைத் தயார் செய்கிறோம்; வாருங்கள் என்று அழைக்கும் கோச்சிங் சென்டர் விளம்பரங்கள். இவை அனைத்தும் பயிற்சி வகுப்புகளை நடத்தும் நிறுவனங்கள். எந்தச் சட்ட வரையறைக்குள்ளும் இல்லாத நிறுவனங்கள்.

கல்வி நிறுவனங்களைவிட இந்த நிறுவனங்கள்தான் இன்று மாணவர்களுடைய எதிர்காலத்தை நிர்ணயிக்கும் செயல்பாடுகளில் இருப்பதாக மாணவர்களும் பெற்றோர்களும் கருதுகின்றனர். இந்த நிறுவனங்கள் அத்தனையும் மதிப்பெண் எடுக்க வழிமுறை சொல்லிக் கொடுக்கும் நிறுவனங்கள். கல்வி புகட்டும் நிறுவனங்கள் அல்ல. இந்தப் புரிதல் மாணவர்களுக்கும் பெற்றோர்களுக்கும் வரவேண்டும்.

இன்னொரு விளம்பரம், எங்கள் பள்ளியில் +1 மற்றும் +2–வுடன் சேர்த்து நீட் மற்றும் ஐ.ஐ.டி.–க்கான சிறப்புப் பயிற்சியும் தந்துவிடுகிறோம் என்று ஊடகங்களில் வருகிறது. அத்துடன் தேர்வில் வெற்றிபெற்று மருத்துவக் கல்லூரிகளிலும், பொறியியல் கல்லூரிகளிலும் சேர்ந்த மாணவர்கள் என்று மாணவர்களின் புகைப்படத்துடன் விளம்பரத்தைத் தருகின்றன பல பள்ளிகள். அந்தப் பள்ளிகள் அனைத்தும் பள்ளிகள் என்ற பெயரில்

பயிற்சி வகுப்புகளைத்தான் தொடர்ந்து நடத்து கின்றன.

11–வது, 12–வது வகுப்புகளுக்கான பாடங் களைச் சொல்லித் தருவது மிகக் குறைவு. கல்வி கற்றுக்கொடுக்க ஒதுக்கும் நேரத்தைவிட, பயிற்சிக்கான நேரம்தான் அதிகம். இப்படிப் பயிற்சி நிறுவனங்களில் பயிற்சி பெற்று, அதிக மதிப்பெண்கள் பெற்று நல்ல கல்லூரிகளில் சேர்ந்து படிக்கும்போது, அவர்களால் அதே நிலை யில் மதிப்பெண் பெற முடியவில்லையே ஏன் என்று யாரும் சிந்திப்பதில்லை என்பதுதான் வேதனைக்குரியது.

அடுத்து ஒரு விளம்பரம், எங்கள் கல்லூரியில் படித்த மாணவர்களுக்கு எங்கள் கல்லூரி மூலம் ஏற்பாடு செய்த வேலைவாய்ப்பு முகாமில் எவ் வளவு சம்பளத்துடன் எத்தனை கம்பெனிகளில் வேலைகள் கிடைத்துள்ளன என்பதைக் குறிப் பிட்டு, வாருங்கள் உத்தரவாதத்துடன் வேலையை யும் பெற்றுச் சென்றுவிடலாம் என்ற வாசகத்துடன் விளம்பரம் வருவதைப் பார்த்துக் கொண்டுள் ளோம்.

இன்று கல்லூரிகள் அனைத்தும் அறிவையும் திறமையையும் வளர்க்கும் பணிகளில் ஈடுபடு வதைவிட, வேலைவாய்ப்பைப் பெற்றுத்தரும் பணி யில் மும்முரமாக ஈடுபட்டுள்ளன. பல கல்லூரிகள் வேலைவாய்ப்புக்களை நோக்கி அழைத்துச் செல் லும் வழிகாட்டு நிறுவனங்களாக மாறிவிட்டன. பொதுமக்கள், மாணவர்கள், பெற்றோர்கள் அனைவரும் விளம்பரத்தில் சிக்குண்டுவிட்டனர். சந்தைப்படுத்துதல் கோட்பாட்டில் விளம்பரம் ஏற்படுத்தும் உளவியல் தாக்கம் என்பது உறுதி செய்யப்பட்ட நிலையில்தான் விளம்பரங்களைப் பொருள் விற்போரும் நாடுகின்றனர், பொருள் வாங்குவோரும் நாடுகின்றனர்.

கல்வியும் வணிகப் பொருளாக மாற்றப்பட்டு விட்ட காரணத்தால், சந்தைச் செயல்பாடுகள் அனைத்தும் நம் கல்வித் துறைக்குள் நுழைந்து விட்டன. கல்வி இன்று வாங்குவோரின் சந்தை யாக மாறியிருக்கிறது. இவற்றையெல்லாம் பார்க்கும்போது நமக்கு ஒன்று புரிகிறது. அதாவது கல்வி பற்றிய அடிப்படைப் புரிதல் மக்கள் மத்தி யில் உருவாக்கப்படவில்லை என்பதுதான் எதார்த்தம்.

இன்று கல்வி என்பது மானுட மேம்பாட்டுக் கான கருவி. எனவே மானுடம் தன்னை உயர்த்திக்கொள்ள வித்திடும் கருவி என்ற அடிப் படையைப் புரிந்துகொள்ளாமல், வாழ்வாதாரத்தை உருவாக்கும் அல்லது பாதுகாக்கும் அல்லது மேம்படுத்தும் என்ற குறுகிய நோக்கில் பார்க்கப் பட்டு, வாழ்க்கையில் வசதிகளைப் பெற, வாழ்வா தாரத்தை உயர்த்திக்கொள்ள வழிவகை செய்யும் கருவி என்று எண்ணிச் சான்றிதழை நோக்கிப் பெற்றோர்களையும் மாணவர்களையும் நகர்த்திக் கொண்டு சென்றுவிட்டது.

எப்படிச் சந்தையில் பிராண்டெட் பொருள் களை வாங்க நாம் அந்தப் பொருள்களின் கம் பெனிப் பெயர்களைச் சொல்லுகின்றோமோ, அதே போல் இன்று சான்றிதழ் பெற, வேலை வாங்கித் தர பெயர்பெற்ற நிறுவனங்களை நாடி, அவர்கள் கேட்கின்ற பணத்தைத் தந்து வேலையைப் பிடிக்க மாணவர்களையும் பெற்றோர்களையும் துடிக்க வைத்துவிட்டது சந்தை. அதற்குத் துணை போகிறது அரசு. அதற்கு உறுதுணையாக நிற் கின்றனர் அரசிடமும், சந்தையிடமும் கையூட்டுப் பெறும் அறிவுஜீவிகள்.

இந்த ஒட்டுமொத்தக் கல்விச் செயல்பாடு களில் அரசுக்கோ, பெற்றோர்களுக்கோ, மாணவர் களுக்கோ கல்வி என்பது என்ன என்ற புரிதல் மிகக் குறைவாக இருக்கின்ற காரணத்தால், கல்வியை வேலை பெற்றுத்தரும் கருவி என்ற குறுகிய கண்ணோட்டத்தில் மட்டுமே பார்க்க வைத்துவிட்டது.

இதன் விளைவாக, கல்வியின் உண்மையான பொருளறிந்து மாணவர்கள் கல்வி கற்று மதிப்பு மிக்க மரியாதையுள்ள வாழ்க்கையை ஒழுக்க நியதிகளுடன் நடத்தித் தன்னையும் சமூகத்தை யும் மாற்றுவதற்குப் பதிலாகத் தன் பொருளாதார வளத்தை மேம்படுத்த வாழ்க்கை விழுமியங்களை இழந்த, இயந்திரத் தன்மையில் வாழ்ந்து, சமு தாயச் சீரழிவுக்கு வித்திட்டு, படித்தவன் சமூகத் தைப் பாழ்படுத்துகின்றான் என்ற அவப்பெயருடன் வாழ வைத்துவிட்டது.

கோடிகளிலும், லட்சங்களிலும் செலவு செய்து படித்து முடித்தவுடன் வேலை. அதன் பிறகு அடுக்குமாடிக் குடியிருப்பில் வீடு. அடுத்து வெளிநாட்டுக் கம்பெனி தயாரித்த கார். அடுத்துப் பணக்கார வீட்டுப்பெண்ணைப் பார்த்துத் திரு மணம் செய்து கொள்ளல் என மேற்கூறிய அனைத்தும் தான் பயின்ற கல்வியால் வர வேண்டும் என்பதைக் குறிக்கோளாகக் கொண் டுள்ளனர் நம்மில் பெரும்பாலானவர்கள்.

எனவேதான் செய்யும் பணிகளில் எந்த

ஒழுக்க நியதிகளையும் கடைப்பிடிக்க வேண்டும் என்ற கட்டாயமில்லை என்ற எண்ணத்திற்கு வந்து தங்கள் பணிகளைப் பணம் ஈட்டும் பணியாக மாற்றிச் சேவையைப் புறந்தள்ளி வாழப் பழகிக் கொண்டுவிட்டனர்.

ஆனால் இன்று மருத்துவரானாலும், பொறி யியல் வல்லுநரானாலும், வழக்குரைஞரானாலும் அனைவரின் செயல்பாட்டிலும் நாம் பார்ப்பது பணம் பண்ணும் செயல்பாடுகளைத் தவிர ஒழுக் கத்துடன் கூடிய சேவையைக் காண முடிய வில்லை.

பொதுவாக, ஒரு நாட்டில் கல்வியை எப்படி மக்களுக்குத் தர வேண்டும் என்பதைத் தீர் மானித்து, அதை அரசின் கொள்கை வழியாகத் தெரிவித்து, அரசின் திட்டங்கள் வழியாகச் செயல் களும், புள்ளிவிபரம் நோக்கி அரசும் செயல்பட ஆரம்பித்ததன் விளைவு, கல்வியின் அடிப்படை நோக்கத்தை அனைவரும் மறந்துவிட்டோம்.

அதனைத் தொடர்ந்து உயர்கல்வியிலும் சாதனை பதிக்க வேண்டும் எனத் திட்டமிட்டு, உயர்கல்வியில் சேர்க்கப்படுவோர் எண்ணிக் கையை அதிகரிக்கத் தனியாரையும் அனுமதித் தது. அரசு நிறுவனங்களிலும் எண்ணிக்கையைக் கூட்ட அரசு முடிவு எடுத்துச் செயல்பட ஆரம்பித் தது. பொதுவாக மாணவர் சேர்க்கை எண்ணிக் கையை அதிகரிக்கும்போது அதற்குத் தேவை யான அடிப்படை வசதிகள் இருக்கின்றதா? ஆசிரி யர்கள் எண்ணிக்கை கூட்டப்படுகின்றதா? என்பதையெல்லாம் பார்த்துதான் முடிவுகள் எடுக்க வேண்டும். நம் நாட்டில் அப்படியொரு பழக்கம் கிடையாது.




படுத்தப்பட வேண்டும். ஆனால் இன்று வளர்ந்து வரும் மக்கள் தொகைக்கு அரசு மட்டுமே கல்வி யைத் தர இயலாது. எனவே சந்தைச் செயல்பாடும் தேவை எனக் கல்வியில் தனியாரை அரசு அனுமதித்தது. அதனைத் தொடர்ந்து கல்வி கற்ற சமுதாயமாக இந்தியா மாறியது அல்லது நம் மாநிலம் மாறியது என அறிவிக்கப் புள்ளிவிபரம் தேவை.

எனவே, மாணவர்களைப் பள்ளியில் அனு மதித்து அனைவரையும் பள்ளிக் கல்வியில் தொடர வைக்கவேண்டும் எனத் திட்டமிட்டு அனைவரும் பத்தாம் வகுப்புவரை செல்லட்டும் எனத் தேர்வுகளைப் புறக்கணித்துச் செயல்பட ஆரம்பித்தோம். சான்றிதழ் நோக்கி மாணவர்

மாணவர் சேர்க்கை, தேர்வுச் சான்றிதழ் வழங்குதல் என்பதைச் சடங்காக மாற்றிவிட்டோம் நாம். விளைவு, உயர்கல்விக்கான தகுதி இருக் கிறதோ இல்லையோ, அடிப்படைத் தேர்ச்சிச் சான் றிதழ் இருந்தால் போதும் என மாணவர்களைச் சேர்த்து ஆண்டுதோறும் சான்றிதழ் வழங்கிப் பட்டதாரிகளாகச் சமூகத்திற்குள் அனுப்புகிறோம். அவர்கள் பக்குவப்பட்ட மனிதர்களாகவும் செல்ல வில்லை. திறன் கூட்டப்பட்டவர்களாகவும் செல்ல வில்லை. ஆற்றல் அதிகரிக்கப்பட்டவர்களாகவும் செல்லவில்லை.

மாறாக, அவர்கள் எந்த வேலைக்கும் தகுதி யற்றவர்களாகத்தான் சென்று வேலை தேடுவோர் பட்டியலில் பெயரைப் பதிவு செய்து வைத்து அர

சாங்கத்தின் மேல் பாரமாக இருந்து கொண்டிருக் கிறார்கள்.

உலகமயப் பொருளாதாரச் செயல்பாடுகள் ஒரு சில துறைகளில் மிகப்பெரிய அளவில் வேலைவாய்ப்புகளை உருவாக்கியது. அந்த வாய்ப் பைப் பயன்படுத்திக் கல்விச் சாலைகளைச் சாராய வியாபாரிகள், அரசியல்வாதிகள், வணிகர்கள் என லாபம் பெற வேண்டும் என்பதை மட்டுமே அடிப்படையாகக் கொண்டு ஆயிரக்கணக்கான கல்வி நிறுவனங்களை உருவாக்கினார்கள். இவை அனைத்தும் பொறியியல் கல்லூரிகள். இதன் விளைவு, மக்களின் கனவுகளையும் ஆசை களையும் பயன்படுத்தி லாபம் பார்த்தனர் புதிய கல்விப் புரவலர்கள்.

ஆனால் குறிப்பிட்டவர்களைத் தவிர, பெரும் பாலான மக்களின் கனவுகளும் ஆசைகளும் நிறைவேறவில்லை. அதுமட்டுமல்ல, உருவான வேலைவாய்ப்புகளையும் நாம் தவறவிட்டுத் தொழில்துறை நிறுவனங்கள் வேலைக்கு ஆட்கள் கிடைக்கவில்லை என்று கூறுகின்ற நிலைக்கு நம் கல்வி நிறுவனங்கள் செயல்பட்டுச் சமுதாயத் துக்குத் தீங்கு இழைத்துள்ளன.

கல்வியின் இலக்கணத்தை, வரையறையை, மாண்பைக் குலைத்துச் சமூகத்தைச் சீரழிக்கும் கருவியாகக் கல்வி இன்று மாற்றப்பட்டிருக்கிறது. இதைச் சீரமைக்க வேண்டும் என்றால், ஒரு நல்ல கல்விக் கொள்கையும் அதை நடைமுறைப்படுத்த மிகப்பெரிய கல்வி இயக்கமும் இந்த நாட்டுக்குத் தேவை. அதில் செய்ய வேண்டிய பணி கல்வி யைச் சமூக மாற்றத்திற்கான கருவி என்று வரை யறுக்கப்பட வேண்டும். நாட்டின் உயர்வு, சமூகத் தின் மேம்பாடு என்பது பிரதானப்படுத்தப்பட வேண்டும்.

அடுத்து, அதற்கு மாணவர்களைத் தயார் செய்யும் முறைமையில் மிகப்பெரிய மாற்றத்தைக் கொண்டுவர வேண்டும். நம் நாட்டில் இன்று நடை பெறும் வகுப்பறைச் செயல்பாடுகளை மாற்றி யமைக்க வேண்டும். இன்று வகுப்பறையில் நடை பெறுவது வீட்டிலும், வீட்டில் நடைபெறுவது வகுப் பில் ஆசிரியர் துணைகொண்டும் நடைபெற வேண்டும். அதற்கு ஆசிரியர்களுக்குத்தான் திறன் கூட்டப்பட வேண்டும்.

மூன்றாவது, கல்விச் செயல்பாட்டில் உள்ள கல்வி நிறுவனங்களை நெறிப்படுத்திச் செயல்பட வைக்க வேண்டும். நான்காவதாக, பொது மக்களுக்குக் கல்வி பற்றி ஒரு பார்வையை உரு வாக்க விழிப்புணர்வு ஏற்படுத்த வேண்டும். இவை அனைத்தும் போர்முனைச் செயல்பாடுகள்போல் நடைபெற்றால் கல்வியால் நற்பயன்கள் கிடைக் கும். இல்லையேல் கல்வியால் சமூகச் சீரழிவு ஏற்படும் என்பதில் எந்த ஐயமும் இல்லை.

மருத்துவக் கல்வி, பொறியியல் கல்வி மூலம் மட்டும்தான் நாம் அடைய நினைக்கும் இலக்கை, குறிக்கோளை அடையலாம் என்று மாணவர்கள் எண்ணக் கூடாது. மருத்துவமும் பொறியியலும் அடிப்படையில் அறிவை உருவாக்கும் கருவிகள் அல்ல. அவை திறன் வளர்ப்பவை என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும்.

இந்த இரண்டு கல்விக்கும் அடிப்படை அறிவை உருவாக்குபவை கணிதம், வேதியியல், பௌதிகம் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. எந்தக் கல்வியும் எந்தப் பாடத்திட்டமும் முறை யாகப் பயின்றால் வேலை கிடைக்கும். உலகத் தில் ஏராளமாக வேலைகள் காத்துக் கிடக் கின்றன. வேலைக்கு ஆட்கள் கிடைக்காத கார ணத்தால்தான் ரோபோக்களைப் பயன்படுத்து கின்றனர்.

தொடர்ந்து தொழிற்சாலைகளிலிருந்தும் சந்தையிலிருந்தும் வரும் அறிக்கைகள் நமக்குத் தெரிவிப்பது வேலைகள் ஏராளமாக இருக் கின்றன. ஆனால் அந்த வேலைகளைச் செய்யத் தகுதியான பணியாட்களைக் கல்விக் கூடங்கள் உருவாக்கித் தரவில்லை என்று தொடர்ந்து கூறிக்கொண்டே வருகின்றன.

அந்த வாய்ப்புகளைப் பிடிக்க வேண்டுமான ால், அதற்கு மிக முக்கியமாக நம் மாணவர்கள் சான்றிதழ் வாங்க வேண்டும், மதிப்பெண் வாங்க வேண்டுமென்று எண்ணாமல், அந்தப் பாடங் களைப் புரிந்து கொண்டு அவற்றை நடைமுறைப் படுத்துவது எப்படி என்று யோசித்துச் செயல்படத் திறன்களை வளர்த்துக் கொண்டால், நம் மாண வர்கள் அனைவரும் தவிர்க்க இயலாத நபர்களாக மாறிவிடுவார்கள்.

அறிவையும் திறனையும் ஆற்றலையும் வளர்ப் பதில் நாம் கவனமாக இருக்க வேண்டுமே தவிர, காலத்தைக் கல்லூரியில் தள்ளிச் சான்றிதழைப் பெற்றுவிட்டோம் என்று மகிழ்ந்தால், நாம் நம் மையே ஏமாற்றிக் கொள்கிறோம் என்று பொருள்.

எனவே, கல்வியைத் தவமாக, முன்னேற்றத் திற்கான ஒரு போராட்டமாக நினைத்துப் போராடி னால் மட்டுமே கல்வியை வைத்து வாழ்க்கையில் வெற்றி பெற முடியும்.

●

# இம்மாத ராசி பலன்

"என்ன நடக்கலாம் என்பதை அனுமானிப்பவன் சோதிடன்
என்ன நடக்கும் என்பதைத் தீர்மானிப்பவன் இறைவன்!"

'ஜோதிடத் திலகம்'
க. தில்லையம்பலம்

1.12.2018 அன்று கோள்கள் நிலை

| | | | |
|---|---|---|---|
| | | | |
| செவ்வாய் | 16.12.2018 சூரியன்–தனுசு<br>21.12.2018 செவ். – மீனம் | | ராகு |
| கேது | | | சந்திரன் |
| சனி | சூரியன் புதன் குரு | சுக்கிரன் | |

## மேஷம்



**மே**ஷ ராசி அன்பர்களுக்கு, இம்மாதத்தின் முற்பாதி எவ்விதத்திலும் அனுகூலமில்லை. சூரியன் – புதன் – குரு முதலிய முக்கிய கிரகங்கள் 8–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், எதிர்பாராத சம்பவங்கள் மனக் கஷ்டத்தையும், பணக் கஷ்டத்தையும் ஏற் படுத்தலாம். 7–இல் சுக்கிரன் சஞ்சரிப்பதால், வாழ்க்கைத் துணைவர் வழியில் அவ்வப்போது மனக் கசப்புகள் ஏற்படலாம். மாதத்தின் பிற்பாதி யில் சூரியன் 9–ஆம் வீட்டில் சஞ்சரிக்க இருப்ப தால், காரியத் தடைகள் ஏற்படும். சனி – சூரியன் சேர்க்கை ஏற்படுவதால், குடும்பத்தில் தகப்பன் – மகன் உறவு பாதிப்படையும்.

செவ்வாய் 11–ஆம் தேதி வரை லாபஸ்தானத்தில் சஞ்சரிப்பதால், உத்தியோகஸ்தர், உடன் பிறந்தவர்கள், நிலம் பூமி சம்பந்தப்பட்டு நற்பலன்கள் சிலருக்கு ஏற்படும். ராகு 4–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், போக்குவரத்துகளில் நிதானம் தேவை. விஷ பீடை ஏற்படும் வாய்ப்புண்டு. 10–இல் கேது சஞ்சரிப்பதால் தொழில், உத்தியோகத் துறைகளில் இருண்ட சூழ்நிலை காணப்படும். விருச்சிக ராசியில் சுக்கிரன் அமையப்பெற்றவர்களுக்கும், குரு மீனம் – கடகம் ஆகிய ராசிகளில் ஜனன ஜாதகத்தில் ராசிக்கட்டத்தில் அமையப் பெற்றவர்களுக்கும் திருமணம் கைகூடும். புது முயற்சிகள் தற்சமயம் வேண்டாம்.

## ரிஷபம்



**ரி**ஷப ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதம் 7, 8–ஆமிடங்களில் சஞ்சரிப்பதால், நற்பலன்கள் அதிகம் எதிர்பார்க்க வேண்டாம். சில எதிர்பாராத சந்திப்புகள் அற்ப மகிழ்ச்சியை ஏற்படுத்தலாம். மாதத்தின் பிற்பாதியில் சூரியன் 8–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், எதிர்பாராத சம்பவங்கள், விரயம், உடல் உபத்திரவம் ஏற்படக் கூடும். செவ்வாய் 21–ஆம் தேதி வரை தொழில் உத்தியோகஸ்தலத்தில் கலக்கத்தை ஏற்படுத்தலாம். உங்களின் வரம்பிற்குட்பட்டு உங்களின் அதிகாரத்தைப் பயன்படுத்த வேண்டும்.

21–ஆம் தேதிக்குப் பின்னர் வாழ்க்கைத் துணைவர் மூலம் அல்லது ரத்த சம்பந்தம் உடைய உறவினர்கள் மூலம் நன்மையை ஏற்படுத்தக் கூடும். அஷ்டமத்துச் சனி நடைபெறுவதால், சிலர் தங்கள் தொழில், உத்தியோகத்தை விட்டுவிட எண்ணம் கொள்வர். வாழ்க்கைத் துணைவர் எதிரியைப் போல் காட்சியளிப்பர். உங்களுக்கு குரு 7–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், மேற்கண்ட பலனே நடைபெறும். சுக்கிரன் 6–ஆம் வீட்டில்

சஞ்சரிப்பதால், பெண்கள்மீது எரிச்சல் ஏற்படும். 3–இல் ராகு சஞ்சரிப்பது பயணத்திற்கு நல்லது. 9–இல் கேது சஞ்சரிப்பதால் கோயில், குளம் சென்று வரலாம்.




**மி**துன ராசி அன்பர்களுக்கு, இம்மாதத்தின் முற்பாதி அனுகூலமாகக் காணப்படுகிறது. தொழில் உத்தியோகத் துறைகளில் சாதகமான சூழ்நிலைகள் நிலவக்கூடும். இருப்பினும் பற்பல அபிப்பிராய பேதங்களும் ஏற்படும் வாய்ப்புண்டு. மாதத்தின் பிற்பாதியில் பெரியோர், பிரபலஸ்தர்கள், தொழில் வகை நண்பர்கள் சந்திப்பால் நன்மை ஏற்படலாம். சுக்கிரன் 5–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், ஒரு சிலருக்கு அதிர்ஷ்ட வாய்ப்புகள் உண்டாகும். பண வரவு, பொருள் வரவு ஏற்படலாம். ராகு 2–இல் சஞ்சரிப்பதால், அகலக்கால் வைப்பதால் துன்பம் ஏற்படக்கூடும். தகுதிக்கு மீறிய செலவினங்களைத் தவிர்ப்பது நல்லது.

8–இல் கேது சஞ்சரிப்பதால், உடலில் உஷ்ணத்தால் பாதிப்புகள் ஏற்படக்கூடும். செவ்வாய் 9–இல் சஞ்சரிப்பதால் வீண் பயம் ஏற்படக்கூடும். கருவுற்ற நிலையில் இருக்கும் பெண்கள் தகுந்த மருத்துவ ஆலோசனைகளை அவ்வப்போது பெற்று நடந்துகொள்ள வேண்டும். 21–ஆம் தேதி முதல் உங்களது அதிகாரம் ஓங்கும். அதிகார துஷ்பிரயோகம் சிலர் செய்யக்கூடும். அதைத் தவிர்ப்பது நல்லது. திருமணம் முதலிய சுப காரியங்கள் கூடி வரும் என்று கூற இயலாது. புதிய முயற்சிகளை மாதத்தின் முற்பாதியில் தொடங்க வெற்றி கிட்டும்.




**க**டக ராசி அன்பர்களுக்கு, இம்மாதம் முற்பாதியில் சற்றுச் சிரமங்கள் இருப்பினும் மாதத்தின் பிற்பாதி அனுகூலமாகக் காணப்படுகிறது. மாதத்தின் முற்பாதியில் குழப்பமும், குழந்தைகளால் சங்கடமும், கவலைகளும் காணப்படும். மாதத்தின் பிற்பாதியில் காரிய சித்தியும், தொழில் உத்தியோகத் துறைகளில் அனுகூலமும், பண வரவும் ஏற்படலாம். ஆனால், வாழ்க்கைத் துணைவர் உங்களைச் சங்கடத்திற்கு உள்ளாக்கலாம். சுக்கிரன் 4–ஆம் வீட்டில் ஆட்சி பெற்றுச் சஞ்சரிப்பதால், இல்லற வாழ்வில் அவ்வப்போது சிறு சிறு பிரச்சனைகள் ஏற்பட்டாலும், பாதிப்பு எதுவும் நேராது.

ராசி மீது ராகு சஞ்சரிப்பதால், உடல் உபத்திரவங்கள் இன்னும் ஒன்றிரண்டு மாதங்கள் இருந்து வரும். 7–இல் கேது இருப்பதால், தனிப்பட்ட தாம்பத்ய இச்சைகள் குறைந்து காணப்படும். குரு இவ்வருடம் 5–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், சிலருக்குத் திருமண வாய்ப்பும், சிலருக்குப் புத்திரப் பிராப்தியும், சிலருக்கு அதிர்ஷ்டகரமான சம்பவங்களும் ஏற்படலாம். சனி 6–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், வசதிகள் கூடும். செவ்வாய் 21–ஆம் தேதி வரை உங்களிடம் போர்க்குணத்தையும், தேவையற்ற விவகாரத்தை யும் ஏற்படுத்தும் வாய்ப்புண்டு.




**சி**ம்ம ராசி அன்பர்களுக்கு, இம்மாதத்தின் முற்பாதியில் அலைச்சல், விரயம், உடல் சுகவீனம், பணப்பற்றாக் குறை ஏற்படலாம். மாதத்தின் பிற்பாதியில் வாழ்க்கைத் துணைவர், குழந்தைகள், பெற்றோர் சம்பந்தப்பட்டுக் கவலைகள் ஏற்படலாம். செவ்வாய் 21–ஆம் தேதி வரை தம்பதியரிடையே வாக்குவாதம், சர்ச்சையை ஏற்படுத்தலாம். 21–ஆம் தேதிக்குப் பின்னர் செவ்வாய் உங்கள் பொறுமையைச் சோதிக்கக்கூடும். குரு 4–ஆம் வீட்டில் சஞ்சாரம் செய்வதால் வீடு, இடம், தோட்டம் துரவுகளை மேம்படுத்தச் செலவினங்களை மேற்கொள்வீர்கள். ஒரு சிலர் தொழில், சுய வியாபாரம் சம்பந்தமாக மாற்றங்களைச் செய்ய விரும்பக்கூடும்.

ராகு 12–இல் மறைவு பெற்றுச் சஞ்சரிப்பதால், ரகசிய எதிரிகள், எதிர்ப்புகள் சிலருக்குத் துன்பம் தரலாம். 6–இல் கேது சஞ்சரிப்பதால், வயிற்றில் கட்டி முதலியவை வயதானவர்களுக்கு ஏற்படக்கூடும். கவனமுடன் வைத்திய ஆலோசனைகள் பெற்றுச் செயல்பட வேண்டும். கல்யாணக் காரியங்கள் ஈடேறுவது உங்களது ஜனன ஜாதகத்தை ஆய்வு செய்து முயற்சிக்கலாம். புது முயற்சிகள் எதையும் தற்சமயம் தொடங்க வேண்டாம். சனி – சூரியன் 5–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், அரசாங்கக் காரியங்கள் தடையாகக்கூடும். வரும் தை மாதம் பல நன்மைகள் கிடைக்கப்பெறுவீர்கள்.

**க**ன்னி ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதத்தின் முற்பாதியில் 3–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், பொதுவில் யோக பலன்கள் நடைபெறக்கூடும். ஆனால், குரு அஸ்தங்கத தோஷம்

## கன்னி



அடைந்திருப்பதால், பொருளாதாரப் பற்றாற்குறை ஏற்படலாம். எல்லா இன்ப துன்பங்களுக்கும் பணமே பிரதானமாகத் திகழ்வதால், ராஜயோக பலன்கள் ஏற்பட வாய்ப்பில்லை. மாதத்தின் பிற்பாதியில் 4–இல் சூரியன் – சனியுடன் சேர்க்கை பெற்றுச் சஞ்சரிப்பதால், தாய் – தகப்பன் வர்க்கத்தார் நலிவுகளை அடையலாம்.

செவ்வாய் 21–ஆம் தேதி வரை 6–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் வழக்கு, வியாஜ்யம் தொடங்கலாம். பின்னாளில் வெற்றி கிட்டும். உணவில் காரத்தைக் குறைத்துக்கொள்ள வேண்டும். 21–ஆம் தேதிக்குப் பின்னர் வாழ்க்கைத் துணைவரோடு சண்டை, சச்சரவு ஏற்படும் வாய்ப்புண்டு. ராகு 11–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், எவ்விதத் துன்பமும் சூரியனைக் கண்ட பனிபோல் நீங்கிவிடும். 5–இல் கேது சஞ்சரிப்பதால், தெய்வீகக் காரியங்களில் மனம் நாட்டம் கொள்ளும். தன்னிச்சையாக முடிவெடுத்துச் செயல்பட வேண்டாம். சுப காரியங்கள் தற்சமயம் ஈடேற வாய்ப்பில்லை.

## துலாம்



**து**லாம் ராசி அன்பர்களுக்கு, இம்மாதத்தின் முற்பாதி அவ்வளவு நற்பலன்களைக் கொடுக்க இயலாத நிலையில் சூரியன் – புதன் – குரு சேர்க்கை பெற்றுச் சஞ்சரிப்பதால், மனத் திருப்தி ஏற்பட வாய்ப்பில்லை. மாதத்தின் பிற்பாதியில் சூரியன் – சனி மூன்றாம் வீட்டில் சஞ்சரிப்பதால், தொழில், உத்தியோகத் துறையிலும், பொருளாதார விஷயங்களிலும் நன்மை ஏற்படும். நினைத்த காரியம் நிறைவேறும். முக்கியப் பிரமுகர் சந்திப்பு நிகழக்கூடும். ராகு 10–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், தொழில் துறையில் மாற்றங்கள் செய்வதற்கு இன்னும் சிற்சில மாதங்களில் அதிர்ஷ்டம் உங்களைத் தேடிவரக்கூடும்.

கேது 4–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், தாய் வழி உறவினர்கள் பாதிப்படையலாம். செவ்வாய் 21–ஆம் தேதி வரை உங்களுக்கு ஸ்திர புத்தியை வழங்க மாட்டார். தீர்க்கமான முடிவெடுக்க இயலாமல் தத்தளிக்க நேரிடலாம். 21–ஆம் தேதிக்குப் பின்னர் உங்களது பணம் வம்பாலும், வழக்காலும் விரோதத்தாலும், வியாதியாலும் செலவாகிப் போகலாம். வாழ்க்கைத் துணைவர் எதிரியாகலாம். கவனம் தேவை. கல்யாணம் முதலிய சுப காரியங்கள் ஈடேற வாய்ப்புண்டு. திருமணம் ஆகாதவர்கள் தீவிரமாக முயற்சி செய்யலாம். சனி 3–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், ஒரு சிலருக்குச் சொத்துச் சேர்க்கை ஏற்படும்.

## விருச்சிகம்



**வி**ருச்சிக ராசி அன்பர்களுக்கு, இம்மாதத்தின் முற்பாதியில் ராசி மீது சூரியன் – புதன் – குரு இணைந்து சஞ்சரிப்பதால், புதிய காரியங்களில் இறங்க வேண்டாம். தொழில் சம்பந்தமாக மாற்றங்கள் ஏற்பட வாய்ப்புண்டு. மாதத்தின் பிற்பாதியில் தொழில் வழி நன்மையுண்டு. உங்கள் சொல்லுக்கு மரியாதை ஏற்படும். ராகு 9–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், தொலைதூரத் தொடர்புகள் நன்மை பயக்கும். ராசி மீது குரு சஞ்சரிப்பதால், தூரமான இடங்களில் சென்று சிலர் தங்கவோ, தொழில் செய்யவோ கூடும்.

செவ்வாய் 4–ஆம் வீட்டில் 21–ஆம் தேதி வரை சஞ்சரிப்பதால், பெரியோர் பேச்சை உதாசீனம் செய்வீர்கள். மாதத்தின் எஞ்சிய நாட்களில் ஸ்திர புத்தி இருக்காது. அடிக்கடி முடிவுகளை மாற்றிக்கொள்வீர்கள். சனி இரண்டில் சஞ்சரிப்பதால் வரவும், செலவும் இன்னும் சில காலம் சமமாக இருக்கும். சுக்கிரன் 12–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், கல்யாண காரியங்கள் இந்த ஆண்டு ஈடேறச் சற்றும் வாய்ப்பில்லை. ஜனன ஜாதகத்தில் சந்திரன் – சுக்கிரன் இணைவு பெற்று ராசிக் கட்டத்தில் இருப்பின் நிறைவேறும். இம்மாதம் புதிய முயற்சிகள் கூடாது.

## தனுசு



தனுசு ராசி அன்பர்களுக்கு, இம்மாதத்தின் முற்பாதியில் வீண் செலவு, விரயம், அலைச்சல், பிறர் பேச்சுக் கேட்டு நடப்பதால் நட்டம் ஏற்படும். மாதத்தின் பிற்பாதியில் ராசி மீது சூரியன் சஞ்சரிப்பதால் வீண் சலனம், தலையில் உபாதை, வீண் எரிச்சல் முதலியவை ஏற்படும். மனச்சோர்வும், உடல் சோர்வும் ஏற்படும். செவ்வாய் 21–ஆம் தேதி வரை தைரியத்தையும், தன்னம்பிக்கையையும் கொடுக்கும். 21–ஆம் தேதிக்குப் பின்னர் உங்களது நடவடிக்கையில் மாற்றங்கள் ஏற்படும். தன்னிச்சையான முடிவுகளால் துன்பம் வரக்கூடும். கேது 2–இல்

சஞ்சரிப்பதால் செலவு செய்வதில் போதிய கவனம் வேண்டும்.

ராகு 8–இல் சஞ்சரிப்பதால், சிற்சில நேரங்களில் வீண் பயம் ஏற்படும். போக்குவரத்துக்களில் கவனம் தேவை. அரசாங்கத்திற்குப் புறம்பான காரியங்களில் ஈடுபடுவது நல்லதல்ல. சுக்கிரன் 11–இல் சஞ்சரிப்பதால் இளம் ஸ்திரீகளால் நன்மை ஏற்படும். நட்பாலும் நன்மை ஏற்படும். குரு 12–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் புதிய அந்தஸ்தையும், பொறுப்பையும் கொடுக்கும். ஜன்மச்சனி நடைபெறுவதால், உடல் உழைப்பு அதிகம் தேவைப்படும். கல்யாணக் காரியங்களில் உடனடியாக முன்னேற்றம் ஏற்படாது. ஜனன ஜாதகத்தில் ராசிக் கட்டத்தில் ரிஷப ராசியில் குரு இருப்பின் அவர்களுக்கு ஈடேறும் வாய்ப்புண்டு.

## மகரம்



**ம**கர ராசி அன்பர்களுக்கு, இம்மாதத்தின் முற்பாதி உங்களுக்குச் சாதகமாக உள்ளது. சூரியன், புதன், குரு லாபஸ்தானத்தில் சஞ்சரிப்பதால், பெரியோர் சந்திப்பும், தனம், பொருள் வரவும், சுபச் செய்திகள் வந்தடைவதும், நிலுவைத் தொகைகள் கைக்குக் கிடைப்பதும் ஏற்படக்கூடிய பலன்களாகும். மாதத்தின் பிற்பாதியில் சுபச்செலவும், விரயமும், பயணங்களும் ஏற்பட வாய்ப்புண்டு. 21–ஆம் தேதி வரை செவ்வாய் உங்களுக்குச் சில அத்தியாவசிய அல்லது தண்டச் செலவுகளை ஏற்படுத்தக்கூடும். அதுபோல் வாழ்க்கைத் துணைவரின் கோபதாபங்களையும் சந்திக்க நேரிடும். வாழ்க்கைத் துணைவரது உடல் நலத்திலும் அக்கறை செலுத்திவர வேண்டும்.

ஏழரைச் சனியின் தாக்கம் இனி அதிகரிக்கும். விரயச்சனி என்பதால், புதிய முதலீடுகள் செய்ய வாய்ப்புண்டாகும். 10–இல் சுக்கிரன் சஞ்சரிப்பதால் வேலை ஸ்தலத்தில் பெண்களால் பிரச்சனைகள் ஏற்படலாம், கவனம் தேவை. ராகு 7–இல் சஞ்சரிப்பதால் சுற்றுலாச் சென்று வரலாம். ராசி மீது கேது சஞ்சரிப்பதால் அவ்வப்போது மனதில் சஞ்சலமும், வீண் பயமும் இருந்து வரும். கல்யாணம் முதலிய சுப காரியங்கள் இவ்வருடம் கைகூடும் வாய்ப்புண்டு.

## கும்பம்



**கு**ம்ப ராசி அன்பர்களுக்கு, இம்மாதம் நன்மைகள் பல ஏற்படலாம். மாதத்தின் முற்பாதியில் தொழில், உத்தியோகத் துறைகளில் அனுகூலம் ஏற்படும். கௌரவம் உயரும். குறிப்பிட்ட சிலருக்கு நியமனப் பதவிகள் கிடைக்கலாம். தொழில் சம்பந்தமாகப் பயணங்கள் ஏற்பட வாய்ப்புள்ளது. பயணத்தால் நன்மையும் கிட்டும். மாதத்தின் பிற்பாதியில் நானாவிதப் பொருள் வரவு சித்தியாகும். நண்பர்களால் – குறிப்பாக உங்களைவிட வயது மூத்தவர்களால் நன்மை கிட்டும். ஒரு சிலருக்குப் புதிய நட்புறவுகள் ஏற்படவும் வாய்ப்புள்ளது.

சுக்கிரன் 9–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், ஆடம்பரப் பொருள்கள் வாங்கலாம். புதிதாகத் திருமணம் செய்தவர்கள் தங்கள் துணைவியார் பிறந்த வீட்டிற்குச் செல்ல ஆசைப்படுவர். அப்படியே நிரந்தரமாகத் தங்கள் வீட்டிலேயே தங்கி விடாமல் பார்த்துக் கொள்ளுங்கள். ராகு 6–இல் சஞ்சரிப்பதால் இந்த ராசியில் பிறந்த சிறு குழந்தைகள் நுண்கிருமியின் தாக்கங்களுக்கு ஆட்படக்கூடும். கவனமாகப் பார்த்துக் கொள்ள வேண்டும். 21–ஆம் தேதி வரை நீங்கள் சற்றுக் கோபத்துடன் காணப்படுவீர்கள். சில நேரங்களில் உடலில் காயங்கள் ஏற்படலாம். 21–ஆம் தேதிக்குப் பின்னர் தொழில் மூலம் நன்மை உண்டு. சுப காரியங்களுக்குச் சிறிது வாய்ப்புள்ளது.

## மீனம்



**மீ**ன ராசி அன்பர்களுக்கு, இம்மாதத்தின் முற்பாதியில் சூரியன் – குரு – புதன் 9–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், காரியத் தடைகள் ஏற்படினும், இறுதியில் வெற்றி கிட்டும். சன்மார்க்க நெறிகளில் நாட்டம் உடையோர், ஆன்மீகப் பணி செய்வோர் ராஜயோக பலன்களை அடைவர். மாதத்தின் பிற்பாதியில் சூரியன் 10–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், நீண்ட நாட்களாக எண்ணிவந்த காரியம் ஈடேறும். 8–இல் சுக்கிரன் சஞ்சரிப்பதால், ஒரு சிலர் போக இச்சைகளில் மிகுதியான நாட் டம் கொள்வர். ஒரு சிலர் தங்கள் விலையுயர்ந்த பொருட்களை இழக்கவும் கூடும்.

குரு 9–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் சமீப காலமாகச் சற்று நிம்மதியான சூழ்நிலையில் வாழ்ந்து கொண்டிருப்பீர்கள். கடந்த ஆண்டைப் போல் இல்லாமல், தற்சமயம் சூழ்நிலைகள் முற்றாக மாறும் நிலையைக் காண்பீர்கள். தடைப்பட்ட சுப காரியங்கள் இனி ஈடேறும். ராகு 5–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் உயிரியல், கணினி சம்பந்தப்பட்ட துறைகளில் மாணவ மாணவியர் இறங்கி வெற்றி கொள்ளலாம். 21–ஆம் தேதி வரை செவ்வாய் 12–இல் சஞ்சரிப்பதால், ஞாபக மறதி ஏற்படும். தீயவர்களால் விரயம் ஏற்படலாம், கவனம் வேண்டும்.

கட்டுரை

# உமையவளை வழிபடாத அம்மையார்



தமிழிலக்கிய வரலாற்றில் சிவபெருமான்மீது முதன்முதலில் தனி இலக்கியங்கள் பாடியவர் காரைக்காலம்மையார் என்பது சிறப்பித்துச் சொல்ல வேண்டிய செய்தியாகும். அம்மையார் அற்புதத் திருவந்தாதி, திருவிரட்டை மணிமாலை, மூத்த திருப்பதிகங்கள் என்னும் சிற்றிலக்கியங்களைச் சிவன்மேல் பாடியிருக்கிறார். இந்த மூன்று தோத்திரங்களும் தமிழ்மொழிக்குப் புதியவை.

அற்புதத் திருவந்தாதியில் சிவபெருமானின் சீரெல்லாம் உணர்ந்து உணர்ந்து வியந்து வியந்து அம்மையார் பாடியுள்ள பாங்கு அற்புதமானது. அந்தாதியின் 101 பாடல்களுள் 83 பாடல்களில் சிவனது திருத்தோற்ற வருணனையை அம்மையார் நாமணக்கப் பாடியுள்ளார்.



திருவிரட்டை மணிமாலையிலும் சிவனது பெருமையே அம்மையாரால் பேசப்படுகிறது. நிறைவாக அம்மையார் பாடிய மூத்த திருப்பதிகங்களிலும் திருவாலங்காட்டுச் சுடுகாட்டில் பேய்கள் சுற்றித் திரியும் நள்ளிரவில் இறைவன் ஆடும் பல்வகைத் தாண்டவங்களே பெரிதும் சிறப்பிக்கப்படுகின்றன.

இவ்வாறு அம்மையார் சிவனையே நினைத்து, அவனையே உள்ளத்தில் அடைத்து, அவனுக்கே அடிமையாகி அவன் திருப்புகழை மட்டுமே பாடியவர். எனினும் அவர் பாடல்களில் உமையவள் பற்றியும் சில செய்திகள் காணப்படுகின்றன. இருந்தபோதும் அம்மையார் காலத்தில் (கி.பி 5–ஆம் நூற்றாண்டு) தேவி வழிபாடு வழக்கத்தில் இருந்ததாகத் தெரியவில்லை.

சங்ககால இறுதியில் இயற்றப்பட்ட பரிபாடல், கலித்தொகை, திருமுருகாற்றுப்படை ஆகியவற்றில் உமையவள் பற்றிச் சிற்சில குறிப்புகளே காணப்படுகின்றன. அம்மையார் காலத்தில் புராணங்கள் செல்வாக்குப் பெற்றிருந்த நிலையில், அவர் உமையவள் தொடர்பாகச் சில செய்திகளைத் தம் பாடல்களில் பதிவு செய்திருக்கிறார்.

என்றாலும் அம்மையார், தேவி உமையவளை வழிபடு தெய்வமாகக் கொள்ளவில்லை. அம்பிகையை அம்மையார் போற்றவோ, வணங்கவோ செய்யவும் இல்லை. உமையாளை உலகில்பெண் போலவே அவர் கொண்டாடுகின்றார். அவளை அவர்

திருமேனி நாகராசன்

இளமகளாகவும், மென்மை இயல்பு உடையவளாகவும், அச்சம் மிகுந்த வளாகவும், கணவனை விட்டுப் பிரிய மனம் இல்லாதவளாகவும் நினைத்துப் பாடுவது எவர்க்கும் வியப்பைத் தரக் கூடும்.



காரைக்காலம்மையார் தம்மை உமையாளுக்குத் தாய் போலப் பாவித்துக் கொண்டு பரிவு உடையவ ராய்ச் சொல்வதைக் கேளுங்கள்: "ஈசனது மார்பில் கிடக்கும் பாம்பு அவனது இடப் பாகத்தில் உள்ள உமையாளின் மீது திடுமெனத் தாவி விட்டால், அதனால் பெண் பாவம் வந்து பெரு மானுக்குச் சேர்ந்துவிடும் என்றல்லவா பெரியோர்கள் நினைப் பார்கள்?" (அற். அந். பா: 13).

"அழகனாம் சிவபெருமான் உமா தேவியைப் பிரிவதற்கு மனம் இல்லா மல் தன்னுடலில் இடப்பாகத்தில் வைத்துள்ளான்" (அற். அந். பா: 39) என்று சொன்ன அம்மையார், சைவ சமய மரபில் வேறு எவரும் அதுவரை யில் சொல்ல முன்வராத புதுக் கருத்து ஒன்றையும் முன்மொழிகிறார். அது "இறைவா! உன் உடலின் ஒரு பாகத் தில் (வலப்பக்கம்) திருமாலை வைத் துள்ளாய்" (அற். அந். பா: 41). இந்தக் கருத்து சைவத்திற்கும் வைணவத் திற்கும் சமரசம் காண முற்பட்ட முதல் சிவஞானி அம்மையார் என் பதை உறுதிப்படுத்துகிறது.

மற்ற நாயன்மாரினும் அம்மை யார்க்குத் தனிச்சிறப்பு ஒன்று உண்டு. ஆண்டவனாலேயே 'அம்மையே!' என்று அழைக்கப்பட்ட தனிப் பெருந்தாய் அவர். அதனால் உமை யவள் மீது சாலப் பரிவுடையவராய்ப் பெருமானைப் பார்த்து "சுடுகாட்டில் நள்ளிரவில் பேய்களோடு நீ ஆடச் செல்லும்போது மெல்லியளாம் உமா தேவியை உன் இடப்பாகத்தில் வைத் துக்கொண்டு செல்ல வேண்டாம்." (அற். அந். பா: 51) என்று அன்போடு அரனுக்கு அறிவுறுத்துகிறார்.

உலகியல் வாழ்வைத் துறந்து ஊனினை உதிர்த்துத் துறவறம்பூண்ட



**வ.உ.சி.-யின் பெருந்தன்மை!**

**தூ**த்துக்குடியில் ஓர் அச்சுக் கூடத்தில் வ.உ.சி. அவர்களின் புத் தகங்கள் அச்சாகிக் கொண்டிருந்தன. அந்த அச்சுக்கூடத்தில் தொழிலாளர் கள் வேலைநிறுத்தத்தில் இறங்கி, புத்தகம் அச்சிடுவதை நிறுத்தினர். அச்சக முதலாளி வ.உ.சி.-யிடம் முறை யிட்டுத் தம் செல்வாக்கைப் பயன்படுத்தி வேலை நிறுத்தத்தை நிறுத்துமாறு வேண்டினார். தன் நூலைவிட, தன் நட்பைவிடத் தொழிலாளர்களின் நலனே தனக்கு மேலானது எனக் கூறி வ.உ.சி. மறுத்துவிட்டார்.

– ம.செ. மயில், திருநெல்வேலி

அம்மையார், நாயகி பொருட்டு நாதனிடம் நகையாடுதல் நமக்கு வியப் பளிக்கவே செய்கிறது.

அம்மையார் ஈசனிடம் கேட் கிறார்: "வெண்மேகம் போன்ற காளையை உடையவனே! மலை அரசன் மகளாம் உமையாளை உன் பக்கத்தில் வைக்காது உன் உடலின் ஒரு பாதியில் அவளை வைத்துக் கொண்டதற்குக் காரணம் என்ன? அவள்மீது நீ கொண்டிருக்கும் ஆசை என்பதாலா? அல்லது அவளை விட்டுத் தனியே இருக்க உன்னால் இயலாது என்பதாலா? அல்லது உன்னை விட்டுப் பிரிந்து தனியே இருக்க அவள் அஞ்சுவாள் என்ப தாலா? என்னதான் காரணம்?" (அற். அந். பா: 94).

இதுமட்டுமா? இன்னும் சில பாடல்களிலும் தேவியைச் சொல்லிக் காட்டித் தேவாதி தேவனை அம்மை யார் பரிகாசம் செய்திருக்கிறார்.

இவ்வாறாக, அற்புதத் திருவந்தாதி யில் பல பாடல்களிலும் திருவிரட்டை மணிமாலையில் ஒரு பாடலிலும் உமா தேவியைப் பாடிய அம்மையார் மூத்த திருப்பதிகத்திலும் ஒரு பாடலில் தேவி யைச் சுட்டிக்காட்டுகிறார். அதிலுங் கூட உமையவள் மெல்லியள் என்ப தைத்தான் அம்மையார் காட்டுகிறார். "பேய்கள் பிணங்களை உண்டு களித் தாடும் சுடுகாட்டில் எல்லாவற்றையும் சங்காரம் செய்யும் சிவபெருமான் ஊர்த்துவ தாண்டவம் ஆட, அவ் வாடலை உமையவள் மருட்சியுடன் பார்த்துக் கொண்டிருப்பாள்" (மூத். திருப். 11 பா: 8).

நிறைவாக, காரைக்காலம்மையார் மூன்று சிற்றிலக்கியங்களாகத் தாம் பாடிய 143 பாடல்களுள் பல பாடல் களில் (16) தேவி உமையாளைப் பாடியபோதும் தேவியை எந்தப் பாடலிலும் தம்முடைய வழிபாட்டுத் தெய்வமாகக் காட்டவில்லை என்பது மனங்கொள்ளத்தக்கது.

முழுமுதற் கடவுளாகிய சிவபெரு மானைத் தவிர பிற தெய்வங்களைத் தொழாதவர் காரைக்காலம்மையார் என்பதே அவரது வாழ்வியலில் நாம் பெறும் உறுதியாகும்.

"ஒன்றே நினைந்திருந்தேன்:
ஒன்றே துணிந்தொழிந்தேன்
ஒன்றேஎன் உள்ளத்தின் உள்ளடைத்தேன் –
ஒன்றே காண்
கங்கையான் திங்கள் கதிர்முடியான்
பொங்கொளிசேர்
கங்கையாற்(கு) ஆளாம் அது"

(அற்.அந்.பா: 11)

## பெண் சிசு...

அம்மா
உன் கருவறையில்
மட்டும்தான்
நான் பத்திரமாக இருந்தேன்.

பத்து மாதம் ஆனதும்
எனக்கு 'பக்'கென்றது
பிறக்கப் போகிறோம் என்று.

சின்னா பின்னமாக்கும்
அரக்கர்கள் பிடியில் இருந்து
என்னைக் காப்பாற்று
தெய்வமே!

– செல்வமதி

# அமெரிக்காவில்
# ஓர் அதிசயத் தீவு!



– ஷைலஜா

காணுமிடமெங்கும் கார்களாய் நிறைந்திருக்கும் அமெரிக்காவில் ஓர் இடத்தில் மட்டும் கார்களுக்குத் தடை! கார்கள் மட்டுமல்ல, பெட்ரோலால் இயங்கும் எந்தவொரு வாகனமும் அந்த இடத்திற்கு வர முடியாது. ஆம், பெட்ரோல் வாசனையே இல்லாத தீவு அது!

பழங்காலம் போல குதிரைவண்டி சவாரிதான். சைக்கிள் உண்டு. அமெரிக்காவின் மிச்சிகன் மாநிலத்தில் இருக்கும் 'மெக்கினா தீவுதான் அது.

ஹ்யூரான் ஏரியில் அமைந்த இத்தீவிற்குப் பெரிய 'ஃபெரி' எனும் படகில் ஏறிச் சொல்ல வேண்டும். இந்த மெக்கினா தீவு ஐந்து மைல் (அமெரிக்காவில் கிலோ மீட்டர் புழக்கத்தில் இல்லை) சுற்றளவு கொண்டது.

கோடையில் தினமும் இருபதாயிரம் சுற்றுலாப் பயணிகள் வருகிறார்கள். குளிர்காலத்தில் இங்குப் பல்லைக் கிட்டும் குளிர் என்பதால், குறைந்தளவு சுற்றுலாப் பயணிகளே வருகிறார்கள். ஹ்யூரான் ஏரி உறைந்து விடுவதால், ஜனவரி முதல் மார்ச் வரை தீவுப் போக்குவரத்துத் துண்டிக்கப்படும்.

இத்தீவில் ஏழெட்டுத் தெருக்கள் மட்டும் உள்ளன. மற்றவை காடுகள் தான். மெக்கினா தீவில் பெட்ரோலில் ஓடும் எந்த வாகனமும் அனுமதிக்கப் படாததால் அமைதியான இடமாகவும், தீவுக்கே உரிய பசுமையான அழகு கொண்டதாகவும் இருக்கிறது. இங்கு வரும் சுற்றுலாப் பயணிகள் சைக்கிள் அல்லது குதிரை இல்லாவிட்டால் நடைப் பயணமாகத்தான் செல்ல வேண்டும்.

தெருக்களில் நடக்கும்போது தெருவெங்கும் குதிரைச் சாணத்தின் வாசம். அதைச் சுத்தம் செய்ய சைக்கிளில் ஒருவர் உபகரணங்களுடன் சுற்றிக் கொண்டே இருக்கிறார்.

தீவைச் சுற்றிப் பார்க்கக் குதிரை வண்டிகள் நிறைய உள்ளன. சுமார் இருபது நபர்களை இரண்டு குதிரை

கள் இழுத்துச் செல்கின்றன. குதிரைகள் பருத்துக் கொழுத்து இருக்கின்றன. தம் உடல் எடையைவிட ஆறு மடங்கு எடையை அனாயாசமாய் இழுக்கும் என நாங்கள் சென்ற குதிரை ஓட்டுனர் சொன்னார்.

இந்தத் தீவில் பழங்காலக் கோட்டை ஒன்றும் உள்ளது. உலகில் வேறெங்கும் கிடைக்காத அமைதியும், அழகும், சுத்தமும் மெக்கினா தீவில் காணப்படுவதால், உலகின் பல பாகங்களிலிருந்தும் எழுத்தாளர்களும், கலைஞர்களும் இங்கு அதிகளவில் வருகிறார்கள்.

மெக்கினா பாலம் 5 மைல் நீளத்தில் அமைந்துள்ளது. 1957-இல் இந்தப் பாலம் கட்டி முடிக்கப்பட்ட போது, அதற்கான செலவு 96,4600000 அமெரிக்க டாலர்களாகும். இப்போது இப்பாலத்தைக் கட்ட வேண்டுமானால், இதைப் போல பல மடங்கு செலவாகுமாம்!

இந்தப் பாலத்தின் சிறப்பு என்னவென்றால், வருடத்தில் ஒரு நாள், செப்டம்பர் 2-ஆம் தேதி மட்டும் ஐந்து மைல் தொலைவினை மக்கள் நடந்து செல்ல அனுமதிக்கின்றது தீவு நிர்வாகம்.

அப்போது உற்சாகத்துடன் வேகநடை போட்டுப் பாலத்தின் வடக்கு முனையிலிருந்து தெற்கு முனைக்கு வந்து சேரும் 'வாக்'காளருக்கு 'பாலத்தை முதலில் நடந்து கடந்து வந்தவர்' என்ற சான்றிதழ் கையோடு வழங்கப்படுகிறது!

## தினமணி தீபாவளி மலர் 2018

இந்த ஆண்டு வெளியாகியுள்ள தீபாவளி மலர்களில் குறிப்பிடத்தக்கது 'தினமணி' தீபாவளி மலர். ஆன்மிகம், கலை, இலக்கியம், திரைத்துறை, சிறுகதைகள், கட்டுரைகள் எனப் பல்துறைத் தொகுப்பாக இது வெளிவந்திருக்கிறது.

ஆசிரியர் திரு. கி. வைத்தியநாதனின் சபரி மலை ஐயப்பன் பற்றிய கட்டுரையுடன் தொடங் கும் இம்மலரின் அட்டைப்படத்தையும் சுவாமி ஐயப்பனே அலங்கரிக்கிறார். சைவத்தின் அட்ட வீரட்டத் தலங்கள், வைணவத்தின் அட்ட சயனத் தலங்கள் பற்றிய கட்டுரைகள், குபேர பூசை என பக்திச்சுவை மிளிர்கிறது.

சமகாலச் சிறுகதை எழுத்தாளர்களான சா. கந்தசாமி, வண்ணநிலவன், பொன்னீலன், வண்ணதாசன், இந்துமதி, ஜெயமோகன், ஸிந்துஜா, மாலதி சந்திரசேகரன் ஆகியோரின் சிறுகதைகளோடு, 'தேடி எடுத்த கதை' என்ற பகுதியில் வ.ச. ஸ்ரீநிவாச சாஸ்திரியார், வெ. சாமிநாத சர்மா, எஸ். வையாபுரிப்பிள்ளை, சோ. சிவபாதசுந்தரம் ஆகிய முந்தைய தலைமுறை ஆளுமைகளின் சிறுகதைகளும் மலருக்குச் சிறப்புச் சேர்க்கின்றன.

'சினிமா : நகைச்சுவை ஆளுமைகள்' பகுதியில் தமிழ்த் திரைத்துறையில் முன்பு பிரபலங்களாக விளங்கிய நகைச்சுவை நடிகர்கள் என்.எஸ். கிருஷ்ணன், டி.எஸ். பாலையா, நாகேஷ், வி.கே. ராமசாமி, சந்திரபாபு, சோ, மனோரமா ஆகியோரைப் பற்றி இன்றைய நகைச்சுவை நடிகர்கள் கூறியுள்ள கருத்துக்கள் சிறப்பாக உள்ளன.

பாரம்பரிய அரண்மனைகள் பற்றிய தொகுப்பு, உழைப்பால் உயர்ந்த தொழிலதிபர்களைப் பற்றிய 'எங்கள் ஊர் எந்த ஊர்' பகுதி, திரைத்துறையில் இருந்தாலும், அவர்களது மறுபக்கமாக விளங்கும் அவர்களின் பிற செயல்களைப் பற்றிய 'திரைக்குப் பின்னால்' பகுதி, இயற்கையைப் பற்றிய 'கானுயிர்' பகுதி, சுற்றுலாவிற்கான 'சூழல் சுற்றுலா' பகுதி எனப் பல பகுதிகள் மலரில் கருத்தைக் கவர்கின்றன. கவிதைகளில் கலாரசிகனின் 'சாகரமே சாகரமே' மிக அருமை.

மலருக்குப் பெரும் சிறப்பைத் தருவது, காந்தியடிகளின் 'சத்திய சோதனை'யைத் தமிழில் அமரர் கல்கி தந்த மொழிபெயர்ப்பைப் பின்னிணைப்பாகத் தந்திருப்பது.

இன்னும் பல்வேறு சிறப்புகளுடன் ஒளிர்கிறது 'தினமணி தீபாவளி மலர் 2018.'

**தினமணி தீபாவளி மலர் 2018**
பக்கங்கள் : 388. விலை: ரூ. 100/-
எக்ஸ்பிரஸ் கார்டன்ஸ், 29, இரண்டாவது மெயின் ரோடு,
அம்பத்தூர், சென்னை - 600 058.

- ஆர்.வி.

ஆன்மிகம்

# ஆயுள் குறை தீர்க்கும்
# அண்ணன் பெருமாள் கோவில்!

இரா.வேணுகோபாலகிருஷ்ணன்

தமிழகத்தில் ஆன்மிக அன்பர்கள் அனைவரும் அறிந்த ஒரு சிவத்திருத்தலம் 'திருக்கடவூர்' ஆகும். பேச்சு வழக்கில் இது 'திருக்கடையூர்' எனப்படுகிறது. இங்கே அபிராமித் தாயாரும் அமிர்தகடேஸ்வரரும் அருள்புரிகின்றனர். இந்தத் தலத்தின் சிறப்பு, மார்க்கண்டேயனுக்கு இறைவன் ஆயுளை நீட்டித்துத் தந்த திருத்தலம் என்பது. இதனால், இங்கு நாள்தோறும் 60–ஆம் திருமணம், 80 அகவை விழா எனப் பல நிகழ்ச்சிகள் நடந்து கொண்டே இருக்கின்றன.

இது சிவத்தலம். இதே போன்று இத்திருத்தலத்திற்குச் சற்றே வடக்கில் உள்ள ஒரு வைணவத் திருத்தலம் திருவெள்ளக்குளம் அண்ணன் பெருமாள் கோவில். திருக்கடவூரில் சைவ அன்பர்கள் ஆயுள் நீட்டிப்புச் சடங்குகள் செய்வது போல, வைணவப் பெருமக்கள் சடங்குகள் செய்யும் தலம் இதுவாகும். இத்திருத்தலம் சீர்காழிக்குத் தெற்கில் 7 கி.மீ. தொலைவில் உள்ளது.

இக்கோவில் உருவானது பற்றி ஒரு புராண வரலாறு உள்ளது. சிவபெருமான், தட்சனின் வேள்வியை அழித்துவிட்டு ஊழித்தாண்டவம் ஆடினார். அப்போது அவருடைய தலை முடியிலிருந்து 11 முடிகள் இத்தலத்தில் விழுந்து ருத்திரர்களாக வடிவெடுத்தன.

தொடர்ந்து அவர் அந்தத் தாண்டவத்தை ஆடினால் உலகம் அழியும் என்று கருதிய தேவர்கள், மகாவிஷ்ணுவை அணுகி வேண்டினர். மகாவிஷ்ணு உடனே சிவபெருமானின் முன்னர் எழுந்தருள, சிவபெருமானின் கோபம் தணிந்தது. அவர் மகாவிஷ்ணுவை நோக்கி, 11 வடிவங்களில் இத்தலத்தில் எழுந்தருளுமாறு வேண்டிக் கொண்டார்.

அதன்படியே மகாவிஷ்ணு எழுந்தருளிய தலங்களே, பதினொரு நான்கூர் திவ்யதேசத் தலங்களாக விளங்குகின்றன.

இத்திருக்கோவில் 'அண்ணன் கோவில்' என்று வழங்கப்படக் காரணம் திருமங்கையாழ்வார் ஆவார். திருப்பதி திருமலையப்பனை முதன் முதலாக 'அண்ணா' என்று அழைத்த ஆழ்வார், இத்தலத்தில் உள்ள பெருமாளையும் 'அண்ணா' என்றே அழைத்தார். எனவே, இத்திருத்தலம் 'அண்ணன் கோவில்' என்று வழங்கப்படுகிறது.

இங்கே பெருமாளுக்கு 'சீனிவாசன்' என்ற திருநாமம் உள்ளது. எனவே, திருமலைக்குச் செல்ல இயலாதவர்கள் இந்தத் தலத்திற்கு வந்து தங்கள் பிரார்த்தனையை நிறைவேற்றிக் கொள்வதும் வழக்கத்தில் உள்ளது.

இந்தத் திருத்தலத்தில் ஆயுள் வளர்க்கும் வழிபாட்டுச் சடங்குகள் நடைபெறுவதற்கு ஒரு புராணக்கதை உள்ளது.

முற்காலத்தில் சூரிய வம்சத்தில் பிறந்த துந்துமாரன் என்ற மன்னனுக்கு நீண்ட காலம் குழந்தைப்பேறு இல்லாதிருந்தது. அதனால், அம்மன்னன் புத்திர காமேட்டி யாகம் முதலிய பல வேள்விகள் செய்தான். அவற்றின் பயனாக அவனுக்கு ஒரு மகன் பிறந்தான். அவனுக்குச் 'சுவேதன்' என்று பெயர் சூட்டி மகிழ்ந்தான்.

அப்புதல்வனின் ஜாதகத்தைக் கணித்துப் பார்த்த சோதிடர், அவன் 9 வயதில் உயிரிழப்பான் என்று கூறினார். தவமாய்த் தவமிருந்து பெற்ற புதல்வன் 9 வயதில் அழிவான் என்பதையறிந்து மன்னன் மிகவும் கலங்கிப் போனான். இந்த அழிவைத் தடுக்க என்ன செய்யலாம் என யோசித்தான்.

தங்கள் குலகுருவான வசிஷ்ட முனிவரிடம் ஆலோசனை கேட்டான் மன்னன். வசிஷ்ட முனிவர், மன்னனையும், அவனது மனைவி, மகனையும் உடன் அழைத்துக்கொண்டு, பல தலங்களுக்கும் சென்று விட்டு, 'பலாசவனம்' என்று அழைக்கப்பட்ட இந்தத் திருத்தலத்திற்கு வந்தார். அப்போது அச்சிறுவனுக்கு 9 வயது ஆகியிருந்தது.

இப்பகுதியில் தவம் செய்து கொண்டிருந்த

*தொடர்ச்சி : 94–ம் பக்கம்*

நவம்பர் இதழ் தொடர்ச்சி

சிறுகதை

ஆசான் உருளியைத்தூக்கி அடுப்பின் மேல் வைக்க, குமரேசனும் பாஸ்கரனும் கையால் வாய் பொத்திக் குரவையோசையிட்டனர். ஆசான் உருளியில் மூன்று அகப்பை நெய்யைக் குழைவாக அள்ளி மெல்லக் கவிழ்த்து விட்டார். அது உருகி உருளிக்குள் ஓடித் தத்தளித்துக் கரையத் தொடங்கியதும் அவர் திரும்பிப் பார்க்க, தட்டில் சீராக நறுக்கப்பட்ட பச்சை மிளகாயை எடுத்துக் கொண்டுவந்து பாஸ்கரன் நின்றான். அவர் இரண்டு முறை கையால் அள்ளிச் சுறுசுறுவென்று கொதித்து வெடித்துக்கொண்டிருந்த நெய்யில் பச்சை மிளகாய்களைப்போட்டார். கைகூப்பி



# பிரதமன்

"தாயே! தேவீ!" என்றபின் பெருமூச்சுடன் அவர்களிடம் கைகாட்டிவிட்டுத் திரும்பித் தன் நாற்காலியை நோக்கிச் சென்றார்.

பாஸ்கரன் பித்தளைக்கரண்டியால் பச்சை மிளகாயைப் புரட்டத் தொடங்கினான். நெய்யில் புரண்ட பச்சை மிளகாய் அடுக்களை முழுக்க மணத்தை நிரப்பியது. முதல் அடுப்பிலிருந்து நெருப்பெடுத்து அடுத்த அடுப்புகளைப் பற்ற வைக்கத் தொடங்கினார்கள். முதலில் தொடுகறிகள்தான். நார்த்தங்காய், நெல்லிக்காய், புளிச்சிக்காய் என ஏழு தொடுகறிகள். அதன் பிறகு வற்றக்குழம்புகள், பயறு பருப்பிட்ட கூட்டுக்கறிகள். நள்ளிரவில்தான் சாம்பார். தேங்காய் அரைத்த குழம்புகள் பின்னிரவில். விடியும்போது பிரதமனுக்கான உருளிகள் அடுப்பிலேறும்.

பிரதமன் சுண்டிய உருளிகள் இறக்கி வைக்கப்பட்ட பிறகு அதே அடுப்பில் நிலவாய்களை ஏற்றி வைத்து விறகுகளை முற்றாக எடுத்துவிடுவார்கள். அதுவரை எரிந்த அடுப்புகளின் கனலில் தண்ணீர் பார்த்து நிற்கவே கொப்பளிக்கத் தொடங்கும் அரிசியைப் போட்டு மூடிச் சற்று நேரத்திலேயே சோறு வெந்து பொங்கி நுரை போல நிலவாய்க்கு வெளியே மறிந்து நிற்கும். சல்லரிகளால் கோரி பாயில் குவித்து நீவிச் சீர்படுத்தி மேலே வாழை இலை அடுக்கி அதற்கு மேல் பாய் மூடிப்போட்டால் பந்திக்குப் பாய் போடும் வரை உமித்தீ போல உள்ளிருந்து வெந்துகொண்டே இருக்கும்.

அடுக்களையில் முதலில் எரிந்து நிறைவது மணம். உப்பு, புளியுடன் இணைந்த தொடுகறிகளின் மணம். தேங்காயும் பருப்பும் எழும்பும் மணங்கள் அதன்பின். அவற்றை மீறி நிறையும் பாயசத்தின் முதல் மணம் எழும்போது பிற மணங்கள் அனைத்தும் விலகும். உருகும் வெல்லமும் சுண்டிய தேங்காய்ப்பாலும் வெந்துக்கனிந்த பச்சரிசி அடையும் இணைந்து எழும் அந்த மணம் பித்தெழச் செய்வது. அடுக்களையில் வெவ்வேறு வேலைகளில் ஈடுபட்டிருக்கும் அனைவரும் அமைதியாகிவிடுவார்கள். அம்மன் கோயிலில் நள்ளிரவுப் பூசையில் உறுமியும் மகுடமும் முழவும் கைமணியும் ஒலித்துக் கொண்டே இருக்க திடீரென்று பூசாரியில் தேவி எழுவதைப்போல. உறுமலும் நடுக்கமும் எழுவதற்குள்ளாகவே விழிகள் மாறிவிட்டிருக்கும்.

அவள் ஆசான் அருகே சென்று நின்றாள்.

வளையோசை எழுந்தது. ஆசான் இயல்பாகத் திரும்பிப் பார்த்தார். "இங்கதான் இருக்கியன்னு சொன்னாக" என்றாள். ஆசான் அவளைப் பார்க்காமல் "ஆமாம்" என்றார். "நல்லாருக்கியா?" என்று கேட்டபடி திரும்பி அப்பால் நின்ற பாஸ்கரனிடம் கைகாட்டினார். அவன் வெற்றிலைச் சுருளை எடுத்துக்கொண்டு நீட்ட அதை வாங்கி வாய்க்குள் அடக்கியபடி "வீட்டுக்காரரெல்லாம் வந்திருக்காகளா?'' என்றார். "எல்லாரும் உண்டு. பையன் மெட்ராஸுல படிக்கிறான். அவன் வரல. மகளக் கூட்டிட்டு வந்திருக்கேன்" என்றாள்.



# ஜெயமோகன்

அவர் ஒன்றும் சொல்லவில்லை. "அவ்வோ வந்திருக்கா. அவுங்க தம்பி, அண்ணா, அம்மா எல்லாரும் வந்திருக்காக" என்று அவளே சொன்னாள். "ஆமாம், சொந்தம்னு கேள்விப்பட்டேன்" என்றார் ஆசான். "நல்ல சொந்தந்தான்" என்றாள் அவள். "பாத்துக் கொஞ்சகாலம் இருக்கும்ல?" என்று அவர் கேட்டார். "ஆமாம், அந்தப்பக்கம் ஒண்ணும் வாரதில்லயே?" என்று அவள் சொன்னாள். "அங்க என்ன வாரதுக்கு? நாகர்கோயில் பக்கம் நம்ம சமையலுக்கு ருசி கெடயாதுல்லா? நம்ம ஏரியா இங்க கேரளாப் பக்கமாக்கும். நம்ம சமயலைத் தின்னா மட்டை அரிசிச்சோறு, தேங்காக் குழம்புன்னு சொல்லி பாண்டிக்காரன் குத்தம் சொல்லுதான்" என்றார் ஆசான்.

"இதுக்க ருசி ஒண்ணு வேறல்லா?" என்றாள். ஆசான் ஒன்றும் சொல்லவில்லை. "உள்ளது சொன்னா நான் மனசறிஞ்சு நல்ல விருந்துசத்யை சாப்பிட்டுப் பதினஞ்சு வருஷமாச்சு" என்றாள். "ஏன்? அங்க ஒண்ணும் போறதில்லயா?" என்றார். "அங்க வேற சமயலுல்லா?" என்றாள். ஆசான் "ஆமா, அங்க பிரதமன் இல்ல. பருப்புப் பாயசம்தான் வெப்பாக. நமக்கிங்க எல்லாம் தேங்காயிலே" என்றார். "ஆமா, தேங்கா இல்லாம என்ன ருசி?" என்றாள்.



ஆசான் அவளை ஏறிட்டு நோக்கி "உள்ளதச் சொன்னா ருசீன்னு அப்படி ஒண்ணும் இல்ல. மனசுக்க பழக்கமாக்கும் ருசி" என்றார். அவள் ஒன்றும் சொல்லவில்லை. "நினைச்சா மனசைப் பழக்கி எடுக்கலாம். பழக்கி எடுக்கணும்னு நெனக்கணும். அல்லாம ஒத்த ருசியில நின்னா பலதும் நமக்கு இல்லாம ஆகும். இந்த உலகம் ருசிகள் கொண்டு நிறைஞ்சதாக்கும். இந்தா மாவேலிக் கரையிலிருந்து தக்கலை வரைக்கும் தெக்கந் திருவிதாங்கூர். இந்த ஏரியாக்குள்ள மட்டும்தான் நம்ம சமையலுக்கு மதிப்பு. ஒலகம் விரிஞ்சு கெடக்குல்லா! அமெரிக்காக்காரன் என்னத்தச் சாப்புடுதான். ஆப்பிரிக்கால என்னத்தத் திங்கான்! எல்லாரும் ருசிச்சுதான் திங்குதாக"

"அதனால் எல்லா ருசியும் நம்ம ருசியாயிடாதில்ல?" என்று அவள் சொன்னாள். "எல்லா ருசியும் ருசிதான். நாக்க மனசு பிடிச்சு நடத்தப்படாது. நாக்க அதுபாட்டுக்கு விட்டா அது எல்லா ருசியும் கண்டுக்கிடும்" என்றார் ஆசான். அவள் "எல்லாம் சொல்ல நல்லாத்தான் இருக்கு" என்றாள். "ஏன்?" என்று அவர் கேட்டார். "ஒண்ணுமில்ல" என்றபின் "நான்

வாரேன்" என்றாள். "சரி எனக்கு சோலி கெடக்கு" என்று ஆசான் சொன் னார். அவள் அப்படியே நின்றாள். "செரி, உனக்க மகளுக்க கல்யாணத்துக்கு வாறேன். மணக்க மணக்கப் பிரதமன் வச்சு வெளம்புதேன்... என்ன?" என்றார் ஆசான். அவள் ஒன்றும் சொல் லாமல் திரும்பிச்சென்றாள்.

ஆசான் திரும்பியபோது என்னைப் பார்த்தார். "ஏலே கறிகாய் வெட்டு ஆச்சான்னு போய் பாத்துட்டு வா. தேங்கா துருவத்தொடங்கணும்" என்றார். அவள் போவதைப் பார்த்தபின் நான் ஆசானிடம் "அவுகளுக்கு ஒரு பொண்ணு இருக்கா" என்றேன். "ஏன் பொறத்தால மோந் துட்டுப் போனியோ?" என்றார் ஆசான் நான் ‘இல்லை’ என்று தலையசைத்தபின் காய்கறி வெட்டுமிடத்துக்குச் சென்றேன்

நுழையும்போதே வெட்டப்பட்ட காய்கறிகளின் கலவையான கறைமணம் என்னை அறைந்தது. வெண்டைக்காய்களும் கத்திரிக்காய்களும் சீரான துண்டுகளாகக் குவிந்து கொண்டிருந்தன. கறிகாய் வெட்டுபவர்கள் கைகள் தங்கள் இயல் பில் வெட்டிக் கொண்டிருக்க, மாறி மாறிக் கேலி செய்து விளையாடிக் கொண்டும் பேசிக் கொண் டும் இருந்தார்கள். "இவரு ஆரு, அரிவைப்பு ஆசானுக்க வாலாவே? மேற்பார்வை போட வந்திருக்காரு" என்றார் மாதவன் பாட்டா. நான் அவர்கள் பேசிக்கொண்டதை முற்றாகத் தவிர்த்து அமர்ந்து காய்கறிகளைப் பார்த்தேன். ஒருமணி நேரத்திற்குள் அனைத்தும் முடிந்துவிடும் என்று தோன்றியது.

தேங்காய் துருவுமிடத்திற்கு வந்தபோது வாழையிலைகள் பரப்பப்பட்டுத் துருவிகளை வைத்து அவற்றின் மேல் ஒற்றைக்கால் மடித்து அமர்ந்து துருவிக் கொண்டிருந்தார்கள். நூற்றுக் கணக்கான புறாக்கள் குறுகும் ஒலியில் தேங்காய் கள் வெள்ளைநுரைபோல மாறிக் குவிந்தன. நானும் ஒரு துருவியை எடுத்து அமர்ந்தேன். தேங் காய் துருவுவதற்கு ஓரளவு கற்றுக் கொண்டிருந் தேன். உடைந்த பருப்பின் கூரிய மடிப்பு முனை ஒன்றைத் துருவியின் பல்லில் வைத்து மூன்று முறை சுரண்டியபின் சுழற்றிச் சுழற்றி வருடி எடுக்கவேண்டும். அதற்கொரு தாளம் அமைந்து விட்டதென்றால் மிக எளிதாக வேலை நிகழும்.

தாளம்தான் எந்த வேலையையும் மிகச் சரியாக நிகழ்த்துகிறது. தாளம் சரியாக அமைய வேண்டுமென்றால் அந்தத் தாளத்தைப் பற்றி நினைக்கவே கூடாது. கைகளிலும் கண்களிலும் எல்லாம் தாளம் இருக்கிறது. தாளத்திற்குள் நம் மனம் போனால்தான் தாளம் தவறுகிறது. வேகமாகத் தேங்காய் துருவுகையில் ஒருமுறை தாளம் தவறினால் போதும், துருவியின் முள் கையில் பாய்ந்துவிடும். அரிவாள்மணை பாய் வதைவிட அது வலிகொண்டது. ஆறுவதற்கும் நெடுநாள் ஆகும். அதற்குப் பூனையிடம் அடி வாங்குவதென்று சமையல்கட்டில் சொல்வார்கள். "பூனை பிராண்டியாச்சா? ஒரு பத்து நாளைக்கு நல்லநேரம் போகும்" என்பார்கள். பூனைக்கால் அடியின் தழும்பு எப்போதுமே போகாது.

வாழையிலையில் குவிந்த தேங்காய்த் துருவலை அள்ளிப் பனங்கடவத்தில் கொண்டு சென்று அப்பால் வைத்தோம். நாகு மாமாவும் பிறரும் பெரிய ஆட்டுக்கல்களில் அதைப் போட்டு அரைத்துக் கொண்டிருந்தார்கள். "மலையாளத்துச் சமையல்னா செக்கில வெச்சுத் தேங்கா அரைக் கணும்னு எங்க ஊர்ல சொல்வாங்க" என்றார் மணிமாமா. "இங்க எல்லாத்துலயும் தேங்கால்லா?" என்றான் குமாரன். "நீ என்னத்தக் கண்டே? மூலையம் வீட்டுப் பப்புத் தம்பி மகளுக்க கல்யாணத்தில் பாலுப் புழிஞ்ச தேங்காச் சண்டு இருக்கே அது நாப்பது கடவமாக்கும். கொண்டு வந்து வாழைக்க அடியிலே குழியெடுத்துப் பொதச்சாக" என்றார் உண்ணாமுலை. "மாட்டுக் குக் குடுக்கலாமே?" என்றான் குமார். "ஏலே, அம்பிடு சண்டியத் தின்னா மாடு பீச்சி அடிக் கும்ல" என்றார் உண்ணாமுலை.

"நம்ம சமையலிலே தேங்காயாக்கும் எல்லாக் கறியும். ஆனா தேங்கா அதுக்க தனிக் கொணத்த அடையுதது நல்ல பிரதமன்ல நெய்யும் வெல்லமுமா நிண்ணு முறுகி வரும்போதாக்கும்" என்றார் சண்முகம்."பிரதமன்னா அடப்பிரதமன் தான். மத்த பிரதமன்லாம் அடப்பிரதமனை நெனச்சுக்கிட்டு குடிக்கியது" என்றார் உண்ணாமுலை. "ஏன் பிரதமன்னு சொல்லுதாக? சொல்லு பாப்பம்." நான் "அதாக்கும் ஃபஸ்டு..." என்றேன். "ஆனால் அதையில்லா கடைசியிலே வெளம்புதாக?" என்றார். "கோயிலிலே கடைசியி லேதானே பிரதான சாமிக்குப் பூசை?" என்றேன். "லே, பயலுக்கு அறிவுண்டுலே" என்ற உண்ணா முலை "ஆயிரம் ருசியுண்டானாலும் ஒண்ணாம்

ருசி பிரதமனாக்கும். நாட்டுக்குப் பிரதம மந்திரி மாதிரி" என்றார்.

"இப்போ நாகர்கோயில்ல எல்லாம் அடைய பாக்கெட்டிலே விக்குதான். கிளிச்சு தேங்காப் பால்ல இட்டு வேவிச்சுப் பாயசம் வெக்கலாம்" என்றான் குமார். "அது முழுக்க மைதால்லா? மழுக்கு மழுக்குன்னு இருக்கும். நல்ல அடன்னா நயம் வெள்ளைப் பச்சரிசியில செய்யணும். ஆசான் ஒரு நாளைக்கும் அடைய வெலைக்கு வாங்குனது கெடயாது. அதுக்குண்டான மதிப்பு ஆசானுக்க பாயசத்துக்கு உண்டு" என்றார் சண்முகம்.

நான் "ஆசான் வீட்ல ஆளு வெச்சு அடை செய்யுதாரு" என்றேன். "நீ செய்யுதியோ?" என்றார் சண்முகம். "ஆமாம் நாந்தான் நேத்தைக்கி அடை செய்யக் கூட நிண்ணேன்" என்றேன். "எப்டிச் செய்வ?" என்று குமரேசன் கேட்டான். ஆசான் அடையை மட்டும் அவரேதான் செய்வார். நான் "பச்சரிசி மாவரச்சு வாழயிலையில் பரப்பி, அத ஆவியிலே வேவிச்சு வெயில்ல போட்டு உணத்தி எடுக்காரு" என்றேன். "வெயில்ல போடணுமோ?" என்றான் குமார். "இல்லல்ல, நல்ல வெய்யில்ல போடப்படாது. காஞ்சா ஒடிஞ்சிரும்" என்றேன். "ஆனா புளிச்சிரப்பிடாது. ஒரு நாள்ல உலரணும். இல்லேனாப் புளிச்சிரும்."

"மெனக்கெட்ட வேல. அதுக்குப் பேசாம பாக்கெட்டு அடைய வாங்கிப்போடலாம். இங்க பாயசம் குடிக்குததிலே ஆருக்கு வித்தியாசம் தெரியுது?" என்றார் சண்முகம். "அப்டி நினைக்கிறதனாலத்தான் நீரு இங்க தேங்கா அரைக்கீரு. அவரு அங்க சேரிலே உக்காந்திருக்காரு" என்றான் மணி. "ஆசான் நாவடக்கம் உள்ளவராக்கும். ஆயிரம் பிரதமன் வச்சிருப்பாரா? இன்னைக்கு வரை ஒரு துளிப் பாயசத்த நாக்கிலே விட்டு நான் பாத்ததில்லை." நான் "அவருக்கு இனிப்புத் தெரியும்" என்றேன்.

"பாயசம் கனிஞ்சு வாற நேரம் இருக்கே. அப்ப மட்டுமாக்கும் நான் ஆசானை குரு வேண்ணு நினைச்சுக் கும்பிடுதது. இல்லேன்னா இந்த மூக்கில தீ வச்சிருக்கிற ஆளுகிட்ட எவன் நிண்ணு வேலை செய்வான்? ஒரு நல்ல வார்த்த உண்டா? ஒரு புஞ்சிரிப்பு உண்டா? கல்லு மூஞ்சியில்லா?" என்றார் சண்முகம்.

நான் தேங்காய் பிழிந்து முடித்த செய்தியை ஆசானிடம் சொல்வதற்காகச் சென்றேன். அவியல் மீது தேங்காயெண்ணெய் ஊற்றிக் கொண்டிருந்த நாராயணன் "பதம் வந்தாச்சான்னு போய்க் கேளுல" என்றார். நான் "பதம் வரலேண்ணா அவரே சொல்லுவார். மணம் போரும் அவருக்கு" என்றேன். அவியலை நீண்ட மரப்பிடி வைத்த சட்டுவத்தால் மெல்லக்கிளறி மேலும் சற்று தேங்காயெண்ணையை விட்டார். ஆசான் அங்கிருந்தே கனைக்கும் ஓசை எழுப்பினார். ‘‘பாத்தேளா" என்றேன். "அங்க இருந்துகிட்டு எல்லா ருசியையும் பாக்காரு" என்றேன். "நாக்குத் தொடாம என்னத்த ருசிய அறிஞ்சாரு" என்றான் பக்கத்தில் நின்றிருந்த முருகன். அவன் கூட்டுக்கறியை கிண்டிக் கொண்டிருந்தான்.

எனக்கு வலப்பக்கம் நின்றிருந்த சுகுமார் அண்ணன் துவரனைப் புரட்டியபடி "அவர் ஏன் ஒண்ணயும் வாயில் வைக்கிறதில்ல?" என்றார். "வாயில வெச்சு ருசிபாத்தா ஒரு ருசி நாக்கிலே நிக்கும். வேற ஒரு ருசியும் தெரியாம ஆயிரும்..." என்றேன். "திங்கறவனுக்கு ருசியில்லன்னாக்கும் சொல்லு" என்றேன். "அப்ப நீ திங்குதில்லயா?" என்றார் மாணிக்கம். "நான் பாயசம் மட்டும் குடிப்பேன்" என்றேன். நாராயணன் "அது சரி. அப்ப பாயசம் குடிக்குத வயசாக்கும் இப்ப பயலுக்கு" என்றார்.

அவர்கள் கூவிச் சிரித்தார்கள். ஆசான் கூடத்திலிருக்கும்போதே கூட எதை வேண்டுமானாலும் பேசிக்கொள்ளலாம். ஆசான் காதே இல்லாதவர். வாயும் கூடத்தான். பெரும்பாலும் கனைப்போசைகள்தான். நான் மீண்டும் தேங்காய்ப்பால் பிழியுமிடத்துக்குச் சென்றேன். புதிய வேட்டியில் அரைத்த தேங்காய்விழுதை அள்ளிக் குவித்து இரு முனையையும் பிடித்து இறுக முறுக்கிப் பால் பிழிந்து கொண்டிருந்தனர்.

மீண்டும் அடுக்களைக்கே வந்தேன். அவியலும் கறிகளும் இறக்கி வைக்கப்பட்டன. நிலவாய்களின் காதுகளுக்குள் செலுத்தப்பட்ட மூங்கில்களில் கயிறுகட்டி இருபுறமும் பற்றித் தூக்கிக் கொண்டு சென்று வைப்பறைகளில் மணல்குவித்த மணைகளின் மேல் அமர்த்தி மேலே வெண்கலத் தாலங்களால் மூடினார்கள். குழம்புகளை இறக்குவதற்கு ஒரு பக்குவம் இருக்கிறது என்று சமையல் வேலைக்கு வந்து ஓராண்டுக்குப் பின்தான் நான் அறிந்துகொண்டேன். நிலவாய்களில் அவை மேலும் சற்று நேரம் கொதித்

துக் கொண்டிருக்கும். நன்றாகக்கொதித்து நாக்கில் சுவை அறிந்த பின் இறக்கி வைத்தால் மேலும் கொதித்துக் காய்கள் குழைந்து, பருப்பு வற்றிச் சுவை மாறிவிடும்.

"குழம்ப எறக்கி வைக்கிறது பன்னிரண்டு வயசுக் குட்டிய சினேகிக்கிறது மாதிரி. சினேகம் முத்திக் கல்யாணம் வாறப்ப குட்டி பக்குவம் ஆவா" என்று முருகேசன் என்னிடம் சொன்னான். நான் பேசாமலிருக்க, அவன் சிரித்து "பயலுக்கு நாணம்" என்றான். "இந்த உலகத்துல உள்ள முழுக்காரியங்களையும் அடுக்களைல நின்னு கத்துக்கலாம் பாத்துக்கோ. அண்ணன் கேக்கும்போ வெத்தில பாக்கு பீடி பொகையில வாங்கிட்டு வா. ஒண்ணொண்ணா சொல்லித் தாரேன்" என்றான் முருகேசன்.

பிரதமனுக்கான பெரிய உருளியை நால்வர் தூக்கிக்கொண்டு வந்தனர். அலைகளின் மேல் படகு போல அது மெல்ல அசைந்தபடி வந்தது. ஆசான் அக்கறையில்லாத கண்களால் அதைப் பார்த்தார். கனல் நன்றாக இழுத்து தாழ்த்தப்பட்ட அடுப்பில் அதை இறக்கி வைத்தனர். ஆசான் அங்கிருந்து கைசுட்டி மேற்கு மூலையை ஒரு இஞ்ச் மேலே தூக்கும்படி கைகாட்டினார். நான் பார்த்தபோது எல்லாம் சரியாக அமைந்திருப்பது போலத்தான் தெரிந்தது. ஆனால் மிக மெல்ல மேற்கு மூலையைத் தூக்கியபோது மேலும் சரியாவதைப் பார்க்க முடிந்தது.

தேங்காய்ப் பால்கள் நிறைக்கப்பட்ட தகரப் பீப்பாய்களைக் காவடி போலக் கட்டித் தோளிலேற்றிக் கொண்டு வந்தார்கள். அவற்றை உருளியில் ஊற்றி நிறைத்தபோது எப்போதுமே நான் அடையும் அந்த வார்த்தை மனதில் எழுந்தது, பாற்கடல். யாராவது அதைச் சொல்லவும் செய்வார்கள். "போரும்லே, இன்னும் விட்டா பெருமாள் வந்து படுத்துக்கெடக்கப் போறார்" என்று குமரேசன் சொன்னான். "அவரு படுக்கிறதுக்குப் பாம்பையில்லா கூட்டிட்டு வருவாரு" என்று முருகன் சொன்னான். அவர்கள் சிரித்தார்கள். எப்போதுமே பாயசம் சமைக்கையில் ஓர் உல்லாசம் உருவாகிவிடுவதைக் கண்டிருக்கிறேன்.

தேங்காய்ப்பால் கொதித்துச் சுண்டத் தொடங்கியது. பசும்பால் கொதித்துச் சுண்டும்போது மெல்லிய மாமிச மணமும் உடனிருக்கும். தேங்காய்ப்பால் கொதிக்கும்போது இனிய தழைமணம். பின்னர் நெய்யுருகும் மணம். மேலும் நுண்மையான இனிப்புமணம். அதை வாயில் விட்டால் இனிக்கும் என்று தோன்றும். ஆனால் சற்றுப் புளிப்பும் நாவில் ஒட்டும் எண்ணைத் தன்மையும்தான் அதிலிருக்கும். மேலும் சுண்டியபின் அதை எடுத்து வெல்லம்போட்டுக் காப்பி போட்டுக் குடிப்பது முருகேசன் அண்ணாவின் வழக்கம்.

அடையைத் தேங்காய்ப் பாலில் ஊறவைத் திருந்தனர். அவற்றைச் சல்லரிகளில் அள்ளிக் கொதிக்கும் பாலில் கொட்டி மெதுவாக இளக்கி ஒன்றுடன் ஒன்று ஒட்டாமலாக்கித் தேங்காய்ப் பாலை வற்றச் செய்தார்கள். வற்ற வற்ற மேலும் தேங்காய்ப்பால் விட்டனர். வெல்லத்தைத் துணி போட்டு மூடி ஆட்டுக்கல் குழவியால் அறைந்து உடைத்துச் சிறு துண்டுகளாக்கி இன்னொரு உருளியிலிட்டுச் சற்றே நீரூற்றிக் கொதிக்க வைத்து நன்றாகக் கிண்டிப் பாகாக்கினர். அகப்பைகளால் மேலிருந்து பாகை வழித்தெடுத்துப் பெரிய பித்தளை சருவத்தில் நிறைத்தனர். வீடுகளில் பிரதமன் செய்யும்போது நேராகவே வெல்லத்தைத் தேங்காய்ப்பாலில் விடுவதுண்டு. ஆனால் பெரிய அளவில் வெல்லம் பாகாக்கும்போது அடியில் தங்கும் ஊறலில் நுண்ணிய மணல்பரு போலக் கசடு இருப்பதையும் அதன் சுவை முற்றிலும் வேறொன்றாக இருப்பதையும் பார்த்தபின் நான் வீட்டில் சமைக்கும்போதும் பாகு காய்ச்சாமல் இருப்பதில்லை.

தேங்காய்ப் பால் சுண்டி வெல்லப்பாகுடன் கலந்து இறுகி மெல்லிய படலமென்றாகிக் குமிழிகள் கொப்பளித்து உடைந்து தெறித்தன. அடியில் பிடிக்காமல் கிளறிக்கொண்டே இருந்தனர் முருகேசனும் குமரண்ணனும். அதுவரை பால் சுண்டும் மணமாகவும் வெல்லம் முறுகும் மணமாகவும் இருந்தது; மெல்லப் பாயசத்தின் மணத்தை நோக்கிச் செல்லத் தொடங்கியது. ஆனால் அது பிரதமனின் தனிமணம் அல்ல.

அப்பால் சிற்றுருளியை அடுப்பில் வைத்து நெய்யுருளைகளைப் போட்டு உருக்கினர். புது நெய்யைக் கொண்டு வந்து சிறிது சிறிதாக உருளியில் குமிழி கொப்பளித்த பிரதமனுடன் கலந்து கிண்டிக்கொண்டிருந்தார்கள். அப்போதும் பிரதமனின் மணம் வரவில்லை. ஆசான் என்னிடம் தொண்டையால் கனைத்து விரல் சுட்டினார். நான் கோளாம்பியைக் கொண்டு அவரிடம் நீட்டினேன். அதில் துப்பி அருகிலிருந்த கூஜாவின் நீரை எடுத்து வாய் கொப்பளித்துவிட்டு மீண்டும் படுத்துக் கொண்டார்.

சமையலறை முழுக்கப் பெரும்பாலானவர்கள் தங்கள் வேலைகளை நிறுத்தி எரிந்த தீயை முழுமையாக அணைத்துக் கனல் சிவந்து



முனகிய அடுப்பின் அருகே எழவிருக்கும் பிரத மனுக்காகக் காத்து நின்றிருந்தார்கள். கிண்டிக் கொண்டிருந்தவர்களின் கண்கள் உருளியிலிருந் தாலும் உடலால் செவியால் ஆசானைக் கவனித் துக் கொண்டிருந்தார்கள்.

சாய்வு நாற்காலி கிறீச் என்ற ஒலியை எழுப்பியது. அந்த ஓசை சமையலறை முழுக்கக் கேட்டது. ஆசான் எழுந்து கை நீட்டினார். முருகன் நீண்ட மரக்கைப்பிடி கொடுத்த சட்டுவத்தை அவர் கையில் கொடுத்துவிட்டு விலகிக் கொண்டான். அவர் உருளியை விளிம்பு வழியாகச் சுழற்றிக் கிண்டி உலோக ஓசை எழ உருளியின் குழிநடு வளைவுக்குக் கொண்டு வந்து சற்றே புரட்டினார். சமையலறையை முழுதும் நிறைக்கும் பிரதமனின் மணம் எழுந்தது.

(முற்றும்)



இந்தோனேசியப் பெண்மணி ஒருவருக்குக் காமாட்சிபுரி ஆதீனம் சாக்தஸ்ரீ சிவலிங்கேஸ்வர சுவாமிகள் உலக சமாதான விருது வழங்கும் காட்சி. உடனிருப்பவர்கள் இந்தோனேசியக் கப்பல் அதிபர் டாக்டர் யாங்சூன், 'ஓம் சக்தி' மாத இதழ் இணையாசிரியர் திரு. பெ. சிதம்பரநாதன்.

## கோவையில்

# உலக சமாதான விழா!

கோவை காமாட்சிபுரி ஆதீனம், அண்மையில் உருவான ஆதீனமாக இருந்தாலும், அதன் பணிகள் ஆதீனங்களின் வரலாறுகளில் இடம் பெற்றுள்ள அதிசய நிகழ்வுகளாக உள்ளன. வயதால் 50 நிறைவு செய்துள்ள காமாட்சிபுரி ஆதீனத்தின் ஞானகுரு சாக்தஸ்ரீ சிவலிங்கேஸ்வர சுவாமிகள், தமிழ்நாட்டு ஆதீனங்களிலெல்லாம் இளைய ஆதீனமாவார். ஆனால், இவருடைய பணிகள் ஆன்மிக உலகத்தை அதிசயிக்க வைக்கின்றன.

காமாட்சிபுரி ஆதீனம், பல்லடம் சாலையில் கோளறுபதி நவக்கிரகக் கோட்டையில் உருவாக்கியுள்ள 51 சக்தி பீட ஆலயம் வித்தியாசமானது. 108 துறவியர் எழுந்தருளி அக்கோவிலில் பிரதிஷ்டையாகியுள்ள அம்மனுடைய மகா கும்பாபிஷேகத்தை 2017–ஆம் ஆண்டு நடத்தி, உலகமே வியக்கச் செய்தவர் ஞானகுரு சாக்தஸ்ரீ சிவலிங்கேஸ்வர சுவாமிகள்.

அங்குள்ள 51 அம்மன்களுக்கு ஆராதனைகள் தினசரி நடைபெறுவது அம்மனின் அருளால்தான். இந்தச் சாதனையைப்போல, அவர் சாதனைகளை எண்ணிப்பார்த்தால்



ஆதீனத்தில் நிகழ்ந்த உலக சமாதான மகா யாகத்தில் வெளிநாட்டினர் கலந்து கொண்ட காட்சி. டாக்டர் யாங்சூனுக்குப் பின்புறம் உள்ளவர் டத்தோ ஞானசேகரன். இவர்தான் வெளிநாட்டினரை அழைத்து வந்தவர்.

ஏராளமானவை உள்ளன. சொல்லுக்குள் அடங்காத ஜோதியின் சக்தி பெற்றவர். அங்காள பரமேஸ்வரியின் அருளுக்குப் பாத்திரமான அத்தாயின் குமாரர் சாக்தஸ்ரீ சிவலிங்கேஸ்வர சுவாமிகள்.

இந்த அதிசயத்தைப்போல அவர் நடத்திய மற்றோர் அதிசயம், காமாட்சிபுரி ஆதீனத்திலுள்ள உலக சமாதான தெய்வீகப் பேரவையின் சார்பில் ஆன்மிகப் பயணம் சென்ற போது இந்தோனேசியா, மலேசியா, சிங்கப்பூர் முதலிய நாடுகளில் வசிக்கும் மெய்யன்பர்களையெல்லாம் தமது அருளுக்குப் பாத்திரமாக்கினார்.

அவர்களைக் கோவையிலுள்ள உலக சமாதான தெய்வீகப் பேரவையின் ஆண்டுவிழாவிற்கு அழைத்து, அவர்கள் அனைவருக்குமே 24.9.2018 அன்று விருதுகள் வழங்கிப் பாராட்டுகள் செய்து, உலக சமாதான மகா யாகத்தில் கலந்து கொள்ளச் செய்து, அவர்களை மெய்சிலிர்க்க வைத்தார்.

இந்தோனேசியா, மலேசியா, சிங்கப்பூர் முதலிய நாடுகளிலிருந்து 74 சகோதர சகோதரிகள் வருகை தந்தனர். அவர்கள் அனைவரும் ஹிந்துக்கள். ஆனால், ஹிந்து மதம் பற்றி அறியாதவர்கள். ஓரளவுக்குப் புத்த மதத்தைப் புரிந்தவர்கள். அந்நாடுகளிலுள்ள பெரும்பான்மை மதத்தோடு அவர்களுக்குச் சகோதர உறவு உண்டே தவிர, அந்த மதத்தில் சங்கமித்தவர்கள் அல்ல. அவர்களை அடையாளம் கண்டு, அவர்களுக்குத் தலைமை தாங்குகின்ற டாக்டர் யாங் சூன் அவர்களை முதன்மைப்படுத்தி, அனைவரையும் வரவேற்றார்.

இந்தோனேசியாவிலிருந்து வந்து கலந்து கொண்டு சிறப்பித்த டாக்டர் யாங் சூன், ஐந்து கப்பல்களின் அதிபர். கோடீஸ்வரர். ஆனால் அனைத்தையும் இரண்டாம் பட்சமாக்கிவிட்டு, ஆன்மிகம், அன்பு, அர்ப்பணிப்பு இவைதான் மனித வாழ்க்கையின் மேன்மை என்று கருதி சுவாமிகளின் அருளுக்குப் பாத்திரமாகியுள்ளார்.

இதற்கெல்லாம் மூல முதல் காரணமாக விளங்கிய டத்தோ ஞானசேகரன் அவர்கள், சுவாமிகளின் மெய்யன்பர். அவர் மூலமாகத்தான் இந்தோனேசியா, மலேசியா, சிங்கப்பூர் முதலிய நாடுகளிலுள்ள இவர்களை அந்தந்த மொழிகளில் உறவாடித் திரட்டி வந்தவர் அவர். உண்மையில், காமாட்சிபுரி ஆதீனம் அன்றைக்கு நியூயார்க் நகரிலுள்ள ஐ.நா. சபை போல விளங்கியது.

வந்தவர்கள் எல்லாம் சுவாமிகளின் சிறப்புகளை அறிந்தும், சிந்தனைகளைப் புரிந்தும், செயல்பாடுகளை மெச்சியும் வேள்வியில் கலந்து கொண்டு மகிழ்ந்தார்கள் என்றால், அது மிகையல்ல.

– ந.நி.



உலக சமாதான மண்டபத்தில் வெளிநாட்டினர் 74 பேர் அமர்ந்திருந்த காட்சி.

85-ம் பக்கத் தொடர்ச்சி

முனிவர்களை ஒன்று சேர்த்து, சுவேதனுக்கு ஏற்படப்போகும் அகால மரணத்தைப் பற்றிக்கூறி, அதனை நீக்கும் வழியைக் கூறுமாறு அவர்களிடம் ஆலோசனை கேட்டார். அவர்கள், சுவேதனுக்கு மரணத்தை வெல்லக்கூடிய 'மிருத்யுஞ்சய' மந்திரத்தை உபதேசித்தனர்.

இந்த மந்திரத்தை எந்த இடத்தில் ஜபித்தால் உடனே பலன் கிடைக்குமோ, அந்த இடத்தைக் கூறுமாறு சுவேதன் அம்முனிவர்களைக் கேட்டான். இந்தப் பலாசவனத்தின் ஒரு பகுதியில் தொடங்கிய இவனது தவம், கார்த்திகை ஏகாதசியில் முடிவடைந்தது. கார்த்திகை மாத சுக்கில துவாதசியன்று மகாவிஷ்ணு சுவேதனுக்குக் காட்சி கொடுத்தார்.

சிறுவனின் தவத்தை மெச்சிய அவர், அவனுடைய ஆயுள் கண்டத்தை நீக்கி, தீர்க்காயுளை வழங்கினார். இதனால்தான் ஆயுள் குறைவு, கண்டம் உள்ளவர்கள் இந்தத் திருத்தலத்தில் பெருமாளை வழிபட்டு ஆயுள் தோஷ நிவர்த்தி செய்து கொள்கிறார்கள். இதனால், இது ஓர் ஆயுள் தோஷப் பரிகாரத் தலமாக விளங்குகின்றது. அறுபதாம் திருமணம் முதலியவற்றை


அலர்மேல்மங்கா சமேத அண்ணன் பெருமாள்

மருத்தர் என்பவரது ஆசிரமம் இருக்கிறது. அந்த ஆசிரமம் சீனிவாசப் பெருமாளின் திருக்கோவில் அருகே உள்ளது. அக்கோவிலின் எதிரில் ஒரு புண்ணியத் தீர்த்தம் உள்ளது. அங்கே போய் நீ இந்த மந்திரத்தை ஓதி, சித்தி பெற்று அகால மரணத்தை வெல்லலாம் என்று அம்முனிவர்கள் கூறினர்.

அதன்படியே சுவேதன் அந்தத் திருவெள்ளக் குளத்தின் தென்கரையில் வில்வ மரத்தடியில் அமர்ந்து மிருத்யுஞ்சய மந்திரத்தை ஓதித் தவம் செய்தான். ஐப்பசி வளர்பிறை தசமியில்



திருத்தேரோட்டம்

இங்கு நடத்துகிறார்கள்.

"பக்தர்கள் விரும்பிய வரங்களை எல்லாம் கொடுத்துக் காத்திடும் எம்பெருமானே, நீ என்றென்றும் இங்கேயே இருந்து, எனக்கு வரம் அளித்தது போல், உன்னை நாடி வரும் அடியார்களுக்கு அருள்தர வேண்டும்'' என்று சுவேதன் வேண்டிக் கொண்டதற்கிணங்க, பெருமான் இங்கே தேவியருடன் வீற்றிருந்து அடியார்களின் வேண்டுதல்களைக் கேட்டு அருள்புரிகிறார்.

இத்தலத்திற்கும் திருமங்கையாழ்வாருக்கும் நெருங்கிய


அண்ணன் பெருமாள் கோயில்
திருவெள்ளக்குளம்

தொடர்பு உண்டு. இங்குள்ள குளத்தில்தான் குமுத மலர்களைக் கொய்து கொண்டிருந்த ஒரு தேவப் பெண் ஒரு சாபத்தால் குமுதவல்லித் தாயா ராக அவதரித்தார். அவரைத் திருமங்கையாழ்வார் திருமணம் செய்து கொண்டார்.

திருமங்கையாழ்வாரின் உன்னதமான உயர்ந்த வாழ்விற்குத் தூண்டுகோலாக விளங்கி யவர் குமுதவல்லித்தாயார். அவரை ஆழ்வாராக்கி யவர் இத்தாயார்தான். இத்தலத்தில் குமுதவல்லித் தாயாருக்குத் தனிச் சன்னதி உள்ளது.

திருமலையில் இருக்கிற எம்பெருமான்தான் இங்கேயும் இருக்கிறான் என்பது திருமங்கையாழ் வார் கருத்து. எனவே, பெருமாளை, 'திரு வேங்கடம் மேய விளக்கு' என்று விளித்து, இத் தொடர்பை விளக்குகிறார். திருப்பதியில் உள்ள அன்னையின் பெயர் 'பத்மாவதி'. இங்கே அன்னையைத் தமிழில் 'பூவார் திருமகள்' என்றழைக்கின்றார் திருமங்கையாழ்வார்.

திருமலையில் சீனிவாசப் பெருமாள் தனித் துக் காட்சி தருகிறார். அக்குறை தீர, இத்தலத்தில் தாயாருடன் சேர்ந்து பெருமாள் காட்சி தருகிறார்.


அண்ணன் பெருமாள் கோயில்
முன்புறத் தோற்றம்

திருமலை வேங்கடவனுக்கு வேண்டிக் கொண்ட நேர்த்திக்கடன்களை அங்கு சென்று செலுத்திட இயலாதவர்கள் இத்தலத்திற்கு வந்து செலுத்துகின்றனர். எனவே, இத்தலத்தைத் 'தென் திருப்பதி' என்று கூறுகின்றனர்.

திவ்விய தேசங்களில் மங்களாசாசனம் செய்து வந்த இராமானுஜரின் மறு அவதாரமான மணவாள மாமுனிகள், பெருமாளைத் தேடி இத் தலத்திற்கு வந்தார். பெருமாள் இவரது வரவை ஆவலோடு எதிர்பார்த்திருந்து இவரைக் குளக் கரையில் சந்தித்தார் என்று கூறப்படுகிறது.

மக்கட்பேறு வேண்டுவோர் இந்தத் தலத்தில் வேண்டிக் கொள்வது வழக்கமாக உள்ளது.

திருமலையைப் போலவே இத்தலத்திலும் புரட்டாசி மாதத்தில் பிரம்மோற்சவம் நடைபெறு கிறது. ஒவ்வொரு திருவோண நாளிலும் திருமஞ் சனம் உண்டு. புரட்டாசி பிரம்மோற்சவத் திரு வோணத்தில் திருத்தேர் உண்டு.

தை அமாவாசை அன்று இரவு திருநாங்கூர் மணிமாடக் கோயிலில் பதினோரு எம்பெருமான் களின் கருடசேவை உற்சவம் மிகச் சிறப்பாக நடைபெறுகிறது. இதில் லட்சக்கணக்கான மக்கள் கூடி வழிபடுகின்றனர். தை அமாவாசைக்கு மறு நாள் திருமங்கையாழ்வார் இத்தலத்திற்கு எழுந் தருளிப் பெருமாளை மங்களாசாசனம் செய்கிறார்.

சீர்காழியிலிருந்து தரங்கம்பாடி செல்லும் சாலையில் 7 கி.மீ. தொலைவில் அண்ணன் பெரு மாள் கோவில் நுழைவு வாயில் உள்ளது. சீர்காழி யிலிருந்து தரங்கம்பாடி, நாகப்பட்டினம் செல்லும் பேருந்துகளில் செல்லலாம். திருக்கோவில் காலை 7.30 மணி முதல் 11.30 மணி வரையும், மாலை 5.30 மணி முதல் இரவு 8.30 மணி வரையும் திறந்திருக்கும். ●

டாக்டர் நா. கணேசன், ஹூஸ்டன், அமெரிக்கா



அமெரிக்காவில் மிகப் பெரிய மாநிலம் டெக்சாஸ் ஆகும். இங்கே பெரிய நகரங்களாக ஹூஸ்டன், டல்லஸ், சான் ஆண்டானியோ போன்றவை உள்ளன. ஆஸ்டின் டெக்சாசின் தலைநகரம். அமெரிக்காவின் பல ஜனாதிபதிகள் டெக்சாஸ் மாநிலத்தில் பிறந்தவர்கள்.

அமெரிக்க அரசியல் உலகில் நியூ யார்க், டெக்சாஸ், கலிபோர்னியா மாநிலங்களுக்குப் பெரும் சக்தி உண்டு. ஹூஸ்டனில் நாசா ஜான்சன் ஸ்பேஸ் சென்டர் உள்ளது. கென்னடி 'சந்திரனுக்குப் போவோம்' என்ற புகழ் பெற்ற சொற்பொழிவு ஹூஸ்டனில் நிகழ்ந்ததும், நீல் ஆர்ம்ஸ்ட்ராங் நிலவில் காலடி வைத்ததும் வரலாறு. மாரடைப்பு நீக்கத்துக்கான இதயத் திறப்பு சிகிச்சை கண்டுபிடித்ததும் இவ்வூரிலே தான்.

ஹூஸ்டன் மருத்துவர் 2018-ஆம் ஆண்டின் நோபல் பரிசு பெற்றுள்ளார். ஹூஸ்டனில் பெட்ரோல், உரம், மருந்து, கணினி என்று பல துறைகளிலும் சுமார் ஒரு லட்சம் இந்தியர்கள் பணி புரிகிறார்கள். 'மகாத்மா காந்தி டிஸ்ரிக்ட்' என்னும் பகுதியில் நிறைய கடைகளும், தொழில் நிறுவனங்களும் இந்தியர்கள் நடத்துகின்றனர். மதுரை மீனாட்சி திருக்கோவில் 37 ஏக்கரில் பொலிவுடன் திகழ்கிறது. பாரதி கலைமன்றம் 44 ஆண்டுகளாக இயங்கிவருகிறது. தமிழ்ப் பள்ளிகளில் ஆயிரக்கணக்கில் குழந்தைகள் படிக்கிறார்கள்.

வளர்ந்துவரும் இளைய தமிழ் கொடிவழியினருக்குத் தமிழ், தமிழ் நாட்டுத் தொடர்புகள் அறாமல் இருப்பதற்கும், தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களுடன் கூடி ஆராய்ச்சிகள் மேற்கொள்ளுவதற்கும் தமிழுக்கு ஒரு பேராசிரியரை நிரந்தரமாகப் பணியில் அமர்த்த முடிவு செய்து, அதற்கான ஆயத்தப் பணிகள் தொடங்கப் பெற்றுள்ளன. ஹூஸ்டன் பல்கலை அதற்கு ஆறு மில்லியன் டாலர்கள் (42 கோடி ரூபாய்) வேண்டும் என்கிறார்கள். டெக்சாஸ் மாநிலத்தில் இதுவே முதல் முயற்சி. இன்றைய மதிப்பில் 140,000 டாலர் ஆண்டொன்றுக்குச் சம்பளம் தமிழ்ப் பேராசிரியருக்கு வழங்கும் திட்டம்.

# ஹூஸ்டன் பல்கலையில் தமிழ்ப் பீடம்



வருங்காலத்தில் தமிழ்நாட்டில் இருந்தும் பேராசிரியர்கள் வருவார்கள் என்பது மகிழ்ச்சிக்குரிய விஷயம். ஐக்கிய நாடுகள் சபையின் சி.வி. நரசிம்மன், அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம் ஆகியோர் மீனாட்சி திருக்கோவில் தலைவர்களாக இருந்து தொண்டாற்றினர். அத்தகைசால் பதவியில் உள்ள சாம் கண்ணப்பன் (நாட்டரசன் கோட்டை) தலைமையில் குழு அமைத்து நிதி திரட்டும் பணி தொடங்கியுள்ளது. 21 கோடி ரூபாய் (3 மில்லியன் டாலர்) திரட்டினால் டெக்

சாஸ் அரசாங்கம் அதற்கு ஈடாக இன்னுமோர் 21 கோடி ரூபாய் வழங்குதல் என்று டெக்சாஸ் மாநிலத் திட்டம் (TRIP) இருக்கிறது.

**ஹூஸ்டன் பல்கலைக் கழகம்**

ஹூஸ்டன் பல்கலைக்கழகம் Tier 1 என்னும் முதல்தர பல்கலைக்கழகமாக மதிப்பிடப்படுகிறது. எனவே, அரசாங்க நிதி ஆதரவு நல்ல நிலையில் உள்ளது. பல நோபல் பரிசு பெற்ற விஞ்ஞானிகளும், பேராசிரியர்களும் பணிசெய்கின்றனர். அதில் கணிசமான அளவுக்குத் தென்னிந்தியர்களும் உண்டு. விண்வெளிப் பயணம் மேற்கொண்ட பல Astronauts இப்பல்கலை மாணவர்களாக இருந்திருக்கின்றனர்.

இந்தியப் பாராளுமன்றம் ‘செம்மொழி’ என்று அறிவித்தவற்றுள் தமிழ் முதன்மையானது. வா.செ. குழந்தைசாமி முதலானோர் எழுதிய ஆவணங்கள் அவ்வாறு சட்டப்பூர்வமாக இந்திய அரசாங்கம் அறிவிக்கத் துணை செய்தன.

“Tamil is one of the two classical languages of India, is the only language of contemporary India which is recognizably continuous with a classical past.” (The Interior Landscape, A. K. Ramanujan, 1967).

“First of all, the so-called Sangam Tamil poetry is regarded by the Tamils themselves, by the professional historiographers and critics, as well as by intellectual readers, as classical in the same sense in which we regard some parts of our national literatures as classical. Second, it has been a finite, “frozen” corpus, a body of texts which had not been expanded since it ceased to be part of a live oral tradition. Since those times, it has become a part of the classical heritage as it were. Third, it is the expression of a linguistic, prosodic and stylistic perfection; it is a finished, consummate and inimitable literary expression of an entire culture, and of the best in that culture; in this sense, it is truly a classical product, a classical literature.” (K. Zvelebil, The Smile of Murugan, 1973).

செம்மொழி ஆய்வு நிறுவனம், இந்தியாவில் உள்ள மொழியியல், வரலாறு, தொல்பொருள் துறைப் பேராசிரியர்கள் ஹூஸ்டனுக்கு ஆய்வுகள் நடத்த வர இயலும். மொபைல் பேசிகளில் இணையம் என்று வந்துவிட்ட நிலையில், தமிழ் உலக மொழியாக நிலைபெறச் செய்ய ஹூஸ்டன் பல்கலைப் பேராசிரியர்கள் வரும் நூற்றாண்டில் செய்யும் பணிகள் முக்கியப் பங்கு வகிக்கும்.

தமிழர்களின் கடல்கடந்த வாணிகம், மரபுகளை ஆராய்தல், அடுத்து வரும் தலைமுறைகளுக்குத் தமிழை எடுத்துச் செல்லுதல், மாறிவரும் உலகப் பொருளாதாரத்தில் தமிழ்நாடு – அமெரிக்கா உறவுகளை வலிமை ஆக்கல் முதலிய முக்கியப் பணிகளை இந்தத் தமிழ்ப் பீடம் செய்யும். கல்வியுலகில் ஒரு தமிழ்த் தூதுவராக இப்பேராசிரியர் செயல்படுவார். அவரிடம் படிக்கும் மாணவர்கள் டெக்சாஸ் கவர்னராகவோ, அமெரிக்க செனட்டர், காங்கிரஸ்மேன் என்று அதிகாரம்மிக்கப் பதவிகளில் அமர்ந்தால் இந்தியா


டெக்சாஸ் சட்டசபை

– அமெரிக்க உயர் தொழில்நுட்ப வேலைவாய்ப்புகள் சென்னை, கோவை, மதுரை எல்லாம் வரும்.

ஹூஸ்டனில் தமிழ்ப் பீடம் அமையத் தொழில் அதிபர்கள் ஒரு மில்லியன் டாலர் அளித்தால் அவர்கள் பெயரால் மொழி, ஆராய்ச்சி, கலாசாரம் பகுதிகளை அழைக்கலாமா என்பதும் பரிசீலனையில் உள்ளது. தமிழ்நாட்டு முதல்வரையும் நாட உள்ளோம்.

கவித்துவமாகச் சொல்ல வேண்டுமென்றால், “தமிழுக்கு உரிமையான திசை தெற்குத் திசை. அமெரிக்காவில் தென் திசையில் உள்ள பெரிய நகரம் ஹூஸ்டன்தான். அங்கே பல்கலைக்கழக பீடத்தில் தமிழ் இருப்பது அழகும், அவசியமும் ஆனது.”

# மடிகளாய்க் குலுங்கிய கரந்தை மாலைகள்

பா. மீனாட்சி சுந்தரம்

எதிரி எய்த அம்பில்
நான் மாண்டுபோன நாளிலிருந்து
என் வீடு
வற்றிய நதிப்படுகையில்
கிடக்கும் ஒரு படகைப்போல் ஆனது.

ஒரு நாளும் கதவுகள் சாத்தப்படாத
என் அரண்மனையில் வழங்கப்படும்
பெருஞ்சோற்று ஊன் விருந்தும்
சுற்றிலும் வண்டுகள் ரீங்காரமிடும்
கள்நிரம்பிய குடுவைகளும்
இன்று என்னவாயின?

உலகின் பசிபோக்கிய என் இல்லத்தில்
இப்போதெல்லாம்
ஒரு களிற்றின் முடிவற்ற பெருமூச்சைப்போல்
நெய்யில் கலந்து ஆட்டிறைச்சி
சமைக்கப்படும் சப்தங்கள் கேட்பதில்லை.

என் இல்லமே!
வெற்றியின் ஈட்டியைக்
கையில் ஏந்திச் சென்ற நான்
ஒரு நடுகல்லாய் மாறிய தினத்திலிருந்து
பொழிவை இழந்து
தலை மழிக்கப்பட்டுத் தனிமையில் வாடுகிற
கைம்பெண்ணாய் நீ ஆனாய்.

இப்போது என்னைப் புகழ்ந்து பாடுகிற
அந்தப் புலவன்
வெறிச்சோடிய என் இல்லத்தைக்
காணச் சகியாத தனது விழிகள்
அழிந்துபோகக் கடவது என்றே
சபித்துக் கொள்கிறான்.

ஊரின் ஆநிரைகளைக் கவர்ந்து சென்றோரை
நான் போரில் கொன்று குவித்த காட்சி கண்டு
ஓர் ஆந்தை
இறந்து கிடக்கும் என் எதிரிகளைப் பெருவிருந்தாய்
உண்டுகளிக்க தன் சொந்தங்களை
இரவெல்லாம் அலறி அழைக்கிறது.

ஆநிரைக் கூட்டங்களை மீட்டபடி
வீறுமிக்க ஒரு காளையின் மீதமர்ந்து
இப்போது வேகமாய் நான்
ஊர் திரும்பிக் கொண்டிருக்கிறேன்.

தோளில் நான் சுமக்கும்
நறுமணம் மிகுந்த கரந்தை மாலைகள்
மாட்டின் மடிகளைப் போல்
ஆடிக் குலுங்குகின்றன.



(போரில் அம்பு பட்டு இறந்து நடுகல்லாய் மாறிப்போன தலைவனை நினைத்துப் புறநானூற்றுப் புலவர் ஆவூர் மூலங்கிழார் பாடிய பாடலையொட்டி எழுதிய கவிதை).

Registered with Registrar of Newspapers for India No. 42582/83
Licensed to post without Pre-payment under Regn. No. TN/WR/CBE/016/WPP/2018-20

Date of Publication 28.11.2018

Regd.No.CB/016/2018-20

OM SAKTHI - DECEMBER - 2018